

ஓம்;

உ

திருச்சிற்றம்பலம்.

வெற்றிவேலுற்றதுணை.

# யவனகாவியம்.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகர்துதி.

### கலிவிருத்தம்.

புவனமூன்றும் புகழ்பதினெண்மரின்
யவனகாவிய மின்றமிழாற்சொல
உவணனுநிய ருந்தொழுமைங்கரத்
தவனைவாழ்த்தி யடியிணைபோற்றுவாம்.




சைவசமயிகள் யாதொரு காரியஞ் செய்யத்தொடங்குகையில் அவைமுட்டின்றி முடிதற்பொருட்டு விநாயகரை வணங்குதல் மரபாதலின் கடவுள் வணக்கம் முதலிற் கூறினார் இக்கவியில் யாம் என்னும் எழுவாயெஞ்சி நின்றது உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாக போற்றுவாம் என்றது.

சிவபெருமான்

## எண்சீரடியாசிரியவிருத்தம்

இருளாகிவெளியாகிப்பலபூதங்க
ளியல்பாகியெண்ணிறந்தவுலகமாகி
மருளாகியுணர்வாகியண்டமாகி
வாக்குமனக்கெட்டாதவடிவமாகி
பொருளாகிப்புலனாகி யிமையோராகி
புலிமுனியும்பணிமுனியும்போற்றவுண்மை
யுருவாகியம்பலத்துணடித்துநின்ற
வொருமுதலைப்பணிந்துவினையொழித்து வாழ்வாம். (௧)

சிவசத்தி

## கொச்சகக்கலிப்பா

பவமான வினைபவித்துப் பழவினையின்றொடக்கறுத்து
நவமான தனிப்போத ஞானநிலையெமக்கருளி
தவமான நெறியுணர்த்துந் தத்துவாதீதமய
சிவகாம சவுந்தரியின் றிருவடியைப்பரவுதுமே. (௨)

சுப்பிரமண்ணியர்

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருதவரையிலவசுரக் கடலோடு மெழுகடலுங்
கலங்கவேலைப்

உ

வெற்றிவேலுற்றதுணை

ஜோதிஷ

# யவனகாவியம்.



இஃது

கோயமுத்தூர் தாலூக்கா

வடவள்ளி சோதிட சித்தாந்த வல்லவராகிய

வித்வான்


மு. அருணாசலக் கவிராயரவர்களால்.


இயற்றப்பெற்று

பல்லடம் தாலூக்கா அனுப்பபாளையம் நஷ்ட சாதக

வல்லவரும் பாலஜோதிட பண்டிதபானு

என்னும் பட்டம் பெற்ற

ஸ்ரீமத், முருகைய ஜோதிடர் அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு


கோயமுத்தூர்

சி. கு. நாராயணசாமி முதலியாரால்,

சென்னை

சச்சிதானந்த அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றது.

1916





விலை அணா - 8]  [காபிரைட் ரிஜிஸ்டர்




## நன்றியுரை.

இந்நூலை விரைவில் அச்சிட்டு முடிக்குமாறு தமிழபிமானமும் பிரபுத்வமுஞ் சிறந்த சில ஸ்ரீமான்கள் மனமுவந்தருளிய பொருட் கொடைக்கு என்றும் மறவா நன்றிசெலுத்தக் கடமைப்பட்டுளோம்.

10—5—15.
வடவழி.

இங்ஙனம்:
இந்நூலாசிரியன்.

# முகவுரை.

அகண்டாகார வியாபியாகிய சிவபெருமானது பஞ்ச முகத்தினும் அபர சுருதியாகிய வேதங்களும், பரசுருதியாகிய ஆகௌகப் பிரகாரம் பிரதிசம்ஹிதாப் பிரகாரமெனவுங் கூறப்படும். காமிகாதி ஆகமங்களுமுண்டாயின. அவ்வேதம் நான்கினுள் உக்தை முதலிய சந்த பேதங்கட்கு அக்ஷரசங்கியைச் சந்தமும், போதாயநீயம், பாரத்துவாசம், ஆபத்தம்பம், ஆத்திரையமாதிய சூத்திர விகற்பத்தால் கர்மத்தைப் பிரயோகிக்கு முறையைக் கற்பமும், வைதிகச் சொல்லாராய்ச்சியை நிருத்தமும், உச்சாரண விலக்கணத்தைச் சிக்ஷையும், பதலக்ஷணத்தை வியாகரணமும், லக்கினம் திதி வாரம் நாள் கரணம் யோகம் கோணிலைமை இவைகளால் தேவர் மனுஷிய திரியக்யோனி பேதங்கட்கும், வாழ்நாட்கிலக்காய் வைதிக லௌகிகட்குரிய முக்கால நியதிகளை யுணர்த்துவதுமான சோதிடம் என ஆறங்கங்களும் பிறந்தன. இவை முறையே வேதபுருடனுக்கு கால்கள், கைகள், செவிகள், நாசியும், முகமும், கண்களுமாய் நின்றன.

## பிரமாணம்,

"எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும்" "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங் கண்ணென்ப வாழு முயிர்க்கு".

எனத் தமக்கையும், இளைஞரும் கூறிய திருவாக்காகிய இருவாக்கானு முணர்க. இங்ஙனம் ஆறங்கத்தினும் கண்ணாக விளங்கிய மாதிடமாகிய சோதிட நூலைப் பதினெண் சித்தர்களானும், 450000 சுலோக பூர்வமாக [illegible] மரில் இக்கிரந்தாசிரியராகிய யவனமுனிவர்,

சந்திரவம்சத்தில் நகுஷன் குமாரரி லொருவனாகிய யயாதி யென்பவன். சுக்கிரன் மகள் தேவயானையை மணந்து பின் விடபன்மன்மகள் சன்மிட்டையைக் கூடி மூவரைப் பெற்றான். அரசன் தன்புதல்வி மாட்டன்பிலாமையை யுணர்ந்த சுக்கிரனால் மூப்படையப் பெற்று மூத்தாள் குமரர் இருவரால் அம்மூப்பை யொழித்து இளமைப் பருவத்தைத் தால்வேண்டுமென அவர்களதனை மறுத்தலிற் கிராதர்களாகச் சபித்து இளையாள் புத்திரர் மூவரின் முன்னோனான பூருவுக்கு மூப்பைக் கொடுத்து இளைஞரை யிழிதொழி லியற்று மிலேச்சராகவுஞ் சபிப்ப அவருள், துர்வசுவென்பவன் யவனதேசத்தியைந்து வாழ்க்கையில் ஓராண்மகவுதித்து யவனனெனப் பெயர் பூண்டு ஆருகதசமயத்தனுய்ச் சின்னாட்கழித்து அருந்ததிக்குத்தந்தையும் அநசூயைக்கு நாயகனுமான அத்திரி முனிவரிடத்து விஷ்ணுவாம்சையிற் பிறந்து இருக்கு வேதத்தின்ஐந்தாவது கண்டத்தின் அதிகாரியுமான தத்தாத்திரேயரால் தம் மரபுக்குற்ற சாப வரலாறுணர்ந்து பேரறிவடைந்து இர்தார்த்தனாகி அகத்தியரா லநுக்கிரகிக்கப்பெற்று இக்காவிய சோதிட கிரந்தத்தை வகுத்தருளினர். இதனைப் பாரதம் குருகுலச் சருக்கத்தினும், சிந்தாமணியினுங் காண்க. இவரா லுரைத்த கிரந்தமானது பழமையான ஏட்டுப் பிரதிகளிற் பொதிந்திருத்தலைக் கணிதவல்லவரான ஸ்ரீமாந். கோவைத் திருவேங்கடரமணசுவாமிகளென்னும் நமதாசிரியரால் அக்காவியத்திற் பிரதம பாகத்தைத் தமது கரலிகிதமா யுரை வரைந்து நீவிர்லோகோபகாரமாய்த் தமிழ்ப்பாவாற்பாடி முடிக்கவேண்டுமென எமக்கநுக்கிரகித்தனர்.

மற்றை முனிவரா லுணர்த்தும் கிரந்தாந்தரங்களிலிருந்து தமிழ்க்காவியமாக உள்ளமுடையான், சிநேந்திரம், சர்வார்த்த சிந்தாமணி யாதியவெண்ணிறந்த புராதன நூல்கள் இக்காலத்துளவாயினும் சிலர்க்குப் பல ...... மூட்டிய குரீப்போன் மயங்கிக் கிடந்திடநாஅண்ணாம் இரி

Arumugam's Journey

கால நியதியையும் அற்புதமாகத் திரட்டி அயனெ ழுத்து மவன்றலையெழுத்தையுந் தெள்ளிதினுணர்த்தி பிறவி பிணி சாக்காடாய அவலக்கையாற்றினீங்கி யுய்த் தலை நிறீஇனமையிற் சோதிடமே திடமாமெனவும் பிற நூலெலத்துணையவாயினு மிவைபோன்றொருதலைப் படக் கூறுதெனவும், உலகத்தாரானுஞ் சமையத்தா ரானுமொருங்கே புகழப்படுதலானும், ஈண்டாசிரியர் சொல்லையும் ஆன்றோர் வேண்டற்கியைந்தும், செயப் படு பொருட்கு ஓர் வினை முதல் வேண்டுமாறெனச் சுருதியுத்தி அனுபவமாய மூவிழிகளானுமாய்ந்து என் னறிவி னளவிற் சொன்னயம், பொருணயம் இசை நுணுக்கமு மமைத்துப் பற்பல விருத்தப்பாக்களானும் சந்தவண்ணச் சிந்துக்களானும் சோதிடவான்கட்கன்றி யேனையோர்கட்கும் கர்ணாமுத கருநூலமாயும் பாயிர முதற் றுவாதசபாவக மீறாக (315) செய்யுட்களாற் பாடிமுடித்து முதநூற் காரணத்தாலிந்நூற்கு யவன காவியமெனப் பெயரிட்டு வெளியிட்டேம்.

யாம்பாடி முடித்தற்கு அருகனெனத் தெரிந் தும் ஒல்காப் பெரும்பொருட் டொல்காப்பியத்தினுங் குறை சொலப்புகவல்லுநர் உளரென வுணர்ந்தும் வெட்காது; எங்ஙனமாயினு மிதனைக்கூறி முடிப்பா மென்றுண்டாகிய வெம்மருத்தியானது அந்நாணத்தை தோற்கவைத்ததன்றி யாமாகவொன்றுஞ் செய்திலேம். நாணந்தோற்றது ஆசைவென்றதென்னும் பழமொழிக் கிலக்கியமாய் நின்றன. இம்முயற்சியிற் சிறியேனைப் புகுத்தி யிந்நூலுலகின்கணின்று நிலவுதல் குறித்து நிறைவேற்றி யருளிய வெம்பெருமானது திருவருளை யும் குருவருளையும் வியந்து எக்காலத்தும் சிந்தித்து வந்திக்கக் கடவேம்.

இங்ஙனம்,

சோதிட சித்தாந்த வல்லவராகிய வித்வான்

அருணாசலக் கவிராயர்

## சாற்றுகவிகள்.

ம-ா-ா-ஸ்ரீ ச. திருச்சிற்றம்பலம் பிள்ளை
அவர்கள் மாணாக்கர் கோயமுத்தூர்
C. K. சுப்பிரமணிய முதலியார் B. A.
அவர்களாலியற்றிய

அறுசீரடி ஆசிரிய விருத்தம்.

சீராருஞ் சதுமறையா றங்கமதி னயன மெனத்
திகழுமென்மை
ஏராருஞ் சோதிடமாக் கடல்கடைந்தே யெண்கணித
வியல்பு கூறி
நீராருஞ் சலதிதிரு முலகுய்ய நூல்பலவு
நிகழச் சொன்னார்
பாராரும் யவனர் முதற் பதினெண்மர் சித்தரெனப்
பகர்வர் சான்றோர். (1)

அத்தகைய சோதிடநூற் சிறப்பெல்லாந் தனதகத்தே
யமைத்த தோடும்
வித்தகமாய் விளங்கவரு திரிகாலப் பலனுரைக்கு
மேன்மை வாய்ந்த
மெய்த்தகைமை பெறும்யவன காவியமென் றொருதனி
வெளியிட்டாங்கே [நூல்
இத்தனையும் வடமொழியிற் கண்டதுபோற் றகுமுலக
மெய்தவேண்டி (2)

பிரமன்றன் றலையெழுத்துங் காணுதற்கோ ராடியெனப்
பேசுமும்மை
விரவுபய னுந்தெருட்டும் வியன்றீப மிதுவெனவே
விளம்ப மேலோர்
தரவிசைக்குந் தமிழ்ச்சந்தப் பாவகத்தாற் றந்தளித்தான்
றரணி மீதிற்
பரவுபுகழ் வடவழிவாழ் தருமருணாசலக்கவிஞன்
பண்பான் மாதோ (3)

K. R. Arunagola Gounder

K. R. Arunagola Gounder

ஸ்ரீமத் முருகதாச சுவாமிகளென்றும், திருப்புகழ்ச்
சுவாமிகளென்றும் வழங்கும் வண்ணச்சரபம்
தண்டபாணி சுவாமிகள் குமாரர்
விழுப்புரம் தாலூக்கா திருவாமாத்தூர்
தி. மு. செந்திணுபகம் பிள்ளை அவர்களால்
இயற்றியது.

சீர்மலியுங் கொங்குவள நாட்டி னூடே
திகழும்வட வழிப்பதியிற் சிறந்து வாழ்வோ
னேர்மலியும் புகழருணு சலப்பேர் நல்லோ
னியம்புதிகழ் கவிராய னினிய வாறே
நார்மலியும் யவன காவிய மென்பேரா
நவில்வட நூலினைத் தமிழா னவின்றுதந்தான்
பார்மதி சோதிடக்கடலி னமுதீ தென்னப்
பரிந்து கைக்கொண்டு வப்படைவார் பாவல்லோரே.

---

பல்லடம் தாலூக்கா அனுப்பபாளையம்
நஷ்டசாதக வல்லவரும் பாலசோதிட பண்டிதபானு
என்னும் பட்டம் பெற்றவரும்
இந்நூற் பரிசோதகரும் ஆகிய
ஸ்ரீலஸ்ரீ R. முருகைய சோதிடர் அவர்களால்
இயற்றியது.

காக்குமுறை மாற்கெனுங் கன்னியம் பிறர்சொலக்
கண்டவா றிம்ப ரெவருங்
கடிதுறுய ரகலமுன் காண்பித்த வழியெனக்
கானரச மான சிந்துப்
பாக்களில னந்தவகை பாலித்து விவரமாய்ப்
பலனெலா நல மாதிரி
பலநூற்க ளினுமுள்ள சாரமா தாரமாய்ப்
பற்றியு ளெவற்றைக் கவு

சூக்குமம தாய்ப்புகல யார்க்குவரு மென்றுபல
சுகுணர் கொண்டாடி வாழ்த்தச்
சுவனசோதிட ராஜ யவனகாவிய மெனச்
சொற்றனன் மற்றிவன்றான்
மாக்கமல வயல்சூழும் வடவழிப் பதியுற்ற
மாணிக்க மான மன்னன்
மாசில் விசுவாச னருணாசல கவிசனெனு
மாதமிழ் வசீக ரனரோ. (1)

வேறு.

விண்ணாடி விளங்குசுரர் கண்டறியா ரகசியமும்
விரித்துக் காட்டுங்
கண்ணாடி யெனயவன காவிய சோதிடநூலைக்
கற்பித் தானல்
மண்ணாடிப் புகழ்பெறூர் வடவழியான் கவிஞர்துதி
மடங்க லன்னான்
உண்ணாடில் ஞானியருணாசலசு பாதிலக
னொளிர் கோமானே. (2)

---

உடுமலைச் சரபம் - முத்துசாமி கவிராயர் அவர்கள்
ஆசுத்திறத் துரைத்த
சாத்துகவி.
அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

வெண்பொ னென்றுங்கரும்பொனென் றும்வெள்ளிதனை
யிரும்புதனை விளம்பினாலு
மொண்பொ னென்ற வாடகம்போன் றுரைக்கற்பாற்
றேபொருட்சொ லொப்பலாமோ
பெண்பொன் வளர் வடவழிவாழ் பேரருணா
சலக்கவிப் பிரதாபாநீரும்
பண்பொன்று முதுயவன காவிய சோதிடம்
பொலியப் பகர்ந்திட்டீரே. (1)

கட்டளைக் கலித்துறை.

கோளஞ்சிந்தா மணியலங்காரங் கிளத்துகின்ற
கூரருள் சேருங் குமாரசுவாமியக் கோனிலைமைச்
சீரணியுள்ள முடையான் மற்றியாவுந் திகழ்பவனர்
பாரதிச்சோதிட முன்வைக்கிற் பானுமுன் பன்மின்ன
[தே. (2)

---

புரவிபாளையம் ஜமீன் சமஸ்தானம்
ஜெகமண்டலாதிபதி கோப்பண மன்றாடியார்
அவர்கள் பத்தினியார்
துளசியம்மாள் அவர்களா லியற்றியது.

திடசுருதி புகல்தரு சோதிடயவன சாஸ்திரத்தைத்
தென்சொற் பாவாற்
கடலவனி யோர்களுமுய் காலபல னோர்ந்துய்வான்
கருதிச் சொன்னான்
குடவளையின் மணியெறிந்து கடைசியர்கள் மடைதூர்ப்
குளிருஞ் செய்யார் [பக்
வடவழிவாழ் தருமருணா சலக்கவிஞ னிவர்க்குநிகர்
வல்லோர் யாரே.

---

புரவிபாளையம் ஜமீன் சமஸ்தான வித்வான்
பொள்ளாச்சி முத்துச்சாமிக் கவிராயர்
அவர்களா லியற்றிய
வண்ணச் சந்தப்பா.

அலைசேர்நதி மதிமுடி வேணியர்
அடன்மான்மழு வொடுதிகழ் பாணியர்
அடியாருளம் வகைதரு காணிய ருள்வேத
நிலைசோதிட முறையுணர் மாமுனி

நிகழ்காவிய மெனவரு நூலிஃ தரிதாகுங்
கல்வாரியி னிடைபடி யாதுகர்
புயலேயிவ னெனவரு நாவலர்
கனிவாரிசை பலகொடு மாதமிழ் மொழிபாலே
மலேநாடதின் வடநெறி மேவிய
அருணசல கவிவல னேதிய
வழிநூலிது மிகவமு தாமுணர் டடமாதே

---

ம-ா-ா-ஸ்ரீ, இந்நூலாசிரியர் மாணாக்கரும்
உன்னியூர் மருதநாயக முதலியார் குமாரருமாகிய
சபாபதி முதலியார் அவர்களா லியற்றியது.

மின்னவிருஞ் செம்பொன் மணிமாடக் கூடன்
மேயசிவன் யாமெழுதி விடுக்குமாற்ற
மென்னவொரு பாசுரமொன் றெழுதிக் காட்டு
மிறைவனருட் பெறுமாறு பாணனுர்க்கு
பொன்னவிரு மணிக்கலன் களிதியு நல்கும்
புகழினன னற்குலத்திற் பொலிந்த சீர்த்தி
மன்னவிருஞ் சுடர்முடியா னரசு வாய்ந்த
வண்மைதரு கொங்கென்ன வயங்கு நாட்டின். (1)
இலம்பகத்தி னலம்படைத்த நுதல்வேற் கண்ணு
ரின்சாயற் கெதிராகோ மெனநின் றேங்கி
சிலம்பகத்தி னிடஞ்சலித் துப்புகுதுந் தோகை
செயல்படைத்த வளமுடைத்த செல்வ நல்குங்
கலம்பகத்தி னயம்படைத்த தமி ழாராய்ச்சிக்
கவிஞர்தமக் குறைவிடமாங் கழக மாகி
யலம்பகத்தி னலுந்தவிர்க்குந் தமிழ்ச் சங்கத்தி
[illegible] (2)

நவசுப்பிர நிபமென வியங்கிரா று
   நாட்டமரு ஞுட்டுபுகழ் நாட்டவல்ல
உவசுப்பிர மணியகுல திலகனுக
   வோ தமுத்துக் கவிப்புலவ னுதவும்வண்மைச்
சிவசுப்பிர மணியரருட் பிரசாதத்தாற்
   செனித்தறிய விலக்கணமு மிலக்யநாலுந்
தவசுப்பிர முணியமெனக் கணிதமாதி
   சகலகலைக் கடலினையுந் தாண்டவல்லோன். (3)

இன்னூற்கு முன்னமறு முகத்தேதமீது
   யேற்றபிள்ளைப் பிரபந்த முதலதாகும்
பன்னூற்கை விரித்தவரின் னருண்மேற்கொண்ட
   பாவலனு நாவலனும் பரிவினேடு
மென்னூற்கு முரைவிரிக்க வலனுமாக
   வியைந்துபொறை யறிவடக்க மிக்கோனென்னச்
சொன்னூற்குங் கவிஞரெலாம் புகழுமாறு
   தோன்றருணு சலக்கவிஞன் சுருதியாய்ந்தே. (4)

எண்ணகன்ற முனிவரரி லீரொன்பானே
   ரிசைத்திடுஞ் சோதிடக்கடலின் மாண்பிதென்னக்
கண்ணிறைந்த யவனர் வடமொழியிற்கூறுங்
   காவியத்தைத் தென்மொழியிற் கனிந்தவண்ணப்
பண்ணிறைந்த சாதுரியம் பலவுஞ்சேர்த்துப்
   பகர்ந்தறிஞ ரிதயமெனும் பைம்பொற்குன்றிற்
றண்ணிறைந்த கவிமாரி சொரிந்தான்சேடன்
   றன்னாலு மதன்பெருமை சாற்றலாமோ. (5)

இப்பெரிய காவியத்தி னிலங்கநற்பா
   யிரம்பொதுப் பாவகமு மிலக்கினமுமாதி
செப்பரிய துவாதசபாவக மட்டாய்ந்து
   செம்பொருளாய் முறைபிறழா தின்ஞாலத்தி

னுப்பரிய வகங்கைநெல்லிக் கனியதாக
வுசிதமுறப் பிறநூலையோ ராவண்ணம்
வைப்பரிய நிதியெனவே முக்காலத்தின்
வரும்பலவை யொருங்குணரும் வகையாயோர்ந்து.

பன்னூலும் பலகாலும் பயின்றுமெய்தாப்
பலனனைத்து முயிர்த்தொகைக ளெளிதினெய்த
வின்றாலி னுளதாக்கி யெவர்க்குமெய்தா
வின்பமினி தெய்தவிவை யெய்தாவண்ணம்
முன்னூ லாசிரியரது கருத்துக்கேற்ப
முதனூற் காரணப்பெயரே முழுதுநாட்டி
யென்னூ லிதற்கொவ்வா தெனநின்றோங்க
யவனகாவிய மெனும் பேரிசைத்திட்டானே. (7)

---

சேலம், குகை, ஜவுளி வர்த்தகரும்,
மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் அங்கத்தவரும்,
தமிழ் வித்வானும், தமிழ்நாவலர் சரிதையின் பரிசோதகருமான
ஸ்ரீமான் மே. பெ. சாமிதில்லை நடேச செட்டியார்
அவர்களால் பாடியது.

இடமுறு சித்தர் திருவருள் பெருகிச்
செப்பிய யவன காவிய மாம்
வடமொழி நூலைத் தமிழினிற் சிந்துவண்ணமாய்
வகுத்திசை வாய்ந்தான்
குடமுறு கொங்கு நாட்டினி லுபர்செங்
குந்தர்தங்குலம்வரு கொண்டல்
வடவழி யருணாசலக் கவிராயன்
மகிதலம் புகழும் நாவலனே.








பாருதவிடுமொருமுதல்வன் மறைப்பொருளை
புணர்த்தவலன் பொலிந்தகிதந்
ருதமரமுழுங்கடப்ப மலர்மார்புமுகமாறுஞ்
சகைத்தாளும்
ருதயமென்மலர்புகுத்தி விரைந்தேகத்துயர்க்...
யிசைத்துவாழ்வாம். (...)

## பாயிரம்

## மருதாசலக்கடவுள்

### வண்ணக்குழிப்பு

...னனத்தனனதந்த தனனத்தனனதந்த
தனனத்தனனதந்த தானன தன
தனனத்தனனதந்த தானன தன
...ன தானன தானதானன தானதானன தானதானன
தனனத்தனனதந்த தானன தன
தனனத்தனனதந்த தானன

...னகற்கினியரென்ற முனிவர்க்குளுயர்கின்ற
யவுனர்த்தருகிரந்த சாகையே தமிழ்க்
கவியிற்சொலநிறைந்த பாகையே நிலை
...கவேகனி வாகவேயிசை யாகவேபல பாவினேசையி
லறையக்கருணைதந்த நீதனே சது
மறையிற்புகழுங்கந்த நாதனே
...னநட்பொடுபகர்ந்த பனுவற்புனையவந்து
முகமொப்பறவிளங்கும் வாகனே குற
மகளைப்புணருகின்ற மோகனே அன்று
...குணவ ராகமாளவு மேவையேவிய தேவதேவனும்

முதலிற்பரவுகின்ற சாமியை மலர்
விதியைச்சிறைகொளந்தர் யாமியை

வனசக்குவளை கக்கும் மடுவிற்குறவுறங்கும்
மருதக்கிரியுவந்த வேலனை அன்பர்
கருதிப்பணியுமெங்கள் சீலனை எதிர்
வாதுபாகிமுன் னேற்றமீதொரு சூதமாகிய பாதகாரனை
மடியப்பொருதுவென்ற கோபனை சேவற்
கொடியைக்கரமிசைத்த பூபனை

இசைமுற்றளியடர்ந்து வனமூற்றிடுகடம்பி
னிணரைப்புயமணிந்த நேயனை முன்னம்
வளிகக்குமரனென்ற சேயனை என்றும்
ஏதுவாமிரு போதினோடொரு போதமேமற வாதுமோதுத்
விதயத்துளதவன்றன் பாதமே பர
கதியைத்தருவதிக்கப் போதமே. (௪)

---

(௪) இந்நூலாசிரியரால் பத்திமையோடு முற்கூறப்படும் பிள்ளைக்க விப்பிரபந்தமும் சுகானந்தலகிரி சத்திருச்சங்காரவகுப்பு பதிகமுதலி யபாமாலைகளைப்புனைந்து அநுக்கிரகம்பெற்று வழிவழிமுறையேவழி படுதேவனாகிய மருதாசலக்கடவுளாதலானும் அம் முருகக்கடவுளைச் சிந்திக்குந்தோறுமுண்டாகிய அவ்வானந்த மேலீட்டினாலிவ்வண்ண ப்பாவில் முனைப்பொடுபெயர்ந்த பலவற்புனையவந்து முகமொப்ப றவிளங்கும்வாகனை எனவியந்துகூறலாயிற்று.

நாமகள்.

## அறுசீரடி யாசிரியவிருத்தம்.

பாவுறுங்கலைகளியாவும-பயனுறவிளங்கி நின்று
தாவிதழ்க்கமல மேவுந்தண்ணளி சுரந்துமுன்னே
யாவையும் படைக்கவல்ல-வயன்றனக்குரியளாயென்
னுவிருந்துலவுவாணி நகைமலர்க்கழல்கள் போற்றி. (௫)

நால்வர்.

## கொச்சகக்கலிப்பா.

அத்தனருளாலம்மையி-னருட்பாலையுண்டோனைப்
புத்த விருளுடைந்தோடப்-பொலிசி[illegible]
பித்தனெனப்பதிக முதற்-பெயர்த்[illegible]
சத்தியபாதமுந்தினைத்த-தலைவனையும் வணங்குதுமால். (௬)

வாழ்த்து.

## கலி விருத்தம்.

வாழ்கவந்தணர்- வாழ்கநல்வேள்விகள்
வாழ்கபைம்புயல்- வாழ்கமனுநெறி
வாழ்கமன்னரும்- வாழ்கவுலகமும்
வாழ்க வாழ்கநல்- வைதிகசைவமே. (௭)

நூல் வரலாறு

## அறுசீரடியாசிரிய விருத்தம்.

மதிப்பரிய பல புவனத்திருதிணையாமுயிர்க்குவரு
வனவொருங்கே
விதிக்கவல் சோதிட நூலாதிசிவனறுமுகற்கு
விளம்பத்தென்காற்
பொதிக்குவட்டு முனிவரனுக்கவனுரைத்தவன்றனிற்
போதக்கற்ற
கதிக்குரிய முனிவரரீ ரொன்பதின்மரவர் பெயருங்
கழறுவாமே. (௮)

யவுனரருந்ததிகேள்வர்பராசருரோமச முனிவ
ரினர்வியாதர்
சவுனகர்காசிபர்புகரும் நாரதரத்திரிபுருருச்
சருமரீசர்
சவனர்மனுப்போதகருங் கற்கரங்கிராமரெனச்
சாற்றலானோர்
மவுனமுறவாக்கியநா லெண்ணிறந்ததாமதனை
வரையலாமோ. (௧௦)

வேறு

[illegible]ாவக் குலின்று மேம்படியவுனர்கூறு
மதநகுமுதனூறன்னை யருந்துணையாகவோர்ந்து
சித்திரவாடிமுன்னந் திருமுகங்காண்பர்போன்று
மித்தமிழ்மொழியாலியானு மெடுத்தினிதியம்புவேனே. (௰)



அவையடக்கம்

எண்சீரடியாசிரிய விருத்தம்

நாலிலக்கத் தைப்பதினு யிரத்தொகையின் முனிவர்
நவின்றிடுசாதகக்கடலி னறுந்துளியொன்றேற்று
மாலிலக்கா யுளஞால மிசைவழங்கல் போன்று
வகையாயின் னூற்பொருளை வகுத்தனமிங்கிவற்றை
சீலமிகுத் திடுகுலனும் புகழ்பொறுமை வாய்மை
தெய்வவுபாசனையறிவு கல்வியருட்பமுளர்க்கு
மேலிலக்காய் விளங்குமென வறிஞர்குறையகற்றி
மெய்ப்பொருளைப்பற்றுவரென் றிதனைவிளப்பினதே. (௧௧)

இதுவுமது

கலி விருத்தம்

மேருவுண் டணுவுமுண் டொன்றிமேவுமுந்
நீருமுண் டொண்குள நீருண் டென்னவே
சீருலசோதிடத் திறமையோர்க்குமுன்
பாருளணியாளெனிற் பகர்வதெங்ஙனமே. (கஉ)

நூலாசிரியர் பெயர்

அறுசீரடியாசிரிய விருத்தம்

கொங்குவளநன் னாட்டிற்றிலகமென வடவெளியிற்
குலவுமேலோன்
செங்கடபின்மலர்த்தாரான் குமரேசற்கதாசகுல
தீபன்செஞ்சொ
லங்கணித நிலையுமிலக்கண விலக்கியமென் றாலு
மொருங்குதேர்ந்தோ
னிங்கருணாசலக்கவிஞன் யவுனகாவியமெனு
லியம்பினனே. (க

பாயிரம் முற்றும்.



# பொதுப்பாவகம்

## துவாதசபலன்

## எண்சீரடியாசிரியவிருத்தம்

முதலோரை கல்வியமா முடிமெய்யென் றிலக்கினத்தை
முன்னோர்பரியாயப்பெய ரிட்டாரவைகற்றோ
ருதரந்தனமருளின்செய லுயிர்தேககசந்தோடம்
முறுசன்மக்லேசமுத லெதிர்சன்மமோடாயுள்
நமிந்தனையர்வந்தனு வணியுந்தகையன்றி
தகவுப்புகழுலகின்க ணெடுத்தோதுவர்தக்கோர்
யதமெய்ஞ்ஞிமொழிந்தம னியகுணமுமிரதி
மதனன்முடி நிகரும்படி வளருந்தனமானே. (க)

மானந்தனமணவும்புரு வமுநெற்றிபன்னுசி
வலக்கண்மீனுநி முகம்வர்க்குடனெளிர்பாத்திரபண்டம்
தானல்லனதானங்கலை சனரட்சகமிரண்டாந்
தானப்பெயர்மொழிவார்கனி தானத்துடனுணர்வாய்
நானுவிதகதைகேள்விகுடும்பம்புகல்வாக்கு
நவரத்னமணியும்பொரு ளுத்தேசமுங்கமல
மீனேரியவிழியாயலீ மீதறியவுலக
மீதேதவனுமேதபல னேதேமுறையிதே. (உ)

தேசொன்றியகதைகேள்வியும் பின்சோதரம்வலது
செவிவிக்கிரமதானம்மெனு மூன்றாமிடமதனாற்
காவிசான்றியகன்னப்பணி செவிநோயிசைதினைவர்
காணுந்தனக்கடிமைத்திர மொன்றுங்கலனுறி
பேசும்பலனிதுவேயுறை பிரசங்கணிறைந்து
பிவிதும்பலகனிலன்மிக வொருகோடியிசைந்து

வாசந்திகழிரவுங்கரு டணைனுங்குடிகொண்டு
வளருங்குழன்மொழியுஞ்சுகமெனுமந்தளிரியலே. (௩)
இயல்வாகனசுகயோடக மெழின்மாதுருமித்துரு
யியலுருந்தழுவணைகன் றுவ தைத்தாளெனுந்தானப்
பெயராய்வருநாலாமிடங் கொண்டேசௌக்கியமும்
பெற்றுரையுமுற்றுரையும் நிட்சேபமுமற்றும்
அயலாரனுபோகங்களு மென்னுங்கலைவிதியும
அனபானவியாபாரமு மாவின்கறவைகளுங்
கா[illegible]
[illegible] (௪)
றுவலன்பிருதயமார்பிர புத்தானமுமாக
நுட்பம்புகலைநந்தாயிட மதனைற்பிதர்மாமன்
புஷ்மீதுமந்திரகற்பமு மிகுபூர்வபுண்ணியமும்
புதல்வோர்தமிழ்வாணர்ப்பிர பந்தம்புகன்றிடுதல்
தவமுந்தியசனனம்மதி தன்மாதுலவர்க்கம
தாய்வர்க்கமிதானம்பெறு தன்புத்திரிவர்க்கம்
இவர்சங்கைகளினிதோதுவ ரிதுவேவிதியாக
என்நூலினுநன்னுவர்சொன்னரிதுமுறையே. (௫)
முறையற்றிடுசோரங்கடன் விரணம்பசிவயிறு
முன்சத்துருரோகம்மிரு மூன்றாமிடமதனு
லறையப்படு நோயுட்பகை தாயாதிவழக்கும்
அங்கத்துளபுண்வாதையு மதிகங்கடனுதல்
கறையுற்றிடுகருவித்துய ரமருக்கெழுகள்வர்
கண்ணோசெவியாங்கட்செவி யாலேபுனலாலே
நிறையுற்றிடுமடமங்கைய ராலேயனலாலே
நிருபன்சிறையாலே துயர்வருமென்றிடலாமே

ஆமோதவைங்கணேமன்மத னன்பெண்ணிவர்கூடி
யணையுங்களத்திரத்தானமென் றேழாமிடமாகுங்
காமாயுதமட-வாரிளங் குமரற்குறுமின்பங்
கலவித்தொழிலிடைகட்பினர் குழூவோடுசென்மானந்
தாயேபிரவாளத்தொழில் சுகபோகமுமேயின்
ஞரம்பிறந்தாருக்குவி ரோதம்வியாபாரஞ்
சேமாதியமனைமும்புணர் இசையும்பலனேதுஞ்
சேலுந்தியவிழியும்பிறை போலுந்நுதலாளே. (எ)

ஆருக்ஷவிமானந்துயில் வதைரந்திரமாயுள
அவகீர்த்தியபானந்துயர் மரணம்விவகாரம்
நீளத்தருகத்தாமெனு மெட்டாமிடமதனு
னெடுநோய்தனவிரையங்கலி தருமாயுதபீடை
வாளுற்றிடுபோரிற்பொறை யேறிப்படிவீழ்தல்
வருவிக்கினநட்டம்பகை யச்சங்களரிட்டம்
மாளத்தருபலனேதுவர் முன்சோதிடவிதியை
வரதன்குறுமுனிவற்கிவை வகுத்தோதியவகையே. (அ)

வகையாலியதருமம்பிதுர் குருபாக்கியந்தபசு
வரனர்ச்சனைசகனத்தவ மிவையொன்பதினுலே
மிகுபாக்கியமகமும்பயிர் விளைபுண்ணியவினையும்
மேலோருபதேசந்தரு கூபம்பொழினீருந்
தருகாவனமடமுந்திரு மாலின்பணிசேவை
தன்றந்தையர்பொருளுந்திற னறிவும்மகம்யாவுஞ்
செகமீதினினெண்பாவல ரன்பான்மிகுநண்பாற்
செப்புந்திருமகளுந்தொழ நிற்குங்குணமின்னே. (கூ)

---

மோதம்-மிகுமணம், பிரவாளத்தொழில்-பவளவியாபாரம்,

மின்னுமுன்ன தயாத்திரை செய்யுந்தொழிலிடக்கை
　　வெகுமானமுந்துடைத்தானமென்றிடுவாரொருபலனை
மன்னும்புவியாள்கைநதல நிருமித்திடுஞானம்
　　மாபூசனைமனையுபிதுர் பவதெய்வதபக்தி
முன்னும்பலனையப்பிடச் செவிமூத்தவர்முழுங்கான்
　　முதுதானமதாகுர்பதி னொன்றாமிடங்கொண்டே
பன்னுள்வருபிரயோசனங் கரிதண்டிகைபரிமா
　　வருள்சீவனகருமங்களை முறைபேபுகல்வதுவே.　　(ம)

வதிபாத[illegible]க்கானமென்றுரைக்க
　　வ[illegible]
விதிநித்திரையடைவிறமெபறு வ[illegible]
　　மேலோகசவுக்கியம் பரதேசம்புகல்போகம்
அதிரேகமும் பொருட்சேதமு மனையுஞ்சயனமுமா
　　லபவிர்த்தியுமாமே மகமருளாகியவிர்த்தி
தியோடிதுபலனேதவர் நிலமீதினிலான்றோர்
　　நிலவேறியநகையாய் மதுமலர்மேவியகுழலே.　　(கக)

(நட்புபகைசமம்)

## வேறு

சூரியனுக்குறவுமதி செவ்வாய்பொன்மூவர்
　　தூதுவன்றன்சம னெழிந்தோர் பகைமதிக்கேயுறவு
நேரிரவிபுதனெனலாமரவுபகைமற்றோர்
　　நிரைசமனுங்குச்ற்குறவிந்திரவி குருமூவர்
காரரவம்புதன்பகை மற்றுள்ளவர்சாமனுக்கு
　　கனலிகவியுறவுமதி பகையிவர்களொழியச்
சேருமவர்சமன்பொன்னுக் குறவுமதிகதிர்சேய்
　　செய்யபுதன் புகரிருவர்பகைபிறருஞ்சமமே.　　(

(12) சந்திரனுக்கு அரவுபகை யெனப்பொதுவாய்க்கூறி யிருத்தலைகரும்பாம்பாகிய ராகுவென்றறிக சிலநூலில் சோமனுக்குப்பகையில்லைசொல்லவுமெக்காலே, எனக்கூறலை ஆன்றோரானுணர்க.

இதுவுமது.

மேயசுகிக்குறவுபுந்தி சனியிருவர்பரிதி
வெண்மதியம் பகையொழிந்தோர் சமமெனலாமிக்க
நோய் முகனுக்குறவிஞன் பார்க்கவனுமாகும்
நுவலுமதி பகலோனும் நிலமகனும் பகையாம்
நேய குரு சமமாகும் பாம்பிருவர்க்குக்கு
மலனசுரேசனுமேயுறவிரண்டு கதிர்சேய்
தூய பகை மற்றுளருஞ் சமமெனவுந்தக்கோர்
சொல்லுமலர்க்கணைமதனை வெல்லுமிளமயிலே. (கங)

ஆட்சி, உச்சம், நீசம்.

ஏரிரவியாதிய கோளிரையரி நண்டாடே
டிரட்டைதனுதலைமானு மாட்சிமை கோசுறவு
காரிகை நண்டறுமீன் கோலளவொருபான்மூன்று
கண்டவிருபானெட்டு மிரண்டுபதினைந்து
சேருமிருபானேழுமிருபது பாகைக்குட்
செறிவதுச்சந்துலைவிருச்சிக மொன்டொருமீனுமானும்
நாரிதகரிதிற்பாகை முன்போனீசம்
நண்ணுவதா மண்ணுலகிற் பெண்ணரசுக்கரசே. (கச)

ராகு கேது நட்பு பகை நீசம்

வேறு

அறுசீரடியாசிரிய விருத்தம்

டுமரவயிருவோருஞ் சாயாக்கிரகமானதினுல்
டுமவருக்கிலதென்றே விதித்தாரெனினுஞ்சிலநூலி
டுமுறையிற்சனிபுகருநட்பாஞ்சமன்பொனபகைபிறரும்
டுமுச்சந்தேனிச மாறுபடுவன்கேதுவரோ. (கரு)

மூலத்திரி கோணம்

ப்போல்சேயோள்குருகவிக்குச்சிங்கமேடந்தனுதலேயும்
... க்கன்னியென
ப்பசனிக்குக்கும்பமெனனதை ...
பவாவுயிரதமெனப் பலிக்குமிதம்பமுடையானே. (கசு)

கிரகசம்பந்தந்தீறுப் பலஹீனம்

அறுசீரடியாசிரிய விருத்தம்

லோனுதியவேழ்கோளோ டிவன்மகன்கவிபொன்வேந்த
லோனும்புதன்சேய்கூடி லவர்களேபலமுந்தாழ்வ
லாருக்கில்லேச்சுற்று மென்றுநான்னுவகப்புநைய
லாருந்தனக்குள்ளேருங்கிமெலிவடம்புனேயுந்தோகாய் (கஎ)

வக்கிரம் அதிவக்கிரம் வக்கிரநிவர்த்தி

க்கமாங்குருசேய்சுன்னுக் கைந்தினிலேழிலொன்பான்
ர்க்கவிந்நிரையேவெய்யோன்றிகழ் தரவக்கிரமாதல்
கொளனிவர்த்தியாதல் விதமறிந்தோதல்வேண்டும்
ர்க்கவேதளிர்த்றும்பர்ராதிமைக்கவே பனிக்குந்தோகாய்.
(கஅ)

---

...) இரவியாதியசத்த கோட்களுக்கு முறையே 20-30-12-25-
-15-20 பாகைக்குள் அவ்வவ்விராசியினிற்கினும் மூலத்திரிகோ
மாமெனவும் உச்சராசிக்கு நடுத்தினம் உச்சபங்கமெனவும் நீச
குநடுத்தினம்நீசபஙகமாமெனவும் கூறுப.

ரவியுடன்கூடியசனியும் மதியுடன்கூடியசுக்கிரனும் குசனுடன்கூடிய குருவும் புதனுடன்கூடியமதியும் குருவுடன்கூடிய சந்திரனும் சுக்கிரனைக்கூடியபுதனும் சனியைக்கூடியகுசனும் வலியின்மையா தலுணர்க

### முக்குணமும்சுபாசுபமும்திவிக்காலவிபிக்காலக்கிரகமும்

### அறுசீரடியாசிரிய விருத்தம்

சனிபுதனிராவிதாமதகுணமுந்
 தரணிசெய்கவியிராசதமு
மினியபுலோர்தம்மைச்சாத்விகமெனலா
 மிறைவளர் மதிபுதன்கவியும்
நனியவுஞ்சுபராம்பிறரெலாமசுபர்
 நற்குருசுக்கிரனறிஞன்
றினகரன்பகற்கோளல்லவர்நிசிக்கோள்
 செப்புவதிப்பலனுப்ந்தே. (கசு)

### வருணம் அலி பெண் ஆண்

### கலி விருத்தம்

மதியும் பொனுமறையோர்கில மகனுங்கதிர்மன்னர்
புதன்வைசியனுலாமர பெனலாம்புகரோனே
கதிர் சேயுமன்னியனுமிவ னெனுமாவலிராகு
விறவும்புகர்பெண்ணும்பிறரானுமெனல்காணுப். (உ௰)

### தசவர்க்கமும் வர்க்கோத்தமமும்

### எண்சீரடியாசிரியவிருத்தம்

இலக்னம்நவாங்கிசந்தவாதசந்திரியாங்கிசஞ்சத்தாங்
 கிசமேவியதசஞ்சோடசமிசைசட்டியங்கிசமும்

## பொதுப்பாவகம்.

லைத்தேவதங்காலாங்கிசமென்றேடுதல் பத்தும்
னின்றேசைகள் வலமுக்குயமிடமாய்வருமெனலாம்
பலத்தங்கிசமிரண்டேமுதலாம்பாரியசாதம்
பினுமுத்தமநற்கோபுரஞ்சிங்காதனமைந்தும்
லப்பார்க்கவதந்தெய்வதம்வைசேடிகமொன்பா
னயிராவதந்தேவேந்திரம்பதுவர்க்கமதாமே. (உ௩)

---

ராசியை இரண்டாய்ப்பகிர்வது ஓரையென்றும் அவை ஆண்ராசிக்
முற்கூறு சூரிய ஓரையும் பெண்ராசிக்கு முற்கூறுசந்திர
ராசியைமூன்றாய்ப்பகிர்வது திரேக்காணம் இதற்கெந்த ரா
யும் முதற்கூறுஅந்த ராசித்திரேக்காணமும இரண்டாங்கூறு அஞ்
தாம்ராசித்திரேக்காணமும் மூன்றாங்கூறு ஒன்பதாம்ராசித்திரேக
காணமுமாம் ராசியை ஒன்பதுகூறாக்கிலக்கினமும் அசுவினி முதல்
ம்மூன்றுகாளாகப்பிரித்துமேடாதியாக கிரகங்களை நடத்துவது ந
ாம்சமும் ராசிப்பாகையை பங்கொன்றுக்கு இரண்டரைப்பாகை
ாய்பன்னிருகூறாக்காண்பது துவாதசாம்சமுமாராசிப்பாகையில்
சய்க்கு 5 சனிக்கு 5 குருவுக்கு 8 புதனுக்கு 7 வெள்ளிக்கு 5 மாக
ருடராசிக்கு நேரும்பெண்ராசிக்கு விகிர்தியாகவும் நடத்துவது தி
யாம்சமும் ராசிப்பாகையை யேழுகூறாக்கி ஓசைக்கு அதுமுதலும்
க்குமத்திற்கேழு முதலும் நடத்துவது சப்தாம்சமும் ராசிபாகை
யபத்தாம்சமாகப்பிரித்து ஓரைக்கதுமுதலும் உக்குமத்திற்கொன்
து முதலும் நடத்துவது தசாம்சமும் ராசிப்பாகையை பதினறுகூ
கிதிசைச்குவலமும் உக்குமத்திற்கிடமுமாகநடத்துதல் சோடசா
சமும்

ராசிப்பாகையை அறுபதுகூறாக்கி முதலம்சம் கோரம் முதல்சந்திர
தகம் வரையிறுதியாக 60 அம்சமவரைஓசைக்கு வலமும் உக்கும
திற்கிடமுமாக எண்ணிநடத்தல் சஷ்டியாம்சமும் 2 வது பாரிசா
மும் 3 வது உத்தமம் 4வது கோபுரம் 5 வது சிங்காசனம் 6 வது
ர்வதம் 7 வது தெய்வலோகம் 8வது வைசேடிகம்9வது அயிராவத
10வதுஇந்திராம்சம்இவ்வர்க்கோத்தமம்பெற்றுவருங்கோள்களை
தவதாம்சமெனக்கூறுபஇதில் இலக்மைசமன் நிதராங்சமெனவு

கூறவர் இன்னும்விரிக்கிற் பெருகுமெனவிடுத்தாம் உ.ம். கோமண்டேவாளகைக்கு மன்றூர்க்கிரிலய கோடையினசனக்கோப கொடுவிடங்திகோதற்ருர் தன்மயலாந்தகம்பி ரேதபுரிபாவம் அ தேவகன காதமெமனரவம்மிரதம யேர்மிருதுகோளமும்ப்ரபல வாசமீசம் இயம்பிறைறிகாம்பரம் வானிறைகவிதைநாசம்பாரநிப லாசனி சேய்பவர்த்தகந்தீக்கோரம் பார்ப்பான் சேய்சுதமமிர்த பூரணம்யான்மதியே. மதிமயக்கம் பாக்கியங்கணூசம்வெகுமான லங்கிசங்கேடுற்பாதமறலியுருமகிழ்வாய், வதிதளமற்பகல்சுழசுந்டெ ட்சனகுருரமாதண்டமமலமதி சுபமலததீதர், ததிமுனரோததி முல் சுந்தாரங்கமறுபதற்காஞ் சாற்றுசுராங்கிஷம்பாரி சாதமொடு யம்பின். ஹுதிதருகோபுரமிருகாசனம்பாராவதம்லா னுலகம்வை டிகமயிராவதம்வைப்பேர்க்குளதேஎன்பவற்றூனுமுணர்க,

### மூவகைத்தானம்

## அறுசீரடியாசிரியவிருத்தம்

உத்தமத்தானமொன்றுநான்கேழு மொருபத்து
மைந்தொன்பதென்பர்
மத்திமத்தானமிரண்டுபன்னொன்று மற்றுள
ததபமாஞ்சுபர்க
ளுத்தமத்தானத்தொன்பலன்றருவ ரோங்கிய
வதமத்தினசுபர்
மெத்தவுஞ்சுபந்தான்றருமவர்பிறிதாய் மேவுறிற்
கொடும்பலன்விளம்பே. (உஉ

பஞ்சபூதக்கிரகமும் ஆரோகம் அவரோகமும்.

பிருதுவாதியவைம்பூதமுநிரையே
பீதகன்புகர்குசன்மானுங்
கருதியசனியாய்நுவல்வர்மற்றிரண்டு
கதிருமிங்கிவர்க்கொருசார்பாய்

பருவுவர்மேனுங்கீழுமன்னவர்கள்
வருர்பவனை தநின்முற்பாதி
பெருகுமாரோகமெனுபவரோகம்
பின்னதிற்பாதியென் றுரையே. (உகூ)

கிரகவலியும் அதிதேவதையும்

உத்தராயனமும்பூர்வபக்கமுந்தா
னுரைக்குமவ்விரண்டினுஞ்சுபர்க்கு
மெத்தவும்பலமாமற்றையகாலம்
வெய்யவர்க்கதிபெலனென்பர்
அத்தனும்பானுசேயிவிருவ
ரலவனும்புலவனுமாலா
மத்தனுங்கவியும்பொன்னயனுக்கு
மந்தனுக்கன்னியதேவே. (உச)

மறைவிடம்

ஆதித்தன்செவ்வாய்மந்தனரவிலக்கினத்தாக்கெட்டிற்
பேதித்தவிரையமுற்றாற் பிறைமதிமாலும்பொன்னுஞ்
சாதித்தமூன்றுமெட்டிற் சாருமோர்பன்னிரண்டில்
வாதிக்குங்கவிமூன்றின்வந்திடமறைவதாமே. (உரு)

இடப்பலன்

ஓரைக்கைந்தொன்பானுதி யாவரேயெனினுமன்றோர்
பேருற்றநகைத்தையிவர் பின்னைமூன்றுறுபன்னொன்
றோருற்றோரவர்களேனு மிவர்சுபபலனைத்தாரார்
வாருற்றுக்கதித்தவிப்பி வளர்ந்தெழுந்தனத்தினனே (உசு)

(௨௭) அலவன்-மதி, புலவன்—புதன்

(௨௫) ஒருமொழியொழிதனினங்கொளற்குரித்தே-என்னும்விதியா
உபஜெயத்தானமூன்றனுள் மூன்றுநின் என்பதற்கினமாகியபதிெ
ன்றுமிடமும் எனச்சேர்த்துக் கூறல்வேண்டும் (உ-மீ) ஐந்தொன்ப
னுகிபர் யாவர்வரினுமவர் அந்தமிலின்பப்பலனையாற்றுவார் அந்த
அம், அற்பபலனாற்றுவாரம்மூன்ருரும் பதினென், றுப்பதிகளுெவ்வு
கினோர்க்கு என்பதனுணுமுணர்க.

---

கிரகநோக்கு

எண்சீரடியாசிரிய விருத்தம்

கால்நோக்காய்மேலெழுவர்மூன் றுபத்துங்
காணுமைந்தொன்பானுமொருநான்கெட்டோடு
மேலேழுமிருகதிர்மால்கவிக்காமேழும்
மிகுமூன் றுபத்துமைந்தொன்பானும்நாலும்
நாலிரண்டுஞ்சேய்க்காகும் நான்கெட்டேழும்
நவிலுமொருபத்தைந்தொன்பானும்பொன்னும்
நீலனைந்தொன்பானுமெட்டும்நான்கேழாகி
நின்றவொருமூன்றுபத்தும்நிரையேநோக்கும்.(௨௭)

ஐவகைத்தானம்

அறுசீரடியாசிரியவிருத்தம்

தொடுத்தவொன்றுநான்கேழுஞ் சொலுமீரைந்துங்
கேந்திரமும்
அடுத்தநான்கெண்பணபரமு மவைபோன்றுறலா
போக்கிலியம்
விடுத்தமூன்ருறொருபானும் விளம்பும்பதினொன்
றுபஜெயமாம்
எடுத்தவொன்றைந்தொன்பதுங்கோணிவையாமறை
வோடைவகையே. (௨அ)

மாரகத்தானம்

கலிவிருத்தம்

வாழுமோரைக்கெட்டும்மதற்கெட்டென
மூழுமூன்றிட மாயுளுத்தானமார்
தாழும்த்தலத்திற்குவிரையமு
மேழிரண்டுமோர் மாரகமென்பரே. (உக)

---

(உஎ) ரவி. மதி. புதன். சுக்கிரன்-3-10-¼-பார்வையும். 5-9-½ பார்வையும் 4-8-¾ பார்வையும். 7-முழுப்பார்வையும், செவ்வாய்க்கு 3 கால்பார்வையும், 7-10-½ப் பார்வையும், 5-9-¾ப் பார்வையும் 4-8 முழுப்பார்வையும், குருவுக்கு 4-8-¼ப் பார்வையும், 7-½ப் பார்வையும், 3-10-¾ப்பார்வையும், 5-9, முழுப்பார்வையும், சனிக்கு 5-9-¼ப் பார்வையும், 8-4-½ப் பார்வையும், 3-10-¾ப் பார்வையும், 7 முழுப் பார்வையுமாம். எல்லாக்கோள்களும் தாந்தாம் இருக்குமிடத்துக்கு 7 மிடத்தைப்பார்ப்பார்கள், இவைகளில் சனிக்கு 3-10. குருவுக்கு 5-9. செவ்வாய்க்கு 4-8- விசேடபார்வை என்றறிக, (உ-ம்) பார்ப்பாரேழெல்லாரும் பங்குகுருசேய்மூன்று பார்ப்பத்தைந்தோன்பாறேன் பன்னியகோள்சேர்ப்புறநான், கெட்டுமேபார்ப்பரெழிலாரிளங்கொங்கைமட்டவிழ்பூங்கொதாய்மதித்து என்பதினுலுங்காண்க, முழுநோக்கில் இரவிமதிபுதன்வெள்ளி வலியரெனவும் முக்காலேக்கில் செவ்வாய்வலியனெனவும், அரைக்காலேக்கில்சனிவலியரெனவும் அரவும்குருவும் அரைநோக்கில் வலியரெனவுங்கூறுவர்.

(உக) (உ-ம்) எட்டுமதற்கெட்டாமிரண்டனையுமாயுவென்றுதிட்டமுடனறிந்தாசிரிலா கட்டத்தை மாரகமென்று கருத்தறிவாய்மாமயிலே ஆர்கவிசூழம்புவியுளார்க்கு எனப்பிறதான்முடிந்ததாலுடன்படுதலெனினும்ஆம்.

---

### கேந்திராதிபதோடம்

### கலிவிருத்தம்

கேந்திராதிப தோடத்திற்பொன்கவி
சாந்தமின்றி வல்பெறுபேறிரண்
டேர்ந்தபாவிய ரோடுறின்மாரகம்
ஆய்ந்துசெய்வர் பிரிந்திடினில்லையாம் (௩௰)

### ரவிமதிகாரகம்

### எண்சீரடி யாசிரியவிருத்தம்

ஓநந்தலைநோயானைசிவம்பகல்வயிரம்யாத்திரை
யுத்போகஞ்சிலுமபன்மயிர்பிதாரான்மாவலக்கண்
பருத்தசிரங்கோதுமைபான் மிளகுபித்தவாதம்
பண்டிதமைவகைலோகம்ரவிக்குளகாரகமே
பெருத்திளக்குமுடலரிசி தாகிற்சகலூண்டுயின்மா
பெற்றவள்வண்ணுநமணர் வெள்ளைகுடைசிவையாய்
கருத்தியுப்புப்பணியுமுவன் பயிரிடக்கண்சயநீர்
கயன்மணிவியாபார காரகன்சந்திரனே. (௩௧)

### செவ்வாய்புதகாரகம்

ஆட்டுவர்க்கஞ்சயம்பாகஞ்செய்யமணிவிரணம்
அனற்றெழிற்சாதகங்குபவன்றுவரைசினம்பூமி
நாட்டுதுகன்பகவதிபோரிறைவர்தைரியமும்
நவிலுமுடன்பிறப்பினுக்குங்காரகனுங்குசனே
கூட்டெழுத்தெண்கதைகல்விப் பிரசங்கங்கணக்கன்
கொடித்தேர்மண்கவிமாதுர் வருக்கமொடுசிற்பம்
பாட்டிசைநாடகன்றூதன் மரகதம்வெந்தயமால்
பகர்வசியன்றாதளிவை காரகனும்புதனே. (௩௨)

குருசுக்கிரகாரகம்

தேனமர்சசத்விஷயம்ஞானமைந்தர்பொன்னுஞ்
சீரகம்விப்பிரவருக்கமாண்டிமறைவேதன்
ஞானவுபதேசமொடு தைரியம்புட்ப
ராகநிதிகடலையிவை காரகன்பொன்னவனே
கானவிசைபசுற்காலமா தருவும்பூமி
காதலிசாமரைகலவை விகடமொடுபேரி
ஆனைபாலுண்டிவங்க மிரசிதமுமொச்சை
யணைசயனம்நவமணிக்கும் காரகமுங்கவியே. ([illegible])

சனிராகுகேதுகாரகம்

வேதனைவாயடித்[illegible]நீலமென்னை
விண்டுசானிசிக்காலமாதர்பிரமையெள்ளு
மேதிகளவடிமைசிறையாயுளையன்தேவன்
வீண்கடனேயுழுந்திவைகட்கேசனிகாரகனும்
போதபிதாமகிவிடநீர் பித்தவினைவஞ்சம்
பொய்களவுகரவுவிஷபாண்டுகுட்டமின்ற
மாதர்மகிபயங்கபட காரகனுங்கேது
வடுமேவிமயல்கூறும்வரிநெடுங்கண்மயிலே. (கூஉ)

---

அ) கேந்திராதிபத்திய தோஷத்திற் குருவும் வெள்ளியும் மிகவும்
வான்கள் இவர்கள் ஆயுளுவக்கு வியத்தானமாகிய உ, எ,ம் இடங்
னின்றால் ஆயுள்வியஞ்செய்வார்களென்பதாம் (உ-ம்) கண்டத்த
ராம் பாபத்திற்காரிகையாய் கொண்டகுருவெள்ளிகொடியரிவர்
ண்டாமல் ஆயுள்வியத்திருப்பா ராமாகிலேயமிலா தாயும்வியஞ்செ
டுவாராங்கு கேந்திராதிபதிகள் கேந்திரமேறில் கேந்திராதிபத்தி
ாம்.

துவாதசலக்கினசுபாசுபரும்மாரகரும்

அறுசீரடியாசிரியவிருத்தம்

மேடலக்கினத்துக்கிரவிபொன்னல்லர்
மிக்கவும்யோககாரகராங்
கூடியேயிருக்கிற்பிரபலயோகங்
கொடுப்பர்மால்கவிசனிதீயோர்
மாடுறுகவியோகொன்றிடான்சனிமால்
மாரகத்தானமாமிரண்டு
பாடுறுமூன்றேழெட்டிறுதியினும்
பரிவுறிற்கண்டமென்றுரையே. (௩௫

விடைதனினுதித்தோர்க்கிரவியுஞ்சனியு
மிக்கவர்சனியிறையோகன்
படிமிசைமதிபொன்சுக்கிரன்பாவர்
பணிமதிபொன்குசனிவர்கள்
மடியுமாரகராம்புந்தியோகொல்லான்
மாரகருடனெவரேனும்
அடையினுங்கண்டகாலமென்றுய்ந்திங்
கறைகுவர்சோதிடமுணர்ந்தோர். (௩

மைதுனவோரை வந்தவற்கிரவி
மண்மகன்பீதகன்கொடுமை
செய்குவர்பொன்னுஞ்சனியுமேகூடிற்
செகமிசையோககாரகராம்
ஐயவெண்பிறையுமாரகனல்ல
வன்றியுங்குசனுமாரகனும்
பையரவதனைக்கவர்ந்தரசிலையைப்
பழித்திடுங்கடிதடத்தனங்கே. (௩

கடகலக்கினத்தோர்க்கமைச்சன்சேய்சுபராங்
காரகன்யோககாரகனு
முடனிருந்திடினும்பிரபலயோக
முற்றவனிரவியோகொல்லான்
றிடமுளபளிங்குமாலிவரசுபர்
செப்பியவிவரொடுங்கொடிய
முடவன்மாரகனுமாரகத்தான
முற்றிடிற்கண்டமுமொழியே. (௯

சிங்கவோரையினி லுதித்தவர்க்கிரவி
சேய்சுபர்கவிபுதன்பாவர்
மங்கலகுசனும்யோககாரனுய்
வரினுமம்மன்மகனுனுக்
கங்கமாயுள்ளோனுதலிற்றீமை
யாம்பலனீகுவன்வெள்ளி
பங்குமாரகராமாரகத்தானம்
பரிவினுங்கண்டமாய்ப்பகரே. (௯௪)

கன்னி லக்கினத்துக்கசுரருக்கிறை பொன்
காரியுஞ்சுபர்மதியரிசேய்
மன்னிய மூவரசுபராங்கவியு
மாலுமேயோககாரசுராம்
உன்னியவன்னோர் மருவினுமதிக

(௯௩) குரு சுக்கிரன்சந்திரன் இவர்களுடன்சேர்ந்த கிரகங்க
யும் ஆராய்ந்து சொல்லுக.

(௯௫) குருவும் சனியும் தருமகருமாதிபதிகளாகையால் யோ
காரகரெனச்சொல்லினர்,

யோகமேதரு வரவ்வசுபர்
பன்னுமாரகரா மாரகத்தானப்
பதிவரிற்கண்டமாம்பலனே. (ச

துலாம்.

துலேதனக்கருனன் புகர்சனிசுபராஞ்
சூரியனிலமகனசுபர்
கலைமதிமகனும் யோககாரகனுங்
கானுமவ்விருவருயருனிற்
றலமிசையிருந்த பலனது தருவர்
தபனனுங்குருவுமாரகராங்
குலநவமிரண்டேழுடையவர் கொல்லார்
கொல்வதம்மாரகர் குணமே. (ச

விருச்சிகம்.

தேளினிற்சனிந்தோற்றிருசுடரோடுந்
தேவர்கடமிறைவனுஞ்சுபராய்
கோளுறுமேசெய்மா னுசனனுமதமர்
குபேரனுமிரவியும் யோகர்
கேளுடன் கூடில்ராஜயோகமதாங்
கிளத்திய வசுபர்மாரகராய்
நாளுமே கொடுப்பர்குருசனி சொல்லார்
நங்கையற்கினிய தெள்ளமுதே (ச

தனுசு.

வில்லினுக்கிரவிசெய்சுபராகும்
வெள்ளிபாம்பொருவனேயவி
வெல்லு மாலவனும் யோகராமன்றி

யிவையைந்தொரு ராசியிலிருப்பின்
நல்லவாம் பலனைத்தருவர் மாரகராய்
நவிலுவர் சவி புதனிவரை
யல்லிருங் குழலாயிரண்டு மூன்றேழி
னனுகினுங்கண்டமென் றுரையே (௪௩)

மகரம்.

மகரமாம் பவனத்துதித்தவர் தமக்கு
மன்மகன்பால்கவிசுபராஞ்
சுகமதி குருவுமதமராய்வருவர்
சுக்கிரன் யோகனுமதியின்
மகனையேசேரினரசயோகமதா
மந்தனும் பரிதியுஞ்சொல்லான்
ககனவானவருக்கிறைவனுமதியுங்
கண்டகஞ்செய்யுமாரகரே. (௪௪)

கும்பம்.

எழுந்தகும்பத்துக்கனுவழி மழைக்கோ
விருஞ்சனி சுபரிருசுடர்க
ளொழிந்தவரசுபர் யோககாரகரா
மொண்கவி சேயுடன் கூடிற்
செழுந்தராதலத்திற் செல்வமுந்தருவர்
சேய்மதி மாரகர் குருவும்
விழுந்திடிற்கொல்லா ரசுபர்மாரகத்தின்
மேவிடக்கண்டமுமாமே. (௪௫)

### மீனம்.

மீனினுக்கலவன்சேய்சுபரிரவி
மேதைசுக்கிரன்சனிபாவி
மானசேய் குருவும் யோகராய்வருவர்
மருவிடின் மிகவநியோகம்
தானவர்க்கிறையுமாலவன்பரிதி
சனியுடனுல்வர்மாரகராம்
ஆனசேய் கொல்லான் சுருதியுத்தியினே
டனுபவத்தாலிஃதுரையே. (ச

### மாரகரும் வலியரும்.

## அறுசீரடியாசிரிய விருத்தம்.

மாரகத்தானத்ததிபனை விடவே
மாரகத்தானத்திலுறைவோர்
வீரமிக்குடையோரிவர்களோக்குறினு
மேவினுமிறுதியேபுரிவர்
சேரவேதுநிகை சத்தமாதிபனுந்
திசைபுத்திவரினுமக்காலம்
மாரகமென்பர் வானிலவனைய
மாமுகத்துவரிதழ் மானே. (ச

* சுபர்கள் பாபசம்பந்தப்பட்டு துஸ்தானம் மாரகத்தானங்களில
து இருந்தால் பாபபலனையும், பாபிகள்சுபசம்மந்தப்பட்டு கேந்
திரிகோணங்களில் இருந்தால் சுபபலனையுங்கொடுப்பார்கள்.
(சஎ) அரி—வியாழம்.
(சகு) அனுவழி—புதன்

இதுவுமது.

சத்தமாதிபனையன் றிரண்டதிபன்
றுன் பலவானிவனலது
சத்தமதுதியங்களிலுறையசுபர்
தான்வரினதிவரேயாவர்
சத்நமதுதியாதிபர்களைக்கூடு
மசுபர்களதனிலுங்கொடியோ
ரித்தனையதிபரிவரினுங்கொடியோ
ரென்பது விரையவாதிபனே. (சஅ)

இதுவுமது.

சோதர மிரணமாயமும் விரையஞ்
சொல்லுமித்தானவாதிபர்க
ளாதிபத்தியமில்லாமலும்பாவி
யாயிடின்மாரகரெனலா
மாதிசைபுத்தியந்திரங்களிலும்
வன்றுயருதவுவன்மந்தன்
வதமுற்றவனும்மாரகமுறினு
மிவனுமச்செயலினைப்புரிவான். (சகூ)

இதுவுமது

மதிகதிரன்றி மாரகத்துவமு
மற்றவரடைந்துச்சகோணந்
திதிபெறுமாயின்மாரகம்புரிவர்
செப்பியமாரகர்திசையி
னதிசுயபுத்தி திமையாம்பாவ
ரவர்புத்திகாலமுமதுவே
கதிதருசட்டாட்டமவிரையாதி
காலமுமிறுதியாய்க்கருதே. (ருo)

இதுவுமது

அட்டமவிரையசட்டமாதிபனு
மவர்பலவீனராயவர்தந்
திட்டமாமபகாரங்களிற்சோகஞ்
செருநராற்றுன்பமும்பீடை
நட்டமாம்பொருளு மிலக்கினுதிபனும்
நலனிலாப்பாவியரெனினும்
முட்டவுமவன்றன் றிசையெலாங்கிலேசம்
முற்றினுமதமாம்பலனே. (ருக)

உத்தமமத்திமம் அதமாயுளின் திசை

உத்தமவாயுட்சாதகற்கேழு
மொன்பதுமத்திமந்தனக்கு
வைத்ததுவிருமூன் றதமருக்கொன்று
மற்றொருமூன்றநாந்திசையுஞ்
சுந்தமாரகமாஞ் சனிக்கொருநான்கு
சொலுங்குசற்கைந்துபொன்றனக்கு
பத்தியாயாறுமரவினுக்கேழும்
பகருவர்மாரகதிசையே. (ருஉ)

அரிட்டபாவம்

வேறு

பாலாரிட்டமொன் றுமுதற் பன்னீராண்டுவயதளவு
மேலாமிருபதாண்டளவும் விளம்பாயவனவரிட்டமென்று
மாலாயதன்மீதையைந்தேழ் வருடமளவுங்கௌமாரம்
நூலோரிதனையாராய்ந்து வாயுர்த்தாயம்நுவலுவதே. (ருங)

இலக்கினநிட்சயம்.
கலிவிருத்தம்.

உதயநாழிகை யாறினிற்ருக்கியத்
திதியுங்கூட்டித் தினகரன்ராசிதான்
முதலதாயொரு முப்பதுமுப்பதாய்
விதியின்மீந்தது லக்கினமென்பதே. (௩௪)

இதுவுமது

எண்சீரடியாசிரியவிருத்தம்.

அற்றைத்திதிநாள்வார மிருத்தைத்திகதியுமே
லறைலக்கினமிசைகூடுமென்றெநநாலினிற்ருக்கி
மற்றும்பிருபானேழினின் வகுத்தால்வருசேடம்
வளரும்பிறைக்கசுவம்முதலாயுங்குறைமதிக்கு
சுற்றும்படி துகிலாதிய வெண்ணிக்தெரிநாளிற்
சுகனேவரும்நாளாமதன் றிரிகோணமும்நாளா
யுற்றேவருநட்சத்திர முளதாவதுவருமே
லுளவோரையுமுறுதிப்படவிதுநாவலருரையே. (௩௫)

நாள்நிட்சயம்

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சென்றநாழிகையைமூன்றினிற்ருக்கி
சேரவோரேழினின்வகுக்க
நின்றவெண்ணினுக்கேஞாயிறுமுதலாய்
நேர்வதன்றியும்புகர்முதலா
யொன்றிடவருமெண்ணுளதாமென்ப
ருகந்திடுசோதிடமுணர்ந்தோர்
குன்றிரண்டெனவெழுந்தோங்கும்
குவிமுலைக்கயல்விழியணங்கே. (௩௬)

நட்சத்திரம்

செனனகாரிகையைமதிமுதலாகச்
சென்றலக்கினவரைகூட்டி.
மனனமாமெண்ணைநாலினிற்பெருக்கி
வந்தநாட்டொகையினின்வகுக்க
வினமதாமீதிக்கசுவினிமுதலா
வெண்ணுநாளாகுவதன்றி
கனமுறுமவிட்டநாண்முதலாகக்
காண்பதும்விதியெனக்கருதே. (௫

குளிகலக்கினம்

கலிவிருத்தம்

சந்தவோரைக்கதிப னுறைதரு
மந்தராசித் திரிகோணமல்லது
முந்துமேழு மதன் திரிகோணமும்
மந்தனார்சுதற் கேலக்னமாவதே. (௫

வாரதுர்ப்பலம்

எண்சீரடியாசிரியவிருத்தம்

காசிபனத்திரிபிலத்திற்குரைபானுங்
காலமுனைரங்கிரசிற்கடவுண்மாட்டு
மேசலிலாச்சாயையினுமிரவியாதி
யெழுவரும்பின்னுனிரையேபிறந்தவாற்றால்
நாசிதுகிலாடியாவணியுங்கேட்டை
சாருமுடைகுளங்கடைநாண்முறையேகண்டு
தேசுபெறவவரவர்தம்வாரநாளிற்
சேயுதிக்கிற்கொடுந்துயரஞ்செப்புவாரே. (௫

(ஒக) * அசுவினிமுதல் சந்திரன் சஞ்சரிக்கிற நக்ஷத்திரவரையிலெ ண்ணி வந்ததொகையை 7-ற் கழிக்க மீந்ததற்கு ஞாயிறுமுதலாக வெண்ணில் வாரமாமெனவுங்கூறுவர்,

(ஒக) தாசி- பரணி- துயில்- சித்திரை- ஆடி- உத்திராடம்- ஆவ ணி- அவி.்டம்- உடைகுளம்- பூராடம்- கடைநாள்- இரேவதியாம். காசிபர்க்குபரணியில்ஞாயிறும், அத்திரிமுனிவர்க்குசித்திரையில், தி ங்களும், சிவபெருமான்வியர்வையில், உத்திராடத்திற்செவ்வாயும், சாயாதேவிக்கு, அவிட்டத்தில் புதனும், அங்கிரர்க்கு கேட்டையில் [illegible] விசுத்தில் பூராடத்தில் வெள்ளியும், சாயாதேவி க்கு இரேவதியில [illegible] களின் மானிட வுருக்கந்தோற்றில், வன்றுயர்விளா [illegible]

(உ-ம்) அருந்தவக்கிழமைபூண்ட காசிபற்கறன்மென்கூறத்ற், ௬ரு ந்தடங்கிடந்துவுணகட்காரிகையதிதியென்னுமுருந்திளமுறவற்பன் னி மொய்பிருட்பிழம்புசீக்கும்,திருத்துசெங்கதிர்கள்பூத்த தினகரன் றன்னையின்றாள். மலரயன்மனத்திற்றோன்றமத்திரிவரம்பில்காவ, முலகிடைதவஞ்செய்காலை தாதுமேலோங்கியக்கட், புலன்வழியொ ழுகிப்பந்துத் திசையினும்போர்ப்பத்திக்கா, மலர்முலைமாதர் தாங்க வாற்றலர்மண்ணில்வீழ்த்தார். சித்தியதிவலைபைங்கூழாயின திரண் டுவீழ்ந்ததுந்தநீருலகமுய்ய,விமானமேலுலகம்பூத்த, தனை நோக்க யதாழ்சடையோனுதலிற், பனிவேர்வுயர் பார்மிசைவீழ்ந்தது,வோர் கனிவாய்மகவாயதாகண்டெடுநீர் வினைமேகலை, மங்கைவளர்த்தன ளால், தேர்ந்திலன்யாதுநீ செப்புகென்றலுங் காந்தன்மென்முகி ழ்விரல் கூப்பிக்கண்கவர், எந்திலைழயிருட்குறும்பெறியுந்தண்சுடர் வேந்தனுக்கீன்றனனென விளம்பினன். அனையரின்மறைபயிலங்கிர வருள், புனையுமாங்கிரதனென்றுரைக்கும் பொற்புடை முனைவனை யீன்றனன் அன்னநோக்கியொருநாருண் டியோகமொழியாதமர் வெள்ளி, பின்னரிறைவன்சுக்கிலமாய் வீழ்ந்துபெம்மான டிபரவ, மன்றுகமதாசுக்கிலமாய் வந்தவாற்றுற்சுக்கிரனென், சாவன்னி யென்றுமெட்டாமனுவினைச்சனியைவெய்ய, வேவெனமிளிருமுன் கட்பத்திரையென்றுமாலையோவறுமன்பினின்று, என்றும் அதிவீ ராமபாண்டியன் வாக்காலுமுணர்க,

பிரசவிதி
வண்ணக்குறிப்பு

தந்தநன தாந்தனன தந்ததன தானனு
தந்ததன தந்த தானனு
தந்ததனந்தன னந்ததனந்தன
தந்ததனந்தன னந்ததனந்தன
தந்ததன தந்த தானனு

ஈஸ்வரிக்கும் ஈஸ்வரனுக்கும் தர்க்கம்.

சந்தமறைநான்கினையுந் தந்தருளும் நேசனே
இ[illegible]முடிமாம கேசனே வ[illegible]
சந்திரன்வந்துத யஞ்சரமொன்றிட
அஞ்சுபர்காலி னிறைந்துகனும்பெற
ஜன்மவீடுசொல்லு மீசனே (சு[illegible]

(விடை)

விந்தையபிராமியைரி ரந்தரவு லாசனி
சுந்தரிபென்மான்வி லோசனி ஜென்[illegible]
வீடதுசொந்தமி லாதுபிறந்தபின்
றேடியுவந்தது நாடியிதின்பலன்
விளம்பினேனிதாமி மாசனி (சு[illegible]

(வினு)

கானமிசைவேணுகுழ லோனெனு முராரியோ
டானவயனும்பு ராரியே வந்[illegible]
காதலனேரையை நாவினின்மாமதி
யோடசுரேசனு மேவிழிகூடிடிற்
கனிதமென்னகருணை வாரியே. (சுவ[illegible]

(விடை)

மோனமுனிவோர்பரவுஞ் சாணவிலி நோதையே
ஞானமலர்ப்பூவுண் கோதையே அது
முன்னமூலாவிய அன்னையின்வீடது
மன்னுபிரசவ மென்னவுமேயுணர்
மூதறிஞரோதும் பாதையே. (கஙு)

(வினா)

அன்றொருநாள்வேசியனை சென்றுதாது சொல்லியே
குன்றமேருவென்ற வில்லியே புக
ழுண்டுதிரந்தான் *என்றபிறந்தா
லென்றுதிரந்தா னண்டியிருந்தா
லந்தவிடங்கூறும் புல்லியே.(க

(விடை)

நன்றாநன்றுசென்றிமயக்குன்றில்வந்தாங்கையே
நின்றதிருமாலின் றங்கையே அன்பு
நந்தியிவன்றரு தந்தையர்வங்கிஷ
மந்தவிடந்தனின் வந்தவனென்றறி
நாதகீதவேத மங்கையே. (கரு)

(வினா)

நிர்த்தமிடும்பாதமுள சித்திரபானு வண்ணனே
ஒத்தநுதன்மேவுங் கண்ணனே பெலம்
நீள்சனியேசல ராசியிலேவர
வாளொளிபார்வையு மேவுறுசேயது
நேரும்வழிசொல்பாலின் வண்ணனே. (கசு)

---

* (கச) என்ற-சூரியன்.

(விடை)

முந்திருந்தபோ லும்நகை வைத்துயர்ந்த சித்திரமே
சத்திநிருபாச முத்திரமே இவ
மூவர்களாதிய தேவர்களாலயம்
மேசிசுவேபெற லாமெனவோதினம்
முதல்வியானவெங்க ளத்திரமே. (சு

(வினா)

மானுமறைதேடியின்னுங் காணவுள னல்லையே
பேணவயனனு மில்லையே உ
மாயைபுலப்படு மோசரமுற்பவ
மாய்மதியைப்பவர் மூவர்விழிக்கவும்
வந்தவசதியாது சொல்லையே. (சு

(விடை)

வேணுகுழலோசைகிளி நானுமொழி கொஞ்சியே
காணவருகின்ற வஞ்சியே தன
மீதினிலாயினு மேநடையாகிய
பாதையிலாயினு மேபெறலாமெனல்
வேதமுறைகூறு மிஞ்சியே. (சு

(வினா)

உரமிகுத்துவந்திரி புரமெரித்த ஜாலனே
சிரமதிற்சிங்கார கோலனே வழ
யூடதுவாயினு மாடமதாய்வரும்
வீடுபெலாபெல நாடறிவாகவு
மோதுஞ்சுவாமிநால காலனே. (

(விடை)

நரகரிக்குப்பாம்புருவம் வரவமைந்த கோவியே
உரவுவைத்துளாவுந் தேவியே ஜென்ம
லக்கினமீது விழிப்புறுகோள்களி
னற்பலனுல்வரும் புக்கிலேயோதுதல்
ஞாயமாகுமேசஞ் சிவியே. (எக)

(வினு)

வண்டலருங்கொன்றைதும்பைகொண்டரவப்பூணுமே
வண்டவடிவாகுந் தாணுவே சொல்
மைந்தர்பிறந்தவி லந்தமறிந்தனம்
அந்தவகந்தனி லெந்தவிதந்திசை
வாசலதுபேசு வேணுமே. (எஉ)

(விடை)

அண்டபுவனங்களுநி கண்டவடி வானவையே
விண்டிடவுமுண்டு தேவையே மண்ணில்
அஞ்செனனங்கள் வரும் பவனந்திசை
யுங்கிரகங்களிருந் தவரின்றிசை
யாகும்வாசலென்பர் பூவையே. (எங)

(வினு)

கண்டமுங்கறுக்கநின்றி ருண்டெழுந்த நஞ்சமே
விண்டயன்காணுத வஞ்சமே என்
கர்த்தசுதற்கும ருத்துவரைத்தொகை
யெத்தனையத்தவி தித்துரையிச்சிணம்
கண்டறியவேணும் கொஞ்சமே. (எச)

(விடை)

வண்டல்விளையாடிவரு மங்கையேயென் னன்னமே
விண்டவர்கள்வேண்டுஞ்சொர்ண்னமே சேய்
வந்துதயன்றிகழ் சந்திரனையும்பெற
நின்றவர்கண்டவ ரின்றொகைகண்டுரை
வழுத்தலாகுங்கேளு மின்னமே. (எரு)

(வினா)

மதுரைநகர்வீதியினிற் குதிரைமாறும் நீதமே
சதுமறைகளுடும் போதமே சு
மங்கலையோடு மமங்கலைமாதரை
யெங்கறிவேனதை யிங்கருளுநனே
மருத்துவரின்ஜாதி பேதமே. (எசு)

(விடை)

விதுவனசநேர்முகமும் மதுரவின்சொற் பேதையே
சதுமறையிற்சாம கீதையே ஜென்ம
மேவுசுபாளையும் பாவர்கள்பார்வையு
மாவதினாலதின்பே தசுபாவமும்
விளம்பும்வகையிதாம நாதையே. (எஎ)

## பிரசவ காலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்

உதயத்தைநிலவுவிழிபெறுது றினு
மொன்பதிலெட்டினிவிரவி
வதியத்தானதுவுஞ்சரமதேயெனினு
மந்தன்சென்மாதியோடணுகி

மதனத்திற்குசனுமிருக்கிறுங்கவிமால்
மதியுறமோரைக்குமுன்பின்
கதிபெற்றுவருமேற்பிரசவகாலங்
கண்டிலன்றந்தைவேற்றிடமே. (எஅ)

சகடமும் பின்னமும்
எழுசீரடியாசிரிய விருத்தம்.

அண்டர்குருநின்றபவனந்தனைதிரன்றியொளி
ரம்புவிகடன்றுயிலினும்
விண்டவிரையந்தனிலிருந்திடுத லின்சகட
மென்றிடுவரங்கிருவருங்
கண்டவிடமும்பகை யிடங்களெனினுந்திரு
வகன்றுசிசுவுங் கடியநோய்
கொண்டுழலுமிந்துகயல்ஞெண்டுவிடையுங்கலையுங்
கொண்டுறைதனன்றுபலனே. (எசு)

வண்ணம்.

யோகபலன்.

தானன தந்தனனு தன தானன தந்தனனு (தன)
தானதந்தன தானதந்தன
தானதந்தன தானதந்தன
தந்ததனனுதனனு

பிரம்ம யோகம். விஷ்ணு யோகம்.

யோகபலன்பலவாம் அதிலேகமும்புகல்வாம் (வி...)
வோடுபொன்கவி கூடினும்பதில்
நீடியங்கிறை சாடினும்புத
னுகவிருந்திடவே பிரம யோகமிதென்றிடலாம்
னுனதின்பொழு தேநடந்திடும்
நாலிரண்டுடை யாருமொன்பதி

னாடுமிருந்திடவே தன மேறியிரைந்துடையான் இ
யேபன்னென்றினு மாகவிண்டுவின்
யோகமிங்கிது வாயிரண்டெனும்
கொஞ்சவயதாய் நடவுமே.

உருந்திரயோகம். சரஸ்வதியோகம்.

ஓதுமிலக்கினமே லுயர் கோள்களிருக்கினுமே
யோனுமங்குற வாகிவந்திட
வேயிதுஞ்சிவ யோகமென்பர் செவ்
வாயினிளங்கிளியே சுவை கூரதரங்கனியே
யாமெனுஞ்சமை யாகிகொண்டிவன்
வாழுமென்பது நாவிலும்புகல்
ஊமர்கள்கண்டகனு வல வாமிதுகண்டறியே
நோனுடன்றிக ழாயமன்பெற
வாணியின்சுப யோகமைம்பதில்
ஐந்துகுறைமேலடையுமே.

## இலக்குமி யோகம்.

மாகமெழுங்கதிர்சேய் நிறை தேகமுமொண்பலமாய் இ
மாறியங்கவர் தேவதங்கிஷம்
மேவினனென்பது வாம தன்றலை
வானுநலம்பெறவே சுபர் கோணமியங்குறவே
சாதிபஞ்சமர் நீதியும்பெற
லாலியங்கவர் தானமும்பெல
மாய்வரினுந்தவனே பதி னுதியுஞ்சொந்தமுமாய்
வாசமொன்பதி லேகினுந்திரு
மாலணங்கெனும் யோகமென்பது
கண்டுபலனீ புகனுமே.

## அம்பிகை யோகம். கிரகமாலிகையோகம்.

மாதனமுண்டிவனே ஜெய வான்வலிகொண்டவனே உற
வாளனிந்திரச மானமைந்தர்கள்
மாதரும்பெறும் ராஜமந்திரி
ஞாலமிகும்புகழான் உதயாதியொடுங்குருவே யிவர்
சேரவுஞ்சுக வானுமங்கதை
நேரவும்பெறில் யோகமம்பிகை
வாழ்வுசிறந்தொருநா லெனுமாயுள்தொடங்கிடவே வரு
மால்பிறந்திடு மோரை நின்றெழு
தானமுங்கிரகம் ராகொழிந்துற
வண்கிரகமாலிகையிதே.

## வாசியோகம். வேசியோகம்.

யோகபலன் சுகமே ரவிக்கேமுனமீன்றிடவே நவக்
கோளிருந்திடில் வாசியென்றுணர்
கோளிருந்திடில் வாசியென்றுணர்
சேயுறைந்திட வாயினுங்கொடி
நானவனுமபெறுமே புதற்கேபலனுஞ்சமமே வி
யாழனங்குறில் சேயொடுங்கவி
வாழினன்றும னேபயம்பெறு
மேசனிநின்றிடிலோ விட மாரகமுந்தொழிலே சன
மேயுளன்றவிக் கேயின்வங்கவை
போலிருந்திடில் வேசியென்கமுன்
சொன்னபலன் மாறுபடுமே

## அனபாயோகம். சுனபாயோகம். கேசகேசரியோகம்.

ஏர்மதிமுன்சுபரேல் அனபாயோகமென்பதுவே குல

மானலங்குண மேதனங்கனம்
ராசசம்பவனீதமுப்பிறை
யாமவன்பிறகே சுபராயினுஞ் சுனபா என
யோகமென்பது பூருவம்பெறும்
ஆமதின்னிரு பானுமொன்சுப
ரேகினுமங்கதுவே திதி பூருவசந்திரனே
கேசுகம்பதி லேகினங்கது
சால்மினந்தனு எறுகொண்டது
விண்டகெச கேசரியதே.

### கெச கேசரியின்பலன் நீசபங்க ராஜயோகம்

ஆருமிதின்பலனே கெச கேசரியின்னலமே
வானிரஞ்சித வாழ்வினம்பட
வாழுமிங்கிதன் ராஜகெம்பிரன்
நீசனிருந்தமனை யவனேகியவன் றன்னிடம்
காதினன்பினுச் சாதியின்மனை
போதவைந்தினி லேகியிந்துவு
மாய்வருவுந்துருவே விழி யேகொளவந்திடிலே
நீசபங்கவி ராஜனென்பது
பூஜிதம்பெற மாஜனங்களும்
வந்துபணிவாரிவனையே

### கோளகையோகம் யூபயோகம் கேதாரயோகம்

ஆரவிகொண்டெழுவர் ஒரு ராசியினின்றிட்டவே
கோளகம்பெறு மேயிரண்டுற
யூபமென்பது மூனிலின்புறில்
சூலமெனுஞ்சொல்லாம் ஒரு நாலிலடங்கிடவே

தாரமென்பன தாய்நலந்தரு
மேயிருந்திட வாழுமென்றுனர்
ஆயிசுமங்கலியே மக மாயிபரங்கொடியே பொன
தாவல்கொண்டிடப் பாகமுந்திய
மோகமென்கொடி நாக கங்கணி
அங்பிலியை யோதவெளிதோ (அ௰)

## பொதுப்பாவகம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் (கூ௩)

## இலக்கினபாவகம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

முருகர்துதி.

கலையாதியங்கமெலா மொருமுனிவர்க்குணர்த்தவரு
கங்கை மைந்தன்
மலர்போலுந்திருவடியை மனத்திருத்தி நவகோளின்
வண்மையாய்ந்து
நிலையாக வெண்ணிறந்தவுயிர்த்தொகைகட்காயுள்வரை
நிகழ்பவெல்லாந்
தலையாக விங்கினியாந் துவாதசப்பாவகப்பலனுற்
சாற்றுவாமே. (க)

கலி விருத்தம்.

அலக்கணையமரருக்காக்குந்தியரைக்
கலக்கிய வேற்படைக் கடவுடாளிணை

துலக்குறமனத்திடை துநித்துமேலினி
யிலக்கினபாவக மியம்புவாமரோ.

செல்வமெண்ணிலவவை நிகழினுஞ்சிறூர்
நல்கிடாரிருமையும் நலம்பெறுரென
மல்குறப்பற்பல மகஞ்செய் தாற்றுநர்
புல்லுறும் பொருட்டல வென்பர்போதமே.

மூந்தின யுகங்களின் முதனிஷேகமும்
வந்தவாதானமும் வருஞ்சிரோதயம்
அந்தமாம்பூவுதயமு மிலக்கினம்
இந்தவாறவை நிரை யியம்புமேலையோர்.

## தேவவிம்போதயம்.

வேறு

சாபமேலிறை பத்துதயத்துற
ஆவலாய்மதி யுச்சமுறச்சனி
பாவரோடுலக்னேசனுங்கூடுற
தேவவிம் போதய மெனச்செப்புமே.

### இதுவுமது.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திதிவாரந்தினஞ்சுபமாயிருசுடரு நட்பாய்த்
திகழுமைந்திராறுடையோரிலக்கினத்தின் மேல
பதியாமவ்வோரைக்கே பொன்னுட்சியுறவாய்ப்
பயந்தவிடந்தனிற்கவியு மொருபானிற்சேயும்
விதியாகத்திரிகோணகேந்திரத்தின் மற்றோர்
வியப்பாகத்திரவருக்க முச்சாங்சமேவின்

அதிசயமாந்தேவவிம்போதய செனனமாகும்
ஆனமயிற்சாயலிணைமானின்விழிமானே (சு)

## தருச்சனனம்.

கலிவிருத்தம்.

அரிமுதற்கிரகமு மிலக்னமூலமாய்க்
கரியவன்புகரின் வர்க்கமும்பத்தாமிறை
யரியவனுய்வரினுலகிலன்னவை
தருவெனுஞ்சனனமாய்ச்சாற்றலாகுமே. (எ)

## மிருகம், பறவை, தரு.

எண்சீரடியாசிரிய விருத்தம்.

நாலுபத்துக்கதி பருமிலக்கினத்திற் சேர
நவின்மிருகவருக்கமெனவரின் மிருகமெனலா
மேலுமந்த விலக்கினத்தோனொருபதின்யனிவர்கள்
வீழ்பறவை வருக்கமென மேவுநினங்கறுவாங்
காலரவிமுதலானோரிலக்கின முமடைவாய்க்
காரிகவிவருக்கமுற மூலவர்க்கமெனலாந்
தாலமிசை தருச்சனனமாகுமவ்வவ்வோரை
தன்னுருவமறிந்தினதென்றறைந்திடுதனெறியே.(அ)

கலிவிருத்தம்.

ஆகுமிவ்வணமிருகவர்க்கமாயிடி
னேகுமம்மிருகத்தினினங்கண்டோதுக
போகுறும்பறவையின் புணர்ப்புமாங்கெனல்
பாகினுமினியசொற்பகருமங்கையே. (கூ)

## செனனவிகிர்தி.

### அறுசீரடி யாசிரியவிருத்தம்.

உதயமுமுதயத்ததிபனுங்குருவு
மொளிர்மதிபுருடவர்க்கமுமாய்
வதியுமோலாறுமற்றதுபென்னு
மந்தன்சேயொன்றெட்டுக்குடையோர்
சிதைவுறும்பதனத்திரவியுமிருக்கச்
சிந்தையினென்பதிற்புதனு
மதையமரேசன கன்னுறுனுயி
னரையின்மேல்விகிர்தியாமுருவே. (சு0)

## இரட்டையுரு.

### சந்தவன்னக்குழிப்பு.

தானதனன தனத்தன தானன
தானதனன தனத்தன தானன
தானதனன தனத்தன தானன தனதான

மானேமிதுனமெனப்படுயாழிடை
தானேமகவுமுதித்திடவேகவி
வானர்குசனுமொருப்படநேரலர் விழிகூட
மாலோனமிசதிரத்தலமேறினு
மாலோனரல் மழைக்குரியோனெடு
மாலாயசுபர்தொகுப்புறவேழிடை புதனுக
தானேபதுவுமிலக்கினமாயுற
வாழ்வேபாகவுதித்திடுசாதகர்
சாமேபுதல்வியிரட்டையுராமென மறைகூறும்

தாழாவிழவுமுதித்திடநோய்முக
ஞேடேகுருவுமுதித்திடுகோணிலே
தாயேபெறவுமெதிர்ப்படுமாலினங் கிசமேறி
நாளுவிதமுமடுத்தெதிர்கூடினு
நேராயொருவரெதிர்க்கெதிர்நாடினும்
நாடாவுதய மிரட்டையதாகவி ரவியோடு
நாளாமதியுமமைச்சனுமாய்வர
மாசாமனுமொருபத்து நாலேழுற
நாடோரறியவுதிப்பினுமேசனி குடமேவ
ஆனலதுவுமிலக்கினமாய்மதி
தானேவதியவதற்கெதிராய்ரவி
யாலொன்மகனுமுறப்படுதேள்டை அழலோனு
மாமேயுதயமதைச்சனிகாணினும்
பூமேலாகவுதித்திடுமாயினு
மாணேயாகுமிரட்டையதாமெனமொழிவாயே (கக)

## இரட்டையுரு கொடி.

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

இரட்டையுருக்கோணுந்தமிரு ராசியதிப
ரிவரங்கிசரும்புதன்பார்த்திடுமுபயராசி
யருட்டனேயனிலக்கினமாய்க்கேந்திரத்திற்சுபரு
மனுகாமலிருக்கினவனிரட்டையுருவாகுந்
தெருட்படவவ்வருக்கமணிந்தானுடனேபென்னுஞ்
செப்புவதாமாடுவிடையரியுதயமாகி
குருப்படச்சேயிருகதிருமரவுசனி நோக்கிற்
கொடிசூடும் படிமிசையிற்குழவிபிறந்திடுமே (கஉ)

இதுவுமது.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

அரவுங்குளிகனிலக்கினத்தினமரவவனெட்
டதிபனெடு
முரவுகூடிக்கோரமதாயோரைதிரேக்கா
ணத்துறினும்
விரவிப்பாவரிலக்கினத்தின்மேவக்கொடியர்
விழிப்புறினும்
பரவுமுதயந்தனைச்சனிசேய்பார்வைசெயினுங்
கொடியுளதே. (கரு

இதுவுமது.

கலி விருத்தம்.

மேடசிங்கமிடபமுமேவவே
யாடல் ராகு சனி குசனுடவே
பீடையாங்கொடியோடுபிறக்குமால்
வாடுநுண்ணிடையாமடமங்கையே. (க

பெரியநாபி, கூன், குறள், கால், கை, குறை

அதிவிரல்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

காரியரவுதயமுறிலவன்பெரியநாபி
கனக்கனெடுசனியுதயமதியிருக்கிற்கூனுஞ்
சூரியனுமவன்மகனும்வெண்ணிலவுங்கூடிச்
சொனுமுதயமாகுமெனிற்குறளுருவமாகும்
பாருதயமுதலைந்தாந்திரேக்காணத்தினைச்சேய்
பரிதிமுடவனுங்காணிற்பாதமுங்கைகுறையா

மேருதயமைந்திலொன்பதினிற்புதனுமருவ
விதற்குடையோரவலமுறவதிவிரலனுமே. (சரு)

## அதிபல், அங்கவீனம், அழகு, முடம்.

மிதுனகன்னிபுதனமிசந்தனிற்சேயுஞ்சனியு
மேவியசாதகனதிகபல்லுடனேபிறக்கு
முதன்மறிகொண்டிறுதிவரைராசியுறப்பறிந்து
முழுப்பாவருதினவ்வவ்வுறுப்பின்றிப்பிறக்கு
முதயாதிதிரிகோணகேந்திரத்திற்சுபர்க
ளுற்றிடினுமிரவியுடன்கூடுகினுமழகாங்
கதியாகுநாளுதயமாகவிலக்கினத்திற்
கவிசேரின்முடவனெனக்கட்டுரைக்கலாமே(சசு)

## கைகால், முன்னாகப்பிறத்தல்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

புயங்கமுதயமாயுதயம்
புகுந்தோனீரைந்திடமனுக
வயந்திர்ந்தவனும்பலவீன
மாகநான்குபத்துடையோர்
ஜெயந்தானுறவுமோரையின்ற்
தீயோர்காணிற்கரமுனதா
யிவைந்தவ்வருக்கத்திராரேன்
பெலக்கிற்கான்முனிவன்பிறப்பே. (சஎ)

## பையுடன், பிறத்தல் சிறியதலை மாலைக்கண்.

சுடரோனேறிற்காரியொன்றிற்
சூழப்பாவருதிற்பையோ
டேலம்பிறக்குஞ்சோதாத்து
முதயந்தனினுமசுபருறப்



படிமேற்சிறியதலையுளனும்
பகருமிரண்டுக்குடையனென்றி
னடையவரியிலிரவியுற
வதமர்பார்க்கவிழிமாலை. (க

## மாலை, செம்படலை, கரும்படலை, பூப்படலைக்கண்.

அறுசீரடியாசிரியவிருத்தம்

கதிரவனுட்சியுறப்பவர்நோக்க
கண்ணிருண்மாலையாமேட
முதயமாய்முன்போலிருகதிர்பாவ
ருடனுறச்சேயவனேக்கிற்
சிதைகொள்செம்படலைக்கண்சனிதிருட்டி
சேரினுங்கரும்படலைக்கண்
ணதுபுகர்நோக்கிற்பூம்படலைக்கண்ணு
மெனவுரைப்பர்நன்குணர்ந்தோர் (க

## (வலக்கண் இடக்கண்)

வேறு

இரண்டொன்றேழெட்டரிகுடமு
மிடபமாகியதிலிரவி
திரண்டுமேசுபருடனனுக
வன்னோர்மறையவலக்கண்ணும்
முரண்டாமாறுமிரட்டியொன்றேழ்
முன்ராசியுமாய்மதிபவரும்
புரண்டேவரவுமவர்கரப்பிற்
புவிமீதிடக்கண்பொலிவிழக்கும். (உ

மொருமதியுங்கதியுறலக்
கினத்திலிருண்டோனிருக்கமைந்து
னமூலோனேக்கவாரல்குரு
வதனிற்கேதுவுறக்காணிற்
றெழுமீன்சோதிவண்டுறையிற்
கன்னுமுறநற்கமையாழின்
மமையோனுறவீறந்தகமாய்
வரினந்தகனுமலர்க்கொடியே. (உகூ)

இதுவுமது.

அந்தகத்தானத்தரவொடுசேயு
மமரினுநோக்கினுந்தனத்தின்
வந்தவச்சேயுமாறிடைமதியும்
வரினிடக்கண்ணதூனம்
னைந்திடவுதயமேழினிற்பரிதி
நண்ணுறக்காரியுமரவ
முந்தினும்வியத்திற்சனியெட்டிற்பானு
முன்னினும்வலக்கணுமுடிவே. (உஉ)

ஊமன்.

கடகதிரிகோணந்தியத்திற்
கடியபாபரங்கிசமா
யிடபமதியுமிரண்டிலெட்டோ
னிருந்தானெனினுமுளமொன்பா
னுடன்மூன்றிரண்டுபன்னொன்றி
னுதிக்கப்பாவரதற்குடையோர்
திடனற்றுறைவதாயிடினுஞ்
செனிக்குமூமைப்பிரசவமே. (உங)

இதுவுமது

அமரமதிலக்கினமேவ
விரண்டோன்றுயிலேயனுகரெண்டி
னிமிருபாவருதினுமெட்டோ
னொருந்தன்நிற்சாம்கு

தமரைக்கெட்டிற்கேதுவுறச்
சனிக்குறுமன்சுபர்நோக்கி
னிமையுஞ்சிலநாளிறக்கபின்னே
யிவன்றுன்பேசுமிளமையிலே. (உ

## வாய்போதல்.குழறல்;எயிறு.

மீனுடைச்சந்திரனிலசுபர்
மேவவயனைதந்திணிலுறைபோ
மாவேகொடுங்கோளாரைசந்தி
வரினுங்குழறுவாயாமால்
ஆறல்பிதனைகன்னிவிடை
யதிகன்குசன் சன்னங்கிசத்திற்
றேனையுதயமாய் வரினுக்
தசனங் காணப் பிறந்திடுமே. (௨௫

## செவிக்குறை.

### கலிவிருத்தம்.

சேயுமுதயத்துறவி ரண்டினோடாறுதி
கேயமோடுகூடுகினுநீள்செவியறும்பார்
காயரவமன்னவர்கடம்முறைகரந்தா
லாயிரமுரைப்பினு மவன்செவினிலாதே. (௨௬

## அங்கவீனம்.

### (வேறு)

விரையத்தான்றிரி கோணினுங் கேந்திரத்
தரவைச் சார்ந்தவமானவர்நோக்கவே
விரையத்தே நிலவேறியிரண்டிற்சேய்
வரவைப்பார்க்கினு மாமங்கவீனமே. (௨௭

## பாலாரிட்டம்.

### வண்ணக்குழிப்பு.

(வெட்டுணல்).

(கலித்துறை).

அரவுகன் சேயிந்த முவரொன்ருய்ப்பவ ரங்கிசத்தே
வரவினுமேபுக ரெட்டோனைக் கூடி மருவுகினும்
இரவிதனத்திநுஞ் சேய்மதி யினைந் திருப்பினுந்தான்
கரவினின் வெட்டுண்டவ னுயிர்மாயுமென் காதலியே.

(அவமானம்).

(வேறு).

நவமாகிய விடமாமதற் கிறுதிக்நலநாதன்
தவமேவிய குருவோடல தவனேக்கறத் தகையா
திவனே யுதயம் பத்திறைக்கதிகம் பலமாகின்
அவமானமு மடைவானிவை முறைகண்டுரை புகலே.

(வங்கிச நாசம்).

(வேறு).

உருத்திர முகூர்த்தமு மபுத்தமூல சித்திரையு
மொத்த அவசித்து விட நாள்
பெருத்ததிதி கெண்டமுரை நீர்தரு மமேழிறைவர்
பெற்றபவ வர்க்க முறினுங்
கருத்தகொடி சுற்றினு மெயிற்ருெடு முதித்தசிசு
கட்டளை யைமுற்று முணரின்
வருத்தமொடு மாதுர்பிதுர் வங்கிஷ மெலாமழியு
மத்தக தனத்தி றைவியே. (11)

---

(11) அவசித்து - உத்திராடம் 4-ங்கால் கருநாழிகையும் திருவோணத்தின் ஆதி நாழிகை 4-ஆம் உரை-உம்-இடம் நீர்-4 ம்-இடம் தருமம் 9 ம் இடம்.

(மாரகநிலை)

(வேறு).

முற்கூறும் புருடகண்ட வயதுகிய வயதுமகன்
முடிவுக் கேற்ப
பிற்கூறுந் தினவேதை திசைவேதை கோசாத்திற்
பிறந்த வேதை
மற்கூறும் மண்டலமுங் காலசக்கிர வட்டகமும்
வந்து கூடிற்
றெற்கூடு புகுமரண காலமன்றோ வெனவுணர்ந்து
செப்பு வாயே. (12)

(மாதுர்பிதுர்சிசு அரிட்டம்).

(கலித்துறை).

கதிர்கேது தன்றிசை நாண்முதற் பாதமுங் காணறிய
மதிமகனுர் திசைநாள் கடைப்பாதமும் வந்துமைந்தன்
குறிபெறு மேனிசிக் கன்னைபகற்குக் குலவுபிதுர்
தறிசந்தி யாகிற் சிசுவுக்கு மாரகஞ் சாற்றுவதே. (13)

(அரிட்டம்).

(வேறு).

நாலிரண்டுக் கதிபரொன்றுக் - கதிபர்சனி பாம்பும்
நாடுமிரு மூன்றதனி லொன்றினவர் தேம்புங்
காலதிசை புத்தியந்திரங் - காணுகின்ற நாளுங்
கண்டவந்த ராசிபந்தம் நின்றிடுமக் கோளுஞ்
சீலமுள திசைபொசிப்பின் காலகிரி - யாணஞ்
சேர்ந்தவர் திசைபொசிப்புக் காலகிரி - யாணம்
சாலவுணர்ந் தோரறிவர் ஞாலமிசை தானே
சங்கையற விக்குணர்தி பங்கிலுறை மானே. (14)

(அரிட்டபங்கம்).

(வேறு).

குருபுதன் கவிதிரேக் - காணமே யேறிக்
குளிர்மதி யெட்டிடை புகுந்து
மருவினுஞ் சுவர்வீட் டிருப்பினு மவனை
வன்கவி பார்க்கினு மிவனே
டொருபுடன் குருவும் வலியராய்க் கேந்திர
முறினவர் சுபரைப் பெறினுங்
கருடனைக் கண்டவர வெனவரிட்ட
பங்கமா மென்றனர் கற்றோர். (15)

(இதுவுமது.)

சந்திரன் குருபு தன்கவித் திரேக்கா
ணந்தனி லாறிடைமருவச்
சந்திரன் பூர்வ பட்சமாயிரவிற்
சனித்தவற்கா றெட்டினனுகிற்
சந்திரன் குறைந்த பகற்பிறந்தவர்க்குச்
சத்துரு துயிற்புக நிலவிற்
கந்தமு மிரண்டதற் பொன்கவிமேதை
யணுகிடி லரிட்ட பங்கமுமே. (16)

(அநுமரணம்)

வண்ணக்கவி.

உதயத்திறைபெலக்க மனையுற்றவனே டொக்க
வுரைபெற்ற சனிமகன் ராகுமே பகை
வரையொத்தவர் பதன மேகுமே யிவ
னேபிறந்த பினேடவன்பிதுர் மாதருமபிமனுடுகண்டிட
ஒழிவுற்றநுமரண மாகுமே தந்தை
வழி முற்றினு மகம மாகுமே.

மதியத்தொடு * விகர்த்த னரவொத்த வுதயத்தில்
வரவக்கிரனுமெட்டின் மேவினுஞ் சென்மக்
குரவற்காறினின்மதி பாவினும் அந்த
மானசந்திரற் கேழினுஞ்சனி யாரலுஞ் செறிவாயினுங்
மனையில் வசிக்கவிந்து பாற்கரன் விரைய [குசன்
முனையிற் கிரகணசந்திர னேர்க்கினும்
† விதுவுக்கெட்டினிலாறின் விரையத்தினிற் பகைஞர்
விரவிச்சுபர்கள் பாறு தாயினும் லக்னம்
பரவிக்கு சன்மதிய மேயினுங் கும்ப
மீதுமொண் கலைமீதுமேறிவி யாழனும் பகையோடுகன்
விதித்தக நெய்யுடை குளம்பூசமாய் ரண்டிற்[பெற
குதித்து நிலவிருந்து வாசமாய்
இதனுக்கேழினிற்சனி யுதிரத்தவனு நிற்க
விவர் திட்டியும் படைக்க நேரினுஞ் சுப
ரவர் திட்டியுமிறக்கப் பாரினும் பெற்ற
விளமையாகிய மகவுதாயது மரணமாவது தவறிவிடாதி
யிறுத்துப் புடைத்தெழுந்த கொங்கையே [டை
முறுத்தும்படிக்கியைந்த மங்கையே. [மன (17)

(பிதுர் அரிட்டம் சகோதர அரிட்டம்).

தந்தந்த னந்தந்த தத்தத்த தானன
தந்தந்த னந்தந்த தத்தத்த தானன
தந்தந்த னத்தந்த தத்தத்த தானன தனதான

அஞ்சொன்ப தெட்டுஞ்சு பர்க்கென்று தானுற
அஞ்சொன்ப தெட்டின்னு ளர்க்கொன்றி மேலும
வன்றந்தை யிட்டங்கொ ளக்கொண்டு வாழ்குவ

* விகர்த்தன்-சூரியன்
† விது சந்திரன்-நெய்-சித்திரை-உடைகுளம்-பூராடம்.

அஞ்சொன்சதிற்கன்னு நச்சென்றிராகுவி[னெடுநாளும்
ருந்தங்கி சத்திற்பொ ரத்துன்பு மாயினு
மங்கென்ற ரத்தற்கொ ழிக்கின்றி லாமையும் வருமாயின்
* மஞ்சன் பிறத்தற்கு முற்கொண்ட தாயினு
மஞ்சன்பி றற்குற்ற பிற்கொண்ட தாயினு
† மஞ்சன் பகட்டிற்கு திக்கும்பி தாவுயிர் நிலையாதே
வந்துங் கிரணைத்தன் சரத்தொன்றி மாபெல
முந்தும்பி துர்க்கிங்கு ரத்தொன்றி லாமலும்
மைந்தன்னி ருப்பன் னெனச்சொல்லும் வேதமும்
கஞ்சம் விரிக்குங் கரக்கையி னுதவன் [நெறிபாமே
வஞ்சந் தரிக்குஞ் சனிக்கொன்ற மூவிடங்
கண்டும் பிறக்கின் செவிக்கென்ற நாதனுங் குசனோடு
‡ கண்டம் பெறற்கொத்தி ருக்கின்ற போதினு
முண்டன் பிழைத்துப் பினைக்கண்ட சோதரங்
கண்டுஞ்சும் வர்க்கத்தினைக் கண்டி தோதுதல் முறை
கொஞ்சம் மரத்தன் பதிற்றொன்றி னுதியைப் [பாமே
பங்கும் புணர்க்கின் முதற்றுன்று சோதரங்
கொன்றும் படிக்கண்ணி வர்க்கந்த மேவருந் தவறாதே
குன்றுங் கனச்சக்ரங் கொண்டு மேல்வனங்
கொண்டுங் கதித்துக் கலன்கண்டு வார்வலி .
குன்றும் படிக்கொத்தெழும்புங்குபாசலமடமானே (1௮)

(மரண ஏது).

ஒன்பதின் சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

¶ அலவனு மிடைந்துபாவ ருடனுற வதிந்துமோரை
யதினிடை யமைந்து காரியே
குலவுசிகியும் பொலாரை பனுகிவசை பொன்றநாவு

* மஞ்சன் - புத்திரன்
† மஞ்சன் - கரியவுருவத்லைக் கொண்ட இயமன்; சினையாகுபெயர்.
‡ கண்டம் - 4-ம் இடம்
¶ அலவன்- சந்திரன்.

கொடியவ ரவின்கணுனுமே
யுலவுதுயி னின்றுபாவ ரனுகிலதி வஞ்சமான
வுயிர்மரணம் வந்துகூடுமே
யிலகவதி லொண்சுபாளு முறையிலவ னன்றுசாத
லினிமையிது கண்டுதேறுமே. (19)

(இதுவுமது).

பவனவதி பன்சுரேசன் புகரிவர்களுங் கெடாது
பதியவும் நிறைந்த வாயுளே
பவனனவ னொண்குமாரனு திரனு மடங்கிடாது
பலமது பொருந்து மாகிலே
தவமொருப தென்னவோது தினமது தவர்ந்தபோது
மதிவருட மென்றுதோனுமே
யிவன்மரண மென்றகால மிதுமறை புகன்றநீதி
யிருளுலவு கின்றவோதியே. (20)

ஆயுர்த்தாயம்.

(வேறு).

தேவமானுட வரக்க மண்டலங்களிற்
செறிந்திடு சமயங்கண்
டாவதாந்திசை கோள்களி னுணறிந்
தபலமுஞ் சுபமாயந்து
சாவதா நிலைகூறுத லன்னதி
தாண்டிட மயிர்ப்பாலம்
போவதா யுணர்ந்தா யுர்த்தாயப் பலன்
புகன்றிட லெளிதாமோ. (21)

கிரகசகிதாதிய பலன்.
வண்ணக்கவி.

அட்டமத்திரவிவரில் வெட்டையிற்சாத்திறுயு
தத்தினிற் சரீரபய மாயினுன் சொற்பத்
தத்திலிரு கண்ணில்வரு நோயினுன் பெற

லானதந்தை யினனிந்து வாகினுங்கிலேசனம்பில்
அலக்கணுஞ்சலக்கழிச்சல் ரோகமே துயர்
புலப்படுஞ்சயத்தில்வைத்த வாகமே.
எட்டினிற் குசனுறவ வத்தினிற் கருவியன
லெட்டினிற்பகைத்தபேயும் நாடுமே பட்டு
நட்டமுற்றிடுங்களத்திரம் வாடுமே யுட
லேயிழைத்து மூணிறைச்சி யேகளிப்பினுதரத்தி
னிச்சைகொள்சிநேகிதத்திற் றுன்பமே புத
னச்சியுளதிற் சுகத்தி வின்பமே
இட்டனற் குணத்தன் வித்தை கெட்டவிற்பனத்தன்மற்
யித்தலத்தரசர்கள்ச மானனே குரு [றை
வித்தகர்க்குரட்சகன்சன் மானனே அறி
வேறுமாதவன் நீரகாவிரி ஸ்நானவாயுளுமேமபிலாமையு
மெய்த்தவன் புகர்க்கரசி லேகனம் பினர்
வைத்திலன் பெருத்தசுப வாகனம்
தொட்டநதி தீரமூழ்குந் துட்டமனையாளினுலுந்
துக்கமுளனச்சனியும் நண்ணுமேல் வினை
புக்குழலும்பட்டினிகொண் டுண்ணுமே துர்த்
தோசவினையாசனவி யாதி யவமானமனைத்
துண்டனவன்றந்தையுமற் பாயுளே சுர
கண்டமுளனுயிலுந்தீர்க் காயுளே. (22)

எட்டாம் பாவகம் முற்றிற்று.

ஆ. விருத்தம் 279.



# ஒன்பதாம் பாவகம்.

(கலிவிருத்தம்).

முன்பிக லவுணரை முடித்த வேற்படை
மன்பெருங் கருணையான் மகித லத்திரே
ரன்புற வட்டமப் பலன றைந்துமே
லொன்பதாம் பாவக மோது கின்றதே. (1)

(பிதுர் மாரகம்).

தந்த ஞதனன தந்த ஞதனன
தந்த தந்ததன தந்தன தன
தந்த தந்ததன தந்தன தன
தந்த தந்ததன தந்தன தன
தான தானனன தான தானனன தந்தன.

மைந்தனே யுதய முந்து நாளைவிட
அந்த வெட்டுமொரு வஞ்சமே சொல
வந்த வத்திசையும் நஞ்சமே யிது
சிந்தை வைத்திடுதி கொஞ்சமே எதிர்
வாதிலா தகலை யோதியேயுணர்தல் பஞ்சமே
மந்த ரேடுவரு மொன்பதாதி யிவர்
தங்க டானமறைந் தென்றுமே பத
னங்க ளேறிவிரைந் தொன்றுமேல் கதி
ருங்கு லாவிவலி குன்றுமே மக
வானபோது நிலமீதிலே பிதுரும் பொன்றுமே
ஐந்தி னுவினுத யஞ்சு வானுவனன்
மிஞ்சு சேய்சனி பொருந்தவே பெற்றுக்
கொஞ்சு மாதுரு வருந்தவே நாலி
னெஞ்சு டாபாக டிருந்தவே சுத

ஞரு வானியம ஞருவானுயி ரருந்தவே
மந்தி பாடவிரு ளுண்ட கார்மனையின்
வண்ட லோடுகுழ னங்கையே மலர்ச்
செண்டுபோல நிமிர் கொங்கையே யெழில்
விண்டு வானவரின் றங்கையே எதிர்
மாரகங்கள் வரு மாறுகண்டமிதுமங்கையே. (2)

## (பிதுர்மாரகமும் பகையும் பாக்கியமும்).

தந்ததன தந்ததந்தன—தனனதன தனனதன
தானதந்தத் தானதனன தன
தந்தனந்தனந்தனன தந்தனந்தனந்தனன
தந்தனந்தனந் தனதன்.

இந்திரவி மந்தனுமொத்தே - உதயமுந்தி உதிர னேந்தி, னேகினுமெட் டொன்பதுபத்தே பவ—ரிவ் கிருந்து தயங்கவொன்பதி லும்பொருந்தி யவன்கரந் துற, என்றுகுச ஞென்ப தேறினும் - ஐந்தொன்பதாதி செங்கதிர்கூடி, யேசனியன் பார்வைமீறினும்.

மந்தனில மைந்தனிரவி யொன்பதினைந்து மன்றி யுமைந்தின், வந்திவர்களும் பாவினுங் கர்ம—மன்னு மொன்பதின் மன்னனுஞ்சனி, யென்னவுங்கதிர் துன்ன வும்பெறின், மற்றபவரும்பவனமே ஒன்பதினிலன் றெ ம்படுங்கால மாயுமே பிதாபுவனமே.

தந்தையும் பிறந்தலக்கினம் மறைந்தவிடம் பிறந்த சுதன், ருனும்பகையாவன் விக்கினம் செய்ப—சன்ட ஞென்பதி லுஞ்சுகந்தனி, லொன்றங்குளிகன் பெலம் பெறத், தன்பிது ருவின்சுகமெலா மனமுத லாய்வினை நிலமுந், தானியமழியுமே கொலாம்.

விந்தைபதி ஞென்றிறுதியாய் சுபருமாகி யின
டுபலமாய், மேவுகேந்திர முறுதியாய் உரை—விண்ட
நாவிறை யைந்துளானவர், தன்றிசாதிசை வந்தபோ
னின், மிஞ்சுதனமுண்ட ரிவையே ரஞ்சிதமொழி ய
சனவிழி, வேதமுதலாந் தெரிவையே. (

பிதுர்தேசாந்திரம்.

வேறு.

பகலிடைப்பிறந்த சாதகன் றனக்குப்
பரிதியுஞ் சரமதி லேறி
மகனுமங் கவனைநோக்கி னுநவத்தோன்
வான்சுட ரொடுசரம் புகினும்
அகனுவன்றந்தை தேசசஞ் சார
மாகுவன் செனன காலத்தி
னிகலறு சனியைக் கொண்டுதா னுரைப்பா
ரிரவினிற் பிறந்த சாதகற்கே. (

(பிதுர் துவேசம்.)

கலிவிருத்தம்.

சனியுந் தந்தையுந் தாலத்தின்மைந்தனுஞ்
செனனநாதனுஞ் சேரப்பகையுமாய்
நனியும் பாக்கியம் நாடியிருந்திட
வினிய தந்தைக் கிவனிகலாவனே. (

பாக்கியம்.

பவனனுதனும் பாக்கியஞ் சேரவே
தவனுமோமையிற் சாரினுமேதனத்
தவனுமோமையுந் தான்சலவோரையா
யிகலும் வாலிபத் தெய்துவன் செல்வமே. (

(இதுவுமது.)

மூலநாதன் முதல்வனுங் கேந்திரஞ்
சாலவேதப ருந்தன நோக்குற
வேலவேவிய மெய்தச்சுபர்களும்
வாலிபத்தின் மருவுவன் செல்வமே (7)

(இதுவுமது.)

நாலினுக்குடை யோன்சுபரோடுற
மேலுமன்னவர் தன்றிசை புத்தியிற்
கோலுஞ் செல்வங் குலவுறுங்காலமே
பாலுந்தேனுங் கலந்தசொற் பாவையே. (8)

(கிரகசகிதாதிய பலன்)

வண்ணக்கவி.

செங்கதிரவன் குலவி யொன்பதிலிருந்துலவிற்
றேவதாமகிட்சிபூசை பண்ணுவான் மைந்த
ராவலானினத்திறுசை நண்ணுவான் ஆயுட்
சென்று தந்தைபிறந்தபுண்படுவிந்தை கொண்டவனாக
சேரலாபமித்திரதன பாக்கியன் யிவ [னெண்மதி
னூரிலாதி பத்திபமுள யோக்கியன்
மங்கலனிருக்கிலவ மும்பெறுமசந்திபவழி
வங்கிசமழிக்கவல மேவலான் பிறர்
பங்கினும்பொருட்கவரு மாவலான் அவ
மாகுபிதுர் சோதரவி நாசனெனலாமறிஞன்
மானுறச்சமர்த்தனுத்த ரௌத்திரன் தன
மேவிவன்சயத்தனுஞ்சற் பாத்திரன்

துங்கமுள பொன்குலவி யங்குறினுமந்திரியெனுஞ்
சூரனன்னதானமுத லீகையான் ராஜ
காரிபவலனுகவரு வாகையான் மிகத்
தூயகவியாகிலரன் சேவைபுனலாடல்புரி
தொந்தமுங் களத்திரவி லாபமே சொல்ல
வுந்திரமிலாதருவும் லோபமே.
பங்குறையுமேலதர்ம னிங்குபிறராதரவிற்
பாசமிலனேமலைவில் லாமையே பிதுர்
தோசமுளன்சேயருமி லாமையே கொடும்
பாயசிந்தை சகோதரர்துயர் கோபனிந்தையனுகுமென்
பாரியுன்னயனமிந்திர நீலமே பொய் [றுணர்
தேருநுண்ணிடையுமிந்திர சாலமே (9)

ஒன்பதாம் பாவகம் முற்றிற்று.

ஆக விருத்தம் 288.



## பத்தாம் பாவகம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

முத்தாபரணத் திகழ்ந்தமரை முகைபோற் சிவந்த
தனக் குறமின்
னத்தாறிரண்டு புயத்தழகு நாளு மறவா
துளத் திருத்தி
வைத்தே பிதுர்பாவக முரைத்தா மற்றுமுலகோ
ரினி தேத்தப்
பத்தாமிடப் பாவகப் பலனைப் பரிந்துசிறிது
பகருதுமே (1)

(சுபாசுப கர்மம் தொழில் யோகி).

த்தா தனத்தனன தத்தா தனத்தனன
தத்த தனத்தன தத்த தனத்தன தானன தன
தத்த தனத்தன தத்த தனத்தன தானன தன

பத்தா மிடத்திலெதி ரெட்டாதி யைப்பவர்கள்
பற்றினு மத்தல வுத்தமர்கெட்டிட நீசமாய் அவ
முற்றிரு ளிட்டியை வைத்திட வேவெகு நேசமாய்

பாவாதி கட்குமொரு மாபாதகச் செயலிற் [துயர்
பரிபவ முற்றினு முரிமை யிவற்கென வெண்ணுவான்
பெரியதெனச்சொலி திரிபுவனத்திடை பண்ணுவான்

பத்தாதி யைச்சுபரு மொய்த்தே ழினிற்பவனைப்
பற்றியிருப்பினு முத்தமமெய்ச்சுப கர்மமே யிவ
னத்தியியற்றுவ னற்சிவ வர்ச்சனை தர்மமே

பாரான நற்குமக வேதா னிருக்கவொரு
பதினு மிருத்தவ ரிருகண் விழிக்கினுமாடுவான்புண்ய
நதிகள்கடற்றுறை புதியபுனற்றட மாடுவான்

பத்தா மிடப்புதன் வியத்தே மதிக்கடவுள் [சன்ம
பதியி னருக்கனு மதிசனிபொக்கினுஞ் சன்மமே
மதனி லிருக்கினு மவனு மிருக்கினுங் கன்மமே

பாராயிவைசரமு மோரேழ் கிரகமுறப் [பத்தி
பற்பல நகரினு மற்றுள நலநெறி செல்லுவான்
னிற்பவரிணைவிழி வைப்பவர்தொழிலதுசொல்லுவார்

வித்தாரமால் புகர்பொன் சத்தான சேயிதன் [நிலை
மெய்த்தொருபக்கமு நிற்கிலவன் சிவ யோகியே
வைத்திதனைப்பல மெத்தவுரைப்பவன் யுகியே

வேதா வமைத்ததல யாதோ தனித்தவுரு [சா
வித்து ந வொத்தொளிர் சித்திரவிடைக்குயிலன்னமே
புத்த முதத்தினை யொத்த விசித்திர சொர்னமே

(யாகஞ் செய்பவன் மோட்ச மடைவன்).

வேறு.

ஒன்பது மேலிதற் குடையவர் சேய்சனி
பின்பது வர்க்கமாய்ப் பிறக்கில் யாகவான்
பின்பதா மிடமென விபுலன் மாலுற
வொன்பது சுகஞ்சுப முறினு மோட்சமே. (3

(நரகஞ்சேர்பவன்).

வேறு.

பாசமெட்டிற் பனிரெண்டி னுதிபர்
நீசமுற்று நிலைக்கமதன் பிர
காசமுற்றுக் கனிய நரகமே
வாசமுற்று மயங்குவன் மங்கையே. (3

(யாத்திரை).

சரத்தினுபினுஞ் சாற்றுந் தொழிலினு
முரத்தவேழுவ ருறினும் வியத்தினின்
நிரைத்தகன் மத்திருப்பினு நான்குமே
சரத்ததாயினுஞ் சாதகன் யாத்திரை. (5

(சுமைசுமைத்தல்).

ஒன்றுநான் கினிரவியு மோர்ந்துற
நின்றவேழிடை நீலனும் வாழ்ந்திட
சென்றுசென்றுழி சேர்ந்த மிருசுமை
துன்றுமாறு சுமந்து திரிவனே. (6

## ஆக்கினை.

(வேறு).

சத்துரு தொழிற்றுயிலி னுக்கதிபரிங் கிவர்கள்
சற்சன ரலாதுதபமா
யொத்திறைவனேமறைய புத்திரனிலத்தனென
வொக்கவிருநான் கனிகினுஞ்
சுத்தமதியோயிறை வற்குமொரு நாலினிடை
துட்டசனிகேது வரினும்
இத்தரையின்மீதரசர் சிட்சையுளவாமறிதி
யெற்கினிய புத்தமுதமே. (7)

(கிரகசைதாதிய பலன்.)

(வண்ணக்கவி.)

பத்தினிலாதித்தனுறப் பெற்றவன்றனத்துரிமை
பற்றிய சமர்த்தன்மன்னர் சேவையான்— வினை
யத்தினின் முடித்துவிடுந் தேவையான்— பிதுர்
பாவகன்மியுமாவனெண்மதி மேவினுங்கிரகவாழ்வுயர்
பாவகன்மமிலாதவன்சி லேத்துமன்—கதை, [றிடு
காவியம்பெறுமாதுர்கன்மகு லோத்தமன்.
சித்தசனினுக்கழகு பெற்றவன் பகைக்கடல்
செறுத்தவன் சமர்த்தொழில் கொண்டெய்பவன் பற்
றெறுத்திடுமகத்தினைத்தியுஞ் செய்பவன்— பிது
தேவர்பகையாலனவிலே கருவிவாதையுளன்
சிந்தைகூரியற்குவித்தை தன்மமே — சில
முந்துகோசாத்தியட்பஞ் சென்மமே

---

(3) மின்-மீனராசி. விபுலன்-விலமகன்
ஒன்பதுமேல் பத்தாமிடம்.

சுத்தகுருநிற்கவுமி ரத்தினமொடு நற்பசு
சுகத்திலுந் தனத்திலுமி குத்துளான் — அன்
பகத்திலுங் கணித்தநூல்வ கித்துளான்—முனஞ்

சூானுர் தருமேவில்ராஜச மானனும் கினைகாரியாதிகள்
சூட்சுமங்தெரிந்தவாயுட் பாக்கியன் — மீ
னுட்சியிலழகனுஞ்சி லாக்கியன்

தத்துசனி பத்திலுற வொத்தபிறரைத்தழுவி
தற்புநடவர்த்தகமுந் தேடுவான் அசுர
நிற்றொழினடத்துபவ னுடுவான்—றொழில்

தான்முடங்குங்கான் முடங்கும் நான்முகங் கொள்வான்
வணங்குந், தம்புருவின்சொல்லிசைவ ராகியே—புக
லும்புருவம் வில்லொடுஞ்சி நேகியே. (8)

பத்தாம் பாவகம் முற்றிற்று.

ஆக விருத்தம் 296.



## பதினொன்றும் பாவகம்.

(கவிவிருத்தம்).

* காரோ தரத்தணைகொள் கண்ணைய னுதி
நாகாதி பற்கிறைமை நங்குரு நாதன்
வாகார ருட்கொடு தொழிற்பலன் வழுத்தி
யேகாத சப்பல னெடுத்தினி துரைப்பாம். (1)

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

இலாப மிசைமதி பாலன னுகிடி னேழில் கலைபுக
நேர்மையா
லுலாவு குருவரி னேனும் விதரண புராண காவிய
மோதலாற்

* காரோதரம்-கண்ணைசெவிபாகச்செண்ட — சர்ப்பம்.

கலாவு தருமகாதி நயமுள ராகு புதகுரு
சூழினுஞ்
சலாப மிருபொரு ளுடமெவர்தன மேவு திசையவை
தானரோ. (2)

மேபவிசை யதலாதி பறுமுத யாதி யொடுதன
மேவவே
ஆயவனு நிதி தான்யவகைசுக மானபலபொரு
ளுசமே
மாயகுளிகனு மாதவனுமொரு காமமனுகிடின்
மாதரே
நேயமதி னழிவாகு மவனுட வீடுபொருள்களின்
னீதியே. (3)

என்றிமொடு சனிமைந்த னனுகியி யக்குமாயம
துறையுமே
லன்றுவசைதனி லேந்தினதி பதியம் பொனுமின்மக
வானுமே
சென்றுபிணைபட நின்றநெறிவழி செம்பொன்வலியது
பொன்றுமே
குன்றுமிணையவ வென்று நிலையெது கும்பகனதன
வஞ்சியே. (4)

வஞ்சமிகுசனி தந்தை குசனிவர் வந்துக்ரும
முறைந்திட
கொஞ்சமதிரவி ரண்டிலத்திபினுங் கொண்டகேந்திர
நான்கினும்
அஞ்சுபரு மிலையென்ற பொழுதினும் மந்தவரசர்க
டண்டமாய்
மிஞ்சு பொருள்பல வெஞ்சுமென வுரைதந்த துன்றுதி
வேதமே. (5)

கடன்.

(வேறு).

இடக்கனுறியா றெட்டுவியத்தவ
முடைத்துமீசத்த மனமுமோங்குறக்
கிடைத்துவாழினுமே கெடுவான்கடன்
படைத்துவாழுகிற் பாக்கியனுகுமே. (6)

(போகம்).

அபலந்தீர்விரை யத்து நல்மேலாருறச்
சுபரும்பார்க்க வதற் கிறைநாயனு
யுபலமாகி னுயர் சயனச்சுகம்
விபுலமீது விளங்குவன் போகமே. (7)

(இதுவுமது).

இதமதாய்த்தவ மெய்திபெட்டாதிபன்
மதியினேடவன் மைந்தனுமோக்குறப்
புதனுந்தான்விரை யத்திற்பொலிவுற
நிதமுந்தான்சயனச் சுகம்நீளுமே. (8)

(கிரகசகிதாதியபலன்)

(வண்ணக்கவி).

துன்றுபதி னொன்றதனி லென்றுற மிகுந்தபொருட்
டொந்தமுடன் மைந்தர்களு முண்டவன்-திரு
நிந்தையில னுளடிமை கொண்டவன்-அதி

சுந்தரமுளன்றைரி யன்செவிடனிற்றுதய
சுத்தனதி யாயுண்மிகு சித்தியான்-றன்லை
பெற்றவள்வழியி லாப விர்த்தியான்

நின்றகுசனங்குறமி குந்தநலமுந்தலமும்
நெஞ்சினிடைபுந்துய சறுந்தவன்-வி
வஞ்சகமிமுந்துடன் பிறந்தவர்-தங்க

நிட்களமதானபொரு ளைப்பெறுவனுயபுத
விற்கிலிவன் டந்துசன முந்துமே-கல்வி
கற்கவலனுளடிமை சொக்கமே

பொன்றகைமை கொண்டிடவெழுந்தமறையர்தனர்கள்
புந்தியுமகிழ்ந்தரசி னங்களே-தரு
மைந்தரினுவந்திடுத னங்களே-புகர்

பொங்கவெதிரும்பொழு தடங்கலுசிரம்புதுயர்
புண்களுறுமென்றுமதி காரமே-மிக
வுண்பவனும்வெங்கலயா பாரமே

என்றுமகனென்றிடவு டன்பிறவிவந்தவர்க
ளெஞ்சுறுமிவன்றிருடர் வஞ்சமே-யெதிர்
வஞ்சனையிலுண்டுதன மிஞ்சுமே-காளி

னிங்குயிர்வதஞ்செயு மவன்செயலிதென்றுணர்தி
யிங்குனதுகந்தரமுஞ் சங்கையே-பொர
வுங்கனிவு கொண்டமட மங்கையே (9)

பதினொன்றும் பாவகம் முற்றும்.

ஆக விருத்தம் 305.



## (பன்னிரண்டாம் பாகவம்.)

கலிவிருத்தம்.

* மரையத்தானனத் தானையோர்வன்சிறை
புரைவைத்தானிரு பூங்கழல்வாழ்த்தியே
உரையிற்றுன்பதிற் றொன்றினையோதினம்
விரையத்தானப் பலனை விளம்புவாம். (1)

* மரை-அத்தான்-அன்னத்தான் எனப்பிரிக்க.

(தனிமை)

வேறு.

இனனுதியவெழுகோணிலே சரமாகிய விரையங்
கனமாயுறவனை செய்பிதுர்மனைசோதர முதலாஞ்
சனமே யிலையவனே யொரு தனியாயுளனெனவே
நினைவாயுரை மதிபோனுத னிலவேறிய நகையே. (2)

(வாகனம் சயனம்.)

விரையாதிய னெருநாலதி பனைமேவுற மிகவே
வருவாகன முளதாகுவன் மற்றும் பனிரெண்டோன்
தரைமீததி சுபவர்க்கமுந் தானே பெறமானே
நிரையாகிய சயனச்சுகம்நேரும் பலனுமே. (3)

(விரையம்)

(வேறு).

முன்சோதரமனைக்கான னத்தலத்தேகுசனுகின்
முறையற்றிருகரவிற் றுணைவரினற்புலமானும்
பொன்சேரினு மறையோரினும் புத்திராதியரானும்
புதனெய்துற வணிகந்தினுமகளிர்வழியானுஞ்
சுன்சேரினும் வினையான்மதிக்கவனன்னை தன்னெறியிற்
சொல்லற்கரும் பொருட்சேதமு மல்லற்படவுளதே
தென்சேர்விரையத்தாதி பன்சன்மம்புகச்செறினுஞ்
செஞ்சாலியுநவதா னியமழியும் மெழிற்றிருவே. (4)

(வேறு)

யீராறினுக்குடையோன் பவனுகிப்பவரெய்த
வோராமனு நீசத்தொழிலாலே சிலவுள்தே
யீராறினின்மதிமால்புக ரிறையெய்தினுங்கருமப்
போராலவன்றிருவுங்குறை வாமென்றனர் பெரியோர்.

## இதுவுமது.

ஒன்பானிறை யைந்தேறினுமைந்தாதிப னென்பா
னின்றாகினும் ரண்டாமிடம் நின்றாகினுமூவர்
அன்பாயுதயந்தானுற வந்தாலவன்பிறர்பால்
வம்பாகியகடனேகொடுத் திழைப்பான்றனமழிப்பான்.()

## இதுவுமது.

என்றானனத்தானும் பனிரண்டா மிறைரண்டிற்
பொன்றாதுறவெட்டிற் பதினொன்றாதிபொருந்த
நன்றாமிவன்கடனே பொருளெல்லா முடனல்கி
யன்றே கெடுவானென்பதறிந்தோதுவரன்றே. (7)

## வேறு..

தோற்றுபன் னிரண்டா மிடத்தோன்வலி
யேற்றிரண்டாமிடத்தினி லெய்துமே
லாற்றலோடு நிலத்திற்றனம் புதைத்
தேற்றமாயிருந்தேயிவன்வாழுமே.

## வண்ணச் சந்தம்.

ஆதவன் கடைக்கலத்திற் போதினுங் குலக்கெடுதி
அங்கவீனனும்பிதுர்வி ரோதியே கொண்ட
மங்கைமலடாய்வருத னீதியே மதி
அங்குறையில்வங்கிச குணங்களி லன்வெங்கண்வினை
யங்கடனுளன்வறுமை தங்குமே மாது
ருங்கொடுமையாய்விரையம் பொங்குமே
பூதலமகன் குலவ ஸ்ரீவதை செய்பாதகனும்
புண்ணியசகோதரருந் தாரமே யிவர்
மண்ணிலழிவாரிதுரு ரூரமே கண்ணிற்
பொங்குதுயருங்குடிலந் தங்கிதயன் புந்திவரிற்



லுந்திகழுங்குய்யநோய்மி குந்தவன்

சூதுளவயிற் றுவலி யேயுளனி னத்தர்பகை
சுற்றுமமரர்க்கிறைவ னிட்டமே கொளி
னுற்றவன் சகோதரர்கள் நட்டமே வீனிற்
சுற்றியே பிழைப்பன்மறை பற்றிய குருக்களாலுஞ்
சொற்கடவு புத்திரராலுஞ் சேதமே
கற்பமுற நடத்தலவ னீதமே.
ஒதுபுகர்க்கேசயன மாதர்சுகமேயிலது
வொண்புதைய லுண்டதனிற் பங்குமே வரில்
வெம்புசுரங் கொண்டுதுயர் முங்குமே யிவ
ஞெப்புறு சொலிற் பிறழ்வு சொற்பவ வமிர்த்துமனை
யுட்பகை சினத்தகுணந் தோணுமே யிது
எட்பிளவும் பொய்ப்பிலது காணுமே. (9)

நூலாசிரியர் வியப்பு.

தன்னத் தனத்தத்தனத் தந்ததானன
தன்னத் தனத்தத்தனத் தந்ததானன
தன்னத் தனத்தத்தனத் தந்ததானன. தனதான

கல்லொத்தகத்தைக் கரைத்திங்குபேதையி
னுள்ளத்தினிக்கலை யுணர்த்தும் பிரானயன்
கள்ளத்தனத்தைத் தெரித்தங்கனே சிறை யிடுவீரன்

மல்லொத்தவடிவிற் புனத்தின் கனேகியு
மல்லொத்தகுழலிக் கிசைத்தன்று தாடொழ
வல்லக்குமரனுற் றெதிர்க்கின்ற சூரனை யடுவீரன்

எல்லைக்கடவுளைப் பிடித்தும்பரேகவும்
பல்லைப்பறித்திட்ட வற்கொன்றுபோதனை
யெல்லைப்படுத்துங் குகக்கந்த தேசிகன் புகழ்யாவுஞ்

சொல்லித்துதித்துப் படித்திங்குபேசுதல்
[illegible] [மே
தொல்லைப்படுத்திச் சுகத்தோன்றிவாழ்வது பெறலா

Sri

Sri Kasyapa Astrological Series:-1.

# JYOTHISHA RAHASYA

(TAMIL)

(Containing the various principles in determining the strength of a Bhava and the effects of a Dasa.)



BY

N. R. THIRUVENGADACHARYAR, B. A.,

SCIENTIFIC ASTROLOGER,

SRI KASYAPA ASTROLOGICAL BUREAU,
20, Andiappa Naicken Street,
Choolai, Madras.

 [*Price Re. 1. As. 8.*

1932

# விஷய அட்டவணை.



# முகவுரை.



இங்கு பாவபலநிரூபணம் என்ற தலையங்கத்தின்கீழ் சொல்லியிருப்பதை பின்வருமாறு அறிய வேண்டும்:—

1. எந்த பாவத்தினுடைய சுபாசுபத்தை அறிய வேண்டுமோ அந்த பாவத்தை எடுத்துக்கொண்டு அந்த பாவத்திற்கு எவ்விதம் இருந்தால் சுபம், எவ்விதமிருந்தால் அசுபம் என்பதை இங்கு கூறிய ரூல்கள் ப்ரகாரம் முதலில் அறியவேண்டும். இரண்டாவதாக அந்த பாவத்தின் அதிபதியை கவனித்துக் கொண்டு அந்த அதிபதிக்கு ஏற்பட்டுள்ள ஸ்தான க்ஷேத்திர சம்மந்த பலன்களை சொல்லியிருக்கிறபடி கவனிக்கவேண்டும். இம்மாதிரியாகவே ஒவ்வொரு பாவத்திற்கும் ஏற்பட்டுள்ள காரகனுடைய பலத்தையும் இங்குகூறிய விதிகளை அநுஸரித்து சொல்ல வேண்டும். ஒவ்வொரு பாவத்திற்கும் காரகர்கள் இப்புத்தகத்தின் முடிவில் கூறப்பட்டிருக்கிறது.

ஆகையினால் எந்த பாவத்தினுடைய பலன் பார்க்கவேண்டுமோ, அந்த பாவத்தினுடைய காரகன், அதிபதி, பாவம் முதலியவைகளை இங்குகூறியுள்ள விதிகளை அநுஸரித்து நன்றாக யோசித்து நிர்ணயிக்கவேண்டும்.

2. இப்புத்தகத்தில் பாவம் என்று எங்குகாணப் படுகிறதோ அதை கணித மூலமாய்தான் அறிய வேண்டும். எப்படி கிரகங்களுக்கு ஸ்புடங்கள் கணிக்கப்படுகின்றனவோ அதேமாதிரியாக ஒவ்வொரு பாவத்திற்கும் ஸ்புடங்கள் கணிக்கிறது வழக்கம். ஆகையினால், ஒவ்வொரு கிரகமும் இத்தனாவது பாகை, கலை, விகலையில் இருக்கிறது என்று எப்படி கணிதமூலம் அறிகிறோமோ அதேமாதிரியாக ஒவ்வொரு பாவமும் இத்தனாவது பாகை, கலையிலிருந்து, இத்தனாவது பாகை, கலைவரையில் இருக்கிறது என்று கணிதமூலமாய் அறியவேண்டும்.

ஒவ்வொரு ராசியையுமே ஒவ்வொரு பாவமாக எடுத்துக் கொண்டும் அந்தந்த பாவத்தினுடைய பலத்தை சொல்லுகிறது வழக்கத்திலிருக்கிறது. இந்த வழி சில சமயங்களில் தவறுதல்களுக்கு இடம் கொடுக்கிறதால் கணிதமூலமாகத்தான் ஒரு பாவத்தின் ஆரம்பம், மத்திபம், முடிவு இவைகளை நிர்ணயிக்கவேண்டும்.

3. ஒருதசையில் ஏதாவதொரு புக்தியில் என்ன பலன்கள் சித்திக்கும், என்பதை அறியவேண்டுமானால் முதலில் பொதுவாக அந்ததசையில் அந்த புக்தியில் என்ன பலன்கள் கூறியிருக்கப்பட்டிருக்கிறதோ அதை கவனித்துக் கொள்ளவேண்டும்.

அப்புறம் தசாநாதன் புக்திநாதன் இவர்களுடைய ஆதிபத்யங்களை லக்ன ரீதியாகவும், சந்திர லக்ன ரீதியாகவும் அறிந்து கொள்ளவேண்டும்.

முகவுரை

தசாநாதன் புக்தி நாதன் இவர்களுக்கு, துஸ் தானுதிபத்யம் (6, 8, 12-க்குடைய ஆதிபத்யங்கள்) ஏற்பட்டு, ஸ்தான, க்ஷேத்ர பலங்களும் குறைவாக இருந்தால் பொதுவாக அந்த தசையில் அந்த புக்தியில் சுப பலன் கூறியிருந்தால் அது நடக்காது என்றும், அசுப பலன் கூறியிருந்தால் விரைவாக நடக்குமென்றும் கொள்ளவேண்டும்.

எங்கு சிலவிசேஷ விதிகள் என்று காணப்படுகின்றனவோ, அவைகளையும் நன்ருய் கவனித்து ஒரு தசையில் குறிப்பிட்ட ஒரு புக்தியின் பலன்களை நிர்ணயம் பண்ணவேண்டும்.

4. இப்புத்தகத்தில் ஒரு ஜாதகத்திற்கு பலன் சொல்லும் காலத்தில் வெகு முக்யமாக கவனிக்க வேண்டியவைகளை மட்டிலும் அடியேனுடைய சிற்றறிவுக்கு எட்டினவரை கொடுத்திருக்கிறேனுகையால் இப்புத்தகத்தைப்படிக்கும் பெரியோர்கள் இதிலுள்ள குற்றங் குறைகளுக்கு அடியேனை மன்னித்து சாராம்ஸத்தை கிரகிக்கும்படியாய் பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு,

நி. ரெ. திருவேங்கடாசாரியார், பி. ஏ.

# பிழைத் திருத்தம்.



| பக்கம். | பிழை. | திருத்தம். |
|---|---|---|
| 5. | ஆதிபத்யமும் | ஆதிபத்யங்களும் |
| 8. (18-ட.) | ஏற்படுமென்று | ஏற்படுமென்றும் |
| 8. (19) | தசாநாதனிருக்கும் மிடத்திருந்து | தசாநாதனிருக்கு மிடத்திலிருந்து |
| 10. (5) | சுபதசைகள் | சுபக்ரக தசைகள் |
| 11. (3) | அவ்வாதிபத்யபலன் களைத்தழுவியே | அவ்வாதி பத்யங் களைத்தழுவியே |
| 36. (குருபுக்தி) | விநோதம் | விரோதம் |
| 37. (குஜன்புக்தி) | சத்குரு | சத்துரு |
| 41. (3-வது) | த்ரியாதி | த்ரிதியாதிபதி |
| 42. (1) | சப்தமாதி | சப்தமாதிபதி |
| 42. (2) | சப்தமாதி | சப்தமாதிபதி |
| 42. (3) | அஷ்டமாதி | அஷ்டமாதிபதி |
| 42. (குறிப்பு) | துஸ்தானுதி பதி யானுலும் | துஸ்தானுதிபதி கர்களானுலும் |
| 43. (3-வது பத்தி) | தங்களுக்கு | தனக்கு |
| ,, | தங்களுடைய | தன்னுடைய |
| ,, | கொடுக்கிறுர்கள். | கொடுக்கிறுன் |
| 43. (4-வது பத்தி) | ஒருவருக்கு கொருவர் | ஒருவருக்கொரு வர் |
| 47. (வரி-9) | தொகைனெய | தொகையை |



ஸ்ரீ

# பாவபல நிரூபணம்.

## 1. பாவம்.

1. பாவத்தின் இருபுரத்திலும் சுபக்ரகங்கள் இருந்தால் அந்த பாவம் பலமுள்ளதாகும்.

2. பாவத்திற்கு கேந்திரங்களில் சுபக்ரகங்களிருக்கும் பக்ஷத்தில் பாவம் பலமுள்ளதாகும்.

3. பாவமத்திபம் எந்த நட்சத்திரத்திலிருக்கிறதோ அந்நட்சத்திரதிபதி யுடைய ஆதிபத்யம் ஸ்தான பலம் முதலியவைகளை கவனித்தலவசியம் இம்மாதிரியாகவே சந்திரனிருக்கும் லக்னத்திலிருந்தும் மேல்சொன்னபடி பாவபலத்தை பார்க்க வேண்டும்.

சம்மந்தப்பலன்.

1. பாவத்திலிருக்கும் கிரகம் அந்த பாவ ராசிக்கு நட்பாகவாவது, ஆட்சியாகவாவது, உச்சமாகவாவது இருந்தால் அந்தபாவம் பலத்துடன் கூடியதாகும்.

2. பாவத்திலிருக்கும் கிரகம் சுப ஆதிபத்யம் பெற்றதாக இருக்கவேண்டும்.

3. பாவத்திலிருக்கும் கிரகம் எந்த நட்சத்திரத்திலிருக்கிறதோ அந்த நட்சத்திரதிபதி ஆதிபத்யம், ஸ்தானபலன், க்ஷேத்ரபலன் உள்ளதாக இருந்தால் அந்த பாவம் பலத்துடன் கூடியதாகும்.

## பாவத்திற்கு மற்றக்ரகங்களின் பார்வை.

1. பாவத்தைப்பார்க்கும் கிரகம் சுபமாக இருக்கவேண்டும்.

2. பார்க்கும் கிரகம் சுப ஆதிபத்யம் உள்ளதாக இருக்கவேண்டும்.

3. பாவத்திலிருக்கும் கிரகத்துக்கும் அதைப் பார்க்கும் கிரகத்திற்கும் மித்துருத்வம் இருக்கவேண்டும்.

4. பாவத்தைப்பார்க்கும் கிரகம் ஸ்தானபலம், க்ஷேத்ர பலமுள்ளதாக இருக்கவேண்டும். அதாவது பார்க்கும் கிரகம் லக்னத்திற்கோ, சந்திரனுக்கோ, பாவத்திற்கோ, ஷஷ்டம, அஷ்டம, விரயஸ்தானத்திலில்லாமலும், அந்த ஆதிபத்யங்கள் பெருமலும், சத்துரு, நீசக்ஷேத்திரங்களிலில் இல்லாமலும் இருக்கவேண்டும்.

---

# 2. பாவாதிபதிபல நிரூபணம்.

## ஸ்தானபலன்.

1. பாவாதிபதி லக்னத்திற்கோ, சந்திரலக்னத்திற்கோ, பாவத்துக்கோ ஷஷ்டம, அஷ்டம, விரயஸ்தானத்திலில்லாமலிருக்க வேண்டும்.

2. பாவாதிபதி சுபாவமான இரண்டு அசுப கிரகங்களின் மத்தியிலாவது, துஸ்தானாதி பதிகளின் மத்தியிலாவது இருக்கக்கூடாது.

3. பாவாதிபதி இருக்கும் ராசியோ அம்ஸமோ தனக்கு பகையாகவாவது, நீச்சமாகவாவது இருக்கக்கூடாது.

4. பாவாதிபதி இருக்கும் ராசிக்கு அதிபதியும் அம்ஸத்திற்கு அதிபதியும், நட்சத்திரத்திற்கு அதிபதியும் ஷஷ்டம, அஷ்டம, விரயஸ்தானத்திலாவது, பகை, நீசக்ஷேத்திரங்களிலாவது இருக்கக்கூடாது.

## சம்மந்தப்பலன்.

பாவாதிபதியானவன், அசுப கிரகங்களுடனாவது, அசுப ஆதிபத்யம் பெற்ற கிரகங்களுடனாவது தனக்கு சத்துரு கிரகங்களுடனாவது, நீச்சம் பெற்ற கிரகங்களுடனாவது சம்மந்தமாயிருக்கக் கூடாது.

## பார்வை பலன்.

1. பாவாதிபதி அசுப அதிபதிகளால் பார்க்கப்படக்கூடாது.

2. தனக்கு சத்துருவினால் பார்க்கப்படக்கூடாது.

3. அசுபர்களால் பார்க்கப்படக்கூடாது.

4. சத்துரு க்ஷேத்திரங்களிலிருக்கும் க்ரகங்களினால் பார்க்கப்படக்கூடாது.

# 3. காரகனுடைய பல நிரூபணம்.

ஸ்தான பலன்.

1. காரகன் சத்ரு, நீசராசிகளிலும்,

2. ஷஷ்டம, அஷ்டம, விரய பாவத்திலும், கூடாது.

3. அசுபக்ரகங்களின் மத்தியிலும் இருந்தால் காரகனுடைய பலம் குறைந்துவிடுகிறது.

4. காரகன் இருந்தராசி அதிபதி துஸ்தானங்களிலாவது, பகை நீசக்ஷேத்திரங்களிலாவது இருக்கக் கூடாது.

5. மேற்கூறியபடியே காரகனிருந்த நட்சத்திரதிபதியையும் கண்டறியவேண்டும்.

6. காரகனுக்கு கேந்திரங்களில் சுபர் இருந்தால் காரகன் பலத்துடன் கூடியவனுகிறுன்.

சம்மந்தம்.

காரகன் அசுபர்களோடாவது, துஸ்தானதிபதிகர்களோடாவது, தனக்கு சத்துருக்களோடாவது இருக்கக்கூடாது.

பார்வை பலன்.

காரகன்—அசுபர், துஸ்தானுதிபர், தனக்கு சத்துருக்கள், துஸ்தானத்திலிருப்பவர்—இவர்களால் பார்க்கப்படக் கூடாது

மேலும் க்ரக சமயங்கள் மூலமும், அஷ்டக வர்க்க மூலமும் க்ரகங்களுடைய பலன்களை கண்டறிய வேண்டும்.

எந்த அதிபதியோ, காரகனோ, நீசம் அல்லது பகை நவாம்ஸம், த்ரேகாணம், த்வாதஸாம்ஸம், த்ரிம்ஸாம்ஸம் இவைகளிலிருக்கக் கூடாது.

எந்த க்ரகமானது தசவர்க்கங்களிலும் பகை, நீச இராசிகளில் இல்லாமலிருக்கிறதோ அந்தக் ரகத்துக்குறிய ஆதிபத்ய, காரகத்துவ பலன்கள் சம்பூர்ணமாக சித்திக்கும்.

---

## தசா பல நிரூபணம்.

1. தசா நாதனுக்கு எந்தக்ரகங்கள் அதிசத்துருக்களோ, அந்த அதிசத்துருக்களுடைய காரகத்வமும், லக்னரீதியாகவும் சந்திரலக்னரீதியாகவும் ஏற்படும் ஆதிபத்யமும் நாசமடைகின்றன.

2. இம்மாதிரியாகவே தசாநாதன் எந்த அதிபதிகளுக்கு அதிசத்துருவோ, அந்த அதிபதிகளால் குறிக்கப்படும் விஷயங்கள் அந்த தசையில் நாசமடையும்.

3. எந்த பாவத்துக்கு * மாரகஸ்தானத்தில் தசாநாதனிருக்கிறனோ அந்த தசையில் அந்த பாவங்கள் மாரகமடையும்.

4. அதி சத்துருவோடு சம்மந்தப்பட்டவன் தசையில் அந்த அதிசத்துருவின் காரகம், ஆதிபத்

* 2-ம் 7-ம் மாரகஸ்தானங்களெனப்படும்.

யம் இவைகளை அனுசரித்து அந்த தசையில் கஷ்டங்கள் நேரிடும்.

5. தசாநாதன் தனக்கு சத்துரு ராசியிலோ, நீச ராசியிலோ, சூரியனில் அஸ்தங்கதமாயோ இருந்தால் அந்ததசையில் தனக்கு ஏற்பட்ட ஆதிபத்ய காரகத்தை அனுசரித்து துன்பங்கள் ஏற்படும்.

6. தசாநாதன் லக்னதிபதிக்கு சத்துருவாயிருந்தால் அந்த தசையில் தனக்கு ஏற்பட்ட காரகம் ஆதிபத்யம் இவைகளை அனுசரித்து கஷ்டம் ஏற்படும்.

7. தசாநாதன் தன் அஷ்டகவர்க்கத்தில் 4 பரலுக்கு குறைந்திருந்தாலும், சர்வாஷ்டகவர்க்கத்தால் 25 பரலுக்கு குறைந்திருந்தாலும் அசுபபலனை தருகிறான்.

8. தசாநாதன் கெட்டசமயம் பெற்றிருந்தாலும் கஷ்டபலன்களையே தருகிறான்.

9. கோசாரத்தில் தசாநாதன் பகை நீசக்ஷேத்திரங்களில் எவ்வளவு காலமிருக்கிறானோ அவ்வளவு காலம் அந்தக்ஷேத்திரங்கள் லக்ன சந்திரலக்னங்களுக்கு எந்தபாவங்களாகிறதோ அந்தபாவங்களுக்கும், தன் ஆதிபத்யத்தை ஒட்டியும் கெட்ட பலன்களைத் தருகிறான்.

10. தசாநாதன் கோசாரத்தில் லக்னத்திற்கோ, சந்திரலக்னத்திற்கோ, ஷஷ்டாஷ்டம விரயத்தில் சஞ்சரித்தால் எவ்வளவு சுபபலன் சொல்லியிருந்த போதிலும் குறைவாக நடக்கும். ஆனால் அசுப பலன்கள் கூறியிருந்தால் விரைவில் நடக்கும்.

11. கோசாரத்தில் தசாநாதனும் புக்திநாதனும் ஒருவருக்கொருவர் ஷஷ்டாஷ்டம விரயத்திலிருந்தால் சுபபலன் நடக்காது. ஆனல் அசுபபலனுல் நடக்கும்.

12. தசநாதனுக்கு ஷஷ்டாஷ்டம விரயத்தில் எந்தக்ரகங்களிருக்கிறதோ அந்தக்ரகங்களுடைய காரகத்துவம், ஆதிபத்யம் எதுவோ அவைகள் நஷ்டமடையும்.

13. தசாநாதனுக்கு தானிருக்குமிட மிருந்து எந்தந்தபாவாதிபதிகள் தனக்கு ஷஷ்டம, அஷ்டம, விரயத்தித்திலிருக்கிருர்களோ அந்தந்தபாவங்கள் காரகங்கள் நஷ்டமடையும்

14. எந்த தசாநாதனுக்கு இரண்டு ஆதிபத்யங்களுண்டோ அவைகளில் லக்னரீதியாக எது முதலிலிருக்கிறதோ அதுவே முதலில் நடக்கும். ஆனல் தசாநாதன் தன் சொந்த க்ஷேத்திரங்களான இரண்டு இராசிகளில் ஏதாவதொன்றிலிருந்தால் இருந்த வீட்டிற்குறிய ஆதிபத்யம் எதுவோ அது முதலில் நடக்கும்.

15. தசாநாதனிருக்கும் நவாம்ஸாதிபதி லக்னரீதியாக என்ன ஆதிபத்தியம் பெற்று எப்பாவத்திலிருக்கிருனே அதை அனுசரித்தும் சுபாசுபபலன்களை சொல்லவேண்டும்.

16. முக்யமாக தசாநாதன் திரேகாணம், நவாம்ஸம், த்வாதஸாம்ஸம், த்ரிம்ஸாம்ஸம் இவைகளில் பகை நீசக்ஷேத்ரங்களில்லாமலிருந்தால்

அவன் தனக்குறிய காரக ஆதிபத்யங்களை அநு சரித்து சுபபலன்களை கொடுக்கிறான்.

17. லக்னத்திற்கோ, சந்திரனுக்கோ, ஷஷ்டம, அஷ்டம, விரயத்திலும், பகை நீசக்ஷேத்ரங்களிலிருக் கும் தசாநாதன் கஷ்டத்தையே கொடுப்பான்.

18 a. இலக்னம் இரட்டை பட்டராசியாக இருந்தால் தசாநாதன் தனக்கு இரட்டைப்பட்டராசி யின் ஆதிபத்யத்தை முதலில் தருகிறானென்று சிலர் சொல்லுகிறார்கள்.

18 b. தசாநாதன் தன் வீடல்லாத வேரு ஒரு வீட்டிலிருந்தால் இருந்தவீடு இரட்டைப்பட்ட இராசி யானால் இரட்டைப்பட்ட இராசிக்கு தனக்கு என்ன ஆதிபத்யமோ அது முதலில் ஏற்படுமென்று சொல்லு கிறார்கள்.

19. ஒரு புக்தியில் இலக்னத்திற்கு ஏற்பட்ட ஆதிபத்ய பலன் முதலிலும், தசாநாதனிருக்கும் மிடத்திலிருந்து ஏற்பட்ட ஆதிபத்யபலன் புக்தியின் பின் பாதியிலும்முண்டாகிறது.

20. தசாநாதனிருக்கு மிடத்திற்கு தசம பாவம் லக்ன ரீதியாக எந்தபாவமாகிறதோ அந்த பாவசம் மந்தமான சுபாசுபா பலனை அந்ததசையில் கூற வேண்டும்.

21. தசாநாதனுக்கு புத்திஸ்தானாதிபதி எந்த ராசியிலிருக்கிறானோ அந்தராசி லக்னரீதியாக எந்த பாவமாகிறதோ அந்த பாவசிந்தனைகள் அந்ததசை யில் உண்டாகும்.

22. தசாநாதன் நீச்சமடைந்து கேந்திரங்களி லிருந்தால் காரியங்கள் நிறைவேரும் போல் முதலில் தோன்றி முடிவில் முடியாமல் போய்விடும்.

23. நட்பு, ஆட்சியிலிருக்கும் தசாநாதர்கள் ஷஷ்டம, அஷ்டம, விரயபாவங்களிலிருந்தாலும் காரியங்கள் முதலில் முடியாதுபோல் தோன்றி முடிவில் நிறைவேறிவிடும்.

## சில விசேஷ விதிகள்.

1. லக்னத்திற்கோ, சந்திர லக்னத்திற்கோ, தசமகேந்திரங்களிலிருக்கும் அசுபக்ரகங்கள் (சனி, சூரியன், செவ்வாய், ராகு, கேது) பகை அல்லது நீசம் பெற்று சுபக்ரக வீட்சண்யமாவது சம்மந்தமாவது இல்லாமலிருந்தால் அந்ததசை அசுப பலனையே கொடுக்கும்.

2. ஜென்ம, அனுஜன்ம, த்ரிஜன்ம, நட்சத்ரங்களின் 3, 5, 7-வது நட்சத்ரதிபதியின் தசையும், லக்ன, சந்திர லக்னங்களுக்கு 3, 8, 11, க்குடையவனுடைய தசையும், இந்த ஆதிபத்யங்கள் பெற்று பகை நீசக்ஷேத்ரங்களிலிருக்கும் தசைகளும், அசுப பலனைக் கொடுக்கக்கூடியன.

3. சூரியனில் அஸ்தங்கததோஷத்தை யடைந்தக்ரகத்தின் தசையும் அசுப பலனைக்கொடுக்கக் கூடியது.

4 ஜென்ம, அனுஜன்ம, த்ரிஜென்ம நட்சத்திரங்களுக்கு 3, 5, 7-வது நட்சத்திரங்களிலிருக்கும்

தசாபுத்திகளில் சுபபலன் கூறியிருந்தால் குறை வாகவும், அசுப பலன் கூறியிருந்தால் அதிகமாக வும் நடக்கும்.

5. பொதுவாக பாபக்ரகதசைகள் பாபபலனை யும், சுபதசைகள் சுபபலனையும் கொடுக்கும். ஆனல் பாபதசைக்கு கேந்திரதிரிகோணுதி பத்யம் வந்து கேந்திரதிரிகோணங்களிலில் நட்பு, ஆட்சி, உச்சத் திலிருந்து சுபக்ரகங்களால் பார்க்கப்பட்டால் சுப பலனே நடக்கும். சுபர்கள் 6, 8, 12 க்கு அதிபர்க ளாயிராமல் திரிகோணஸ்தானங்களிலோ கேந்திரங் களிலோ சுபர் களால் பார்க்கப்பட்டோ சம்மந்தப் பட்டோ நட்பு, ஆட்சி, உச்சங்களில் இருக்கில் சுப பலனைத் தருவார்கள்.

6. துஸ்தானுதிபத்யம் மட்டும் பெற்ற க்ஷேத்ர பலம் ஸ்தான பலத்தோடு கூடிய குருவும் சுக்ரனும் ஜீவன(தசமபாவம்) பாவத்தைப்பார்த்தால், ஜீவன ஸ்தானுதிபதிக்கு க்ஷேத்ர பலமில்லாவிட்டால், மேலான உத்தியோகத்தையோ, பதவியையோ கொடுத்துபின்னர் அப்பதவியை அவர்களுடைய தசாபுக்திகளில் இழக்கச் செய்வார்கள்.

ஆனல் ஜீவனஸ்தானுதிபதி க்ஷேத்ர பலம் ஸ்தானபலம், சுபர்களின் பார்வைபலம் இவைகளைப் பெற்றிருந்தால் மேற்படி க்ரகங்களின் தசாபுக்தி காலங்களில்உத்தியோகத்திற்கு அநேக இடையூறு கள் ஏற்பட்டு நீங்கி விடுமென்று சொல்லலாம்.

---

# புக்தி நாதன் பல நிரூபணம்.

மேல் சொன்னவிதிகள் ஒவ்வொரு புக்தி நாதனுக்கும் பார்ப்பதோடு கூட, கீழே சொல்லப்பட்டவைகளையும் கவனித்தலவசியம்:—

1. பகை, நீசக்ஷேத்திரங்களிலோ, பகை, நீச நவாம்ஸங்களிலோ இருக்கும் புக்திநாதன் தசாநாதன் கொடுக்கும் சுப பலனை மாற்றி அசுப பலனையே கொடுப்பான்.

2. தசாநாதனுக்கு ஷஷ்டம, அஷ்டம, விரயஸ்தானத்திலிருப்பவனும், அல்லது அவ்வாதிபத்யங்களை பெற்றவனுமான புக்திநாதன் அசுபனாவன்.

3. லக்னத்திற்கு த்ரிகோணாதிபத்யம் பெற்று, லக்னத்திற்கு கேந்திர, திரிகோணங்களில், நட்பு, ஆட்சி உச்சக்ஷேத்திரங்களிலிருக்கும் புக்திநாதன் தசாநாதனுக்கு ஷஷ்டாஷ்டம விரையபாவங்களிலிருந்தால் தன் ஸ்தான, ஆதிபத்ய சுப பலன்களை கொடுப்பதோடு கூட அந்த ஆதிபத்யபலன்களை தழுவியே கஷ்டங்களையும் கொடுக்கிறான்.

4. எந்த புக்தி நாதன் ஜன்ம, அனுஜன்ம, த்ரிஜன்ம நட்சத்திரங்களுக்கு 3, 5, 7-வது நட்சத்திரதிபதியாகவும், சத்துரு, நீசக்ஷேத்திரங்களிலும், 3, 8, 11க்குடையவனாயிருந்தால் கஷ்டபலன்களையே கொடுக்கிறான்,

5. புக்திநாதனிருந்த ராசி யதிபதி, லக்ன, சந்திரலக்னம், இவைகளுக்காவது தசாநாதனுக்கா

வது 6, 8, 12ல் பகை நீசக்ஷேத்திரங்களில் இருந்தால் அந்த புக்தி நாதனுக்கு, லக்ன, சந்திர லக்ன, தசாநாதலக்னம் ரீதியாக என்ன ஆதிபத்யம்பெற்று, என்னபாவங்களிலிருக்கிறானோ அதை ஒட்டி கஷ்ட பலன்களைக் கூறவேண்டும்.

6. புக்தி நாதன் எந்த நட்சத்திரத்தில் இருக்கிறானோ அந்த நட்சத்திரதிபதியின் ஆதிபத்ய, ஸ்தான, க்ஷேத்ரபலன்களை அனுசரித்து அப்புக்தியில் சுபா சுபபலன்களை சொல்லவேண்டும்.

7. புக்தி நாதனுக்கும் தசாநாதனுக்குப்போல், அஷ்டகவர்க்கத்தில் 4 பரல்களுக்கு குறைந்தும், சமயமும் கெட்டதாக இருந்தால் அப்புக்தியில் சொன்ன சுபபலன்கள் குறைவாகவும், அசுப பலன்கள் கூறியிருந்தால் விரைவாகவும் நடக்கும்.

8. தசாநாதனுக்கும் புக்தி நாதனுக்கும் சத்துருத்துவம் இருக்கும் பட்சத்தில் அந்த புத்தியில் சுப பலன் நடப்பது கஷ்டம். ஆனால் தசாநாதனுக்கு புக்தி நாதன் பகையாயிருந்தாலும் கூட, புக்தி நாதன் நல்ல ஆதிபத்யம் பெற்று, நட்பு அல்லது ஆட்சி இராசியிலிருந்து, சுபஸ்தானாதிபத்யம் பெற்ற மித்துருக்ரகங்களால் பார்க்கப்பட்டால் அசுப பலன் குறைந்தும் சுப பலன் அதிகமாகவும் காட்டும்.

9. தசாநாதன் இருந்த நட்சத்ரதிபதியும் புக்தி நாதனிருந்த நட்சத்ரதிபதியும் மித்திரர்களாயிருந்தால் அந்த புக்தியில் சொன்ன சுப பலன் பூர்ண மாகவும், சத்துருக்களாக இருந்தால் சுப பலன்

குறைந்தாவது அல்லது தாமதமாகவது நடக்கும். இம்மாதிரியாகவே தசாநாதன் புக்தி நாதன் இருக்கும் நவாம்ஸாதிபர்களையும் கொண்டு பலன் சொல்ல வேண்டும்.

10. தசாநாதன் இருக்கும் இராசியதிபதியும் புக்தி நாதனிருக்கும் இராசியதிபதியும் மித்திரர்களாயிருந்தால் சுப பலனும், சத்துருக்களார்களானல் அசுப பலனும் கூறவேண்டும்.

11. ஷஷ்டம, அஷ்டம, விரயாதிபதியுனுடைய தசையில் கேந்திரகோணாதிபதியுனுடைய புக்திகளில் சுப பலன் சற்று தாமதித்து நடக்கும். தசைக்கு சொல்லப்பட்ட அசுப பலன்கள் குறைந்தும் நடக்கும். அக்காலத்தில் கோசாரத்தில் புக்தி நாதர்கள் பகை க்ஷேத்ரம், சத்துரு சம்மந்தம், அஸ்தங்கததோஷ மடையாமலிருந்தால் தான் இந்தப் பலன் நடக்கும்.

12. கேந்திர கோணாதிபதிகளின் தசையில் ஷஷ்டம, அஷ்டம, விரயாதிபதிகளின் புக்திகளில் தசாநாதனுக்கு சொன்ன சுப பலன்கள் குறைந்தும், அசுப பலன்கள் அதிகமாயும் நடக்கும்.

13. தசாநாதன் பகை நீசக்ஷேத்ரங்களில் இருந்து, புக்தி நாதன் நட்பு, ஆட்சி, உச்சக்ஷேத்ரங்களிலிருந்தும், லக்னம், சந்திரன், தசாநாதன் இவர்களுக்கு கேந்திர த்ரிகோணங்களில் இருந்தால் அந்த புக்தியில் தசாநாதனுக்கு கூறிய அசுப பலன்கள் குறைந்தும், சுப பலன்கள், புக்திநாதர்களுடைய

ஆதிபத்யத்தையும், இருந்தபாவத்தையும் ஒட்டி நடக்கும்.

14 தசாநாதன் இருக்கும் நட்சத்திரத்திற்கு 10-வது, 19-வது நட்சத்திரத்திற்கு 3, 5, 7 நட்சத்திரங்களிலோ, அல்லது இவைகளுக்கு அதிபதிகளாகவோ புக்தி நாதரிருந்தால் சுப பலனை கொடுக்க மாட்டார்கள்.

## சில விசேஷ விதிகள்.

1. லக்னாதிபதியுனுடைய தசையில் ஷஷ்டஷ்டம விரயாதிபதியுனுடைய புக்தியில், சரீரபீடையும், தனநஷ்டமும், ஸ்தான நாசமும் உண்டாகும்.

2. லக்னாதிபதியுனுடைய தசையால் தனாதிபதியுனுடைய புக்தியால் விசேஷதனலாபமும், குடும்பத்தில் சுப காரியங்களும், தத்துவங்கள் அறிதலும் சித்திக்கும்.

3. லக்னாதிபதியுனுடைய தசையில் திரிதியாதி பதியுனுடைய புக்தியில் அசுப பலனே நடக்கும்.

4. லக்னாதிபதியுடைய தசையில் கேந்திர கோணாதி பதிகளுடைய புக்திகள் சுப பலனையே கொடுக்கும்.

5. தனாதிபதியுனுடைய தசையில் கேந்திர கோணாதிபதிகளின் புக்தியில் தனவரத்து அதிகமாக உண்டாகும்.

6. தனுதிபதியுனுடைய தசையில் ஷஷ்டாஷ்டம விரயாதிபதிகளுடைய புக்திகளில் தனநாஸமும், குடும்பத்தில் பலவிதமான கவலைகளும் ஏற்படும்.

7. திரிதியாதிபதியுனுடைய தசையில் கேந்திரகோணாதிபதிகளுடைய புக்திகளில் சகோதர சவுக்யமும், கல்வியும், சத்சங்கமும் உண்டாகும்.

8. திரிதியாதிபதியுனுடைய தசையில் ஷஷ்டாஷ்டம விரயாதிபதிகள் புக்தி காலங்களில், சகோதிர சகோதிரிகளுக்கு பீடையும், எழுத்து மூலியமாய் கஷ்டமும், கெட்ட சிநேகிதர்கள் மூலம் மானஹானியும் உண்டாகும்.

9. வித்தியாஸ்தானுதிபதி அதாவது நான்குக்குடையவனுடைய தசையில் ஷஷ்டம, அஷ்டம, விரயாதிபதியுனுடைய புக்தி காலங்களில் வித்தை நாஸமும், வீடு மூலம் கஷ்டமும், பந்துக்கள் மூலம் உபத்ரவமும், வாஹன நஷ்டமும் ஏற்படும்.

10. நான்குக் குடையவனுடைய தசைகளில் மற்ற கேந்திரக்கோணுதிபதிகளின் புக்தி காலங்களில் மேற்சொன்ன விஷயங்களுக்கு விரோதமாக எல்லாம் சுபமாக முடியும்

11. ஐந்துக்குடையவன் தசையில் ஷஷ்டம, அஷ்டம, விரயாதிபதிகளின் புக்தி காலங்களில் புத்திர நாசமும், சஞ்சல புத்தியும், பண நஷ்டமும், புண்யகர்மங்கள் சித்தியாமையும் நடைபெறும்.

12. ஐந்துக்குடையவன் தசையில் கேந்திரகோணாதிபதிகளின் புக்தி காலங்களில் மாமன் சவுக்யமும், புத்திர லாபமும், புதிதான வித்தையை அடைதலும் சித்திக்கும்.

13. ஆறுக்குடையவனுடைய தசையில் கேந்திரக் கோணாதிபதிகளின் புக்திகளில் வியாஜ்ஜியத்தில் ஜெயமும், வியாதிகள் சாந்தமாகுதலும் ஏற்படும்.

14. ஏழுக்குடையவனுடைய தசைகளில் ஷஷ்டமஷ்டம விரயாதிபதி புக்தி காலங்களில் களத்திர பீடையும், ஸ்தான நாஸமும், களத்திரமூலம் பகையும், இடுப்பில் வியாதியும் ஏற்படும்.

15. ஏழுக்குடைய வனுடைய தசைகளில் கேந்திர கோணாதி பதியுனுடைய புக்திகாலங்களில் களத்திரலாபமும், வியாபரா விருத்தியும், உத்தியோக சித்தியும், ஏற்படும்.

16. எட்டுக்குடையவனுடைய தசைகளில் 6, 12க் குடையவர் புக்திகளில், அதிகமான சரீரபீடையும், ஒருக்கால் மரணமும் ஏற்படும்.

17. எட்டுக்குடையவன் தசைகளில் கேந்த்ர கோணாதிபதிகளின் புக்திகளில் சரீரபீடைவந்து விலகுதலும், இன்னும் பலவித கஷ்டங்கள் வந்து விலகுதலும் ஏற்படும்.

18. ஒன்பதுக்குடையவன் தசையில் 6, 8, 12-க்குடையவன் புக்திகளில் பிதுர் மரணமும், அவமானமும் ஏற்படும்.

19 ஒன்பதுக்குடையவன் தசைகளில் கேந்திர கோணாதிபதிகள் புக்திகளில் பிதுர் சவுக்யமும், காரிய ஜயமும், பிதுர் சொத்தை அடைதலும், கௌரவமும் ஏற்படும்.

20. பத்துக்குடையவன் தசையில்—ஷஷ்டா ஷ்டம விரயாதிபதிகளின் புக்திகளில் தொழில் நாசமும், க்ஷேத்ரநாசமும், மானபங்கமும் உண்டாகும்.

21. பத்துக்குடையவன் தசையில் கேந்திரகோணாதி பதிகளின் புக்திகளில் சிறந்த அனுஷ்டானங்களும், உத்தியோகலாபமும், வியாபாரவ்ருத்தியும், வீடுலாபமும், அதிகாரபதவியும் உண்டாகும்.

22. லாபாதிபதியின் தசையில் ஷஷ்டாஷ்டம விரயாதிபதிகளின் புக்திகளில் மூத்தசகோதரனுக்கு பீடையும், அவன் மூலம் கஷ்டமும், பலவித நஷ்டமும், எதிர்பாராத செலவுகளும், எதிர்பார்த்த லாபங்கள் கிடைக்காமல் போகுதலும் ஏற்படும்.

23. லாபாதிபதி தசையில் கேந்திரகோணாதி பதி புக்தி காலங்களில் சகோதர சவுக்யமும், லாபமும், வாகன லாபமும், லக்ஷ்மி கடாக்ஷமும் உண்டாகும்.

24. விரயாதிபதியுனுடைய தசைகளில் கேந்திர கோணாதிபதிகளின் புக்தி காலங்களில் சுப விஷயங்களில் தனவிரயமும், மோக்ஷ சிந்தனையும் ஏற்படும்.

25. விரயாதிபதியுனுடைய தசையில் அஷ்டம, சஷ்டியாதிபதி புக்திகளில் சரீர பீடைமூலம் செலவுகளும், பலவித கஷ்ட நஷ்டங்களும் ஏற்படும்.

இன்ன அதிபதி தசையில் இன்ன அதிபதிபுக்தி களில் என்று சொல்லுமிடத்து பாப க்ரகங்களின் புத்திகாலங்களில் என்றும் ஒவ்வொரு அயிட்டத்துக்கும்சேர்த்துக்கொள்ளவேண்டும். அதேமாதிரி சுபஸ்தானுதிபதி என்றதோடு சுப கிரகம் என்றதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

மேற்கூறியவைகளில் கிரகங்கள் நட்பு, ஆட்சி, உச்சம் இவைகளிலிருந்தால் கூறிய அசுப பலன்கள் அதிகமாக நடக்காதென்றும், சுப பலன்கள் கூறி இருந்தால் அதிகமாகவும் விரைவாகவும் நடக்குமென்றும் கண்டு கொள்ளவேண்டும்.

மேலும் தசாநாதன் புக்திநாதன் இருவரும் ஒருவருக்கொருவர் பகையாயிருந்தால் கூறிய சுப பலன்கள் நடக்காதென்றும், அசுப பலன்கள் அதிகமாக நடக்குமென்றும் கொள்ளவேண்டும்.

---

## குருதசை சூரியபுக்தி.

உதாரணம்.

இவ்விருவரும் சத்துருக்களாய் யாராவதொருவர் துஸ்தானுதிபத்யம் பெற்றவரானுல், புத்திரனுக்கும் தகப்பனுருக்கும் சண்டை வருமென்றும், இச்சண்டையின் காரணம் அவரவர் ஆதிபத்யத்தையும், இருக்கும் பாவத்தையும் ஒட்டி உண்டாகும்.

இம்மாதிரியாகவே மற்ற தசாபுக்திகளேயும் கவனித்து ஒருவனுக்கு உத்தியோகமோ, மற்ற எவ்விதலாபமோ யாரால் கிடைக்கும் என்ருே, நஷ்டங்கள் ஏற்படுமென்ருே சொல்லலாம்.

# முக்கிய கவனிப்பு.

1. தசாநாதனும் புக்திநாதனும் ஒருவருக்கொருவர் மித்திரர்களாயும்,

2. இருவர்களும் சுபாதிபத்தியம் உள்ளவர்களாயும்,

3. இருவர்களும் ஒருவருக்கொருவர் கேந்திர கோணங்களிலும். இருந்தால், அந்தந்ததசாபுக்தியில் கூறிய சுப பலன் பூர்ணமாக நடைபெறும்.

4. தசாநாதன் புக்தி நாதன் இருவர்களும் இருக்கும் ராசிகளின் அதிபர்கள் ஒருவருக்கொருவர் மித்திரர்களாயும், நட்பு ஆட்சி உச்சங்களில் இருப்பவர்களாயும்,

5. இவர்கள் இருக்கும் நக்ஷத்திரங்களின் அதிபர்கள் 4-வது ரூலில் கண்டபடியிருந்தும்,

6. இவர்கள் இருக்கும் நவாம்சாதிபர்களும் 4-வது ரூலில் கூறியபடி யிருந்தால், அந்தந்த தசாபுக்திகளில் கூறிய சுப பலன்கள் நடக்குமென்றும், இப்படியில்லாவிட்டால், சுப பலன்கள் சொல்லியிருந்தால் நடக்காதென்றும், அசுப பலன்கள் சொல்லியிருந்தால் நடக்குமென்றும் அறியவேண்டும்.

7. எந்த தசையானாலும் புக்தியானாலும் ஜென்ம அநுஜென்ம, த்ரிஜென்ம நட்சத்திரங்களுக்கு 3, 5, 7-வது நட்சத்திரங்களின் அதிபதிகளாயும், லக்ன, சந்திரலக்னங்களுக்கு 3, 8, 11 க்குடையவர்களாயும் இருந்தால் சுபபலன் குறைந்தும் அசுப பலன் அதிகமாயும் நடக்கும்.

# சுபதசையின் தன்மைகள்.

1. ஸ்வயம் சுபகிரகங்களான குரு, சுக்ரன், புதன், சுக்லபக்ஷ சந்திரன் இவர்களும்,

2. சுபாதிபத்தியம் உள்ளவர்களும்,

3. கேந்திர த்ரிகோணங்களில் இருப்பவனும்,

4. நட்பு, ஆட்சி உச்சராசி நவாம்ஸங்களில் இருப்பவனும்,

5. ஸ்தான, க்ஷேத்திர, சம்பந்த, சுபக்ரகபார்வைகளை அடைந்தக்ரகங்களின், சம்பந்தமோ, பார்வையோ, அடைந்தக்ரகங்களின் தசாபுக்திகளும்,

6. சூரியனில் அஸ்தங்கததோஷ மடையாமல் இருக்கும் க்ரகங்களின் தசைகளும்,

7. ராசிசந்தி, நட்சத்திரசந்தி, பாவசந்தி இவைகளில் இல்லாமல் இருக்கும் க்ரகங்களின் தசைகளும்,

8. நல்ல சமயமும் தேவமண்டலத்திலும் இருக்கும் தசைகளும், சுப பலன்களை கொடுப்பார்கள்.

---

# தசைகளின் பொது பலன்கள்.

## சூரியன்

தகப்பனுருக்குப் பீடை—உஷ்ணசம்பந்தமான வியாதி — வயிற்றுவலி — அதிகமான செலவு — ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்கு மாறுதல்— பெந்துக்கள் மரணம்.

## சந்திரன்

புண்யதீர்த்த ஸ்நானம்—ஆரோக்கியம்—தன லாபம்—நல்லவஸ்திரம்—தர்மம்

## குஜன்

வியாதி—கல், நெருப்பு, இரும்பு இவைகளின் மூலம் பயம்—சகோதரர்களுக்கு பீடை—பலவித மான ஆபத்துக்கள்—ஏறிவிழுதல்—விஷயம்—பூமி வீடு முதலியவைகளின் நஷ்டம்.

## புதன்

வியாபாரவ்ருத்தி—வித்யாலாபம்—ஸத்ஸங்கம் சங்கீதத்தில் பிரியம் உண்டாகுதல்—புதியஸ்தானம் வகித்தல்—நூதன ஸ்நேகிதர்கள்—சாஸ்திரங்களை ஆராயுதல்.

## குரு

பிராமணர்கள் ஸ்நேகிதம்—பசு முதலிய பிராணிகளின் லாபம்—புதிதான வீடு கட்டுதலோ உத்தியோகம் பார்த்தலோ ஏற்படுதல்— புத்திரவா கனலாபங்கள்—யாத்திரை—எடுத்த காரியங்களில் ஜயம்—மரம், மணல் முதலிய வியாபாரவ்ருத்தி

## சுக்ரன்

தனக்கோ அல்லது தனது நெருங்கின பந்துக் களுக்கோ கலியாணம்—பெண் குழந்தை ஜனனம்— பூமி, வீடு முதலியலாபங்கள்—பசு, எருமை முதலிய லாபம்—வாகனம் வாங்குதல்—வாசனை த்ரவ்யம், வருணம், ஜவுளி முதலிய வியாபாரங்களில்—லாபம்,

சனி

பலவிதத்திலும் கஷ்டம்—வியாதி—பிதுர்வர்க்கங்களில் மரணம்—களத்திர புத்திரபீடை—தொழில் நாசம்—வாகனமூலம் பயம்—நாற்கால் பிராணிகள் நஷ்டம்—புதிய வியாஜ்ஜியங்கள்—இரும்பு, எண்ணெய் முதலிய வியாபாரவ்ருத்தி.

ராகு

நீசர்கள் மூலமோ தாழ்ந்த ஜாதிகளின் மூலமோ கஷ்டம்—ஸ்வாஸபந்தனம்—கை. கால்களில் வீக்கம்—விஷபயம்—எதிர்பாராத பிரயாணங்களும் சிலவுகளும்

கேது

மனதிற்குச் சஞ்சலம்—நீசர்களும் பெரியஉத்தியோகஸ்தர்களும் விரோதம்—குடும்பத்தில் பீடை ஸ்தான நஷ்டம்—பைத்தியம் பிடித்தல்.

N. B. இங்கு ஒவ்வொரு தசையிலும் ஒவ்வொரு புக்திகளுக்கும் பொது பலன்கள் கூறியதுபோல் ஒவ்வொரு தசைக்கும் பொதுவாக பலன்கள் கூற பட்டிருக்கின்றன. இவைகளை இதுவரையில் கூறியிருக்கிற தசாபுக்தி பல நிரூபணம் என்ற தலையங்கத்தின் கீழ் சொல்லியிருக்கிற விதிகளையும் க்ரகங்களின், ஸ்தான க்ஷேத்திர பலங்களையும் ஆராய்ந்து சுபாசுபங்களை சொல்லவேண்டும்.

சுபக்ரஹங்களின் தசைகளில் சுப பலன்களும் பாப க்ரகங்களின் தசைகளில் அசுப பலன்களும் கூறியிருந்தாலும் கூட அந்தந்த க்ரஹங்களின்

ஸ்தானக்ஷேத்திர சம்பந்த பலன்களையும் கவனித்து சொன்னால் தான் தவறுதல்களுக்கு இடமில்லாமல் இருக்கும்.

---

## பொதுவாக இன்னதசையில் இன்னின்ன புக்திகளில் இன்ன பலன் என்பன.

## சூரிய தசையில்.

### சூரியபுக்தி.

இராஜபயம், சரீரபீடை, மனவருத்தம், பந்துக்களுக்குக் கேடு, கலகம், தலைநோய், திருடர்கள் பயம், தனநாஸம், நான்கு கால் மிருகங்களால் பயம், நேத்திரரோகமும், பிதுருநாஸமும் உண்டாகும். காடு, மலை இவ்விடங்களில் வாஸமும் உஷ்ணரோகமும், சில சமயங்களில் பணவரவும் ஏற்படும்.

### சந்திர புக்தி.

பெரியோர்கள் உதவியும், லாபமும், கலியாணமும், பூமி, வீடு இவற்றின் லாபமும், மனதுக்கு சந்தோஷமும், சத்துரு நாசமும், மித்திரர்களின் சேர்க்கையும், தேகபீடை இல்லாது இருத்தலும், பந்துக்கள் மூலம் தனவரவும், ஏற்படும்.

### குஜபுக்தி.

சரீரபீடையும், வியாஜ்யமும், நெருப்பு, ஆயுதம் இவற்றால் சரீரத்தில் புண்ணுண்டாகுதலும், பந்துக்களுக்கு கஷ்டமும், தனநாஸமும், விவசாயத்தில் நஷ்டமும், ஸ்தானப்ரஷ்டமும், அவமானமும், அர

சர்கள் அல்லது அரசாங்கத்தார் மூலம் பயமும் உண்டாகும்.

ராகுபுக்தி.

மனையாள் மூலம் தனக்கு மருத்தீடுவைக்கப் படுதலும், புத்திரநாஸமும், சகோதர சகோதரிகளுக்கு கஷ்டமும், குடும்பத்தில் பாகப்பிரிவினைகள் ஏற்படுதலும், புத்திரன் தன்னை விட்டுப்பிரிதலும், ஸ்தானப்ரஷ்டமும், மனதுக்கு துக்கமும், புதிதான சத்துருக்கள் கிளம்புவதும், விஷபயமும், தலை கண் முதலியவைகளில் ரோகமும் உண்டாகும்,

குருபுக்தி.

ஸ்நேகிதர் வரவும், தனலாபமும், புத்திரலாபமும், புத்திரன் மூலம் தனலாபமும், சத்ஸங்கமுண்டாகுதலும், இழந்தவஸ்துக்கள் திரும்பிக்கிடைத்தலும், சரீரசவுக்யமும், காதில் வியாதியுமேற்படும்.

சனி புக்தி.

புத்திரபீடை, சத்துரு பீடை, பொருள் நாஸம், நாபியில் பீடை, பந்துக்கள் கலகம், குடும்பத்தில் வியாதி, ஸ்திரீமூலமான ரோகம், குருக்கள் மூலம் செலவு, திடீரென சாமான்கள் காணுமல் போகுதல், கபத்தால் மிக்கப்பீடை, முயற்சிகளில் அபஜெயம், ஆகிய இவைகள் நடக்கும்.

புதன் புக்தி.

பந்துக்கள் கலகம், சரீரத்தில் பீடை, கர்ப்பம் அழிதல், அரசாங்கத்தாரால் தடை, சொரி சிரங்கு,

பிளவை, குஷ்டம், காமாலை, பூமிநாசம், இவைகள் நேரிடும்.

கேதுபுக்தி.

தூரதேசம் போகுதலும், விஷபயமும், குடியிருக்கும் விடுமாறுதலும், வ்யாஜ்யமும், ஸ்நேகிதர்களை இழத்தலும், பந்துக்களோடு மனஸ்தாபமும், குருவிற்கு வியாதி உண்டாகுதலும், கால் தலை இவற்றில் ரோகமும், கழுத்தில் வியாதியும், நேத்திரரோகமும், பல விதத்தில் சங்கடமும் நேரிடும்.

சுக்கிர புக்தி.

வீட்டில் கலியாணமும், முன்னிருந்த வியாதி நீங்கும், ஆனல் கண்ணில் வியாதியும், வயிற்று வலியும், புத்திர களத்திரபீடையும், தனம் வீடு இவைகளின் நாஸமும், வீண் சம்பாஷணையும், உண்டாகும்.

---

## சந்திர தசை.

சந்திர புக்தி.

பெண் குழந்தை ஜனனமும், மாதாவினிடமிருந்தோ மாதாவகைரா மூலமோலாபமும், ப்ராமணர்கள் ஸ்நேஹமும், வெகுநாளாக பிரயத்தினப்பட்டுக் கொண்டிருக்கும் காரியங்கள் ஜெயமடைதலும், தீர்த்தயாத்திரைகளும், பசுக்கள் குதிரைகள் முதலிய லாபங்களும், மிகுந்த தனலாபமும் உண்டாகும்.

குஜன் புக்தி.

வழக்கு, புத்தி சிதறிப்போகுதல், ஜ்வரம், குஷ்டரோகம், ஸ்திரீகள் கலகம், சத்துருக்களால்

பீடை, தனநாஸம், அவமானம், ஸ்நேகிதர்கள், சகோதரர்கள் இவர்கள் மூலம் தனநாஸமும் கஷ்டமும், வைசூரி, அக்னிபயம் இவைகள் நேரும்.

ராகு புக்தி.

தனநஷ்டம்; நகைகள் நஷ்டம், பெரியோர்கள் மூலம் தொந்திரவு, அரசாங்கத்தார் மூலம் பயம், புத்திரர்கட்குப் பீடை, பந்துக்களுக்கு ரோகம், காற்று, இடி இவை மூலமுண்டானபயம், அதிகமாக சாப்பிடுவதின் மூலமும், கண்டதைக்குடித்ததின் மூலம் ரோகமும், விஷபயம், குடும்பத்தை விட்டு பிரிதல், ஆகிய இவைகள் நேரிடும்.

குரு புக்தி.

தானதர்மம்செய்தலும். மித்திரர்களின் வரவும், பூஷணம் கிடைத்தலும், எங்கும் மரியாதையைப் பெறலும், பசு லாபமும்,புத்திர ஜனனமும், வாஹன லாபமும், முயற்சி செய்த காரியங்கள் கை கூடுதலும், நேரிடும்.

சனி புக்தி.

பலவிதரோகங்கள், மித்திரன், புத்திரன், ஸ்திரி இவர்களுக்கு பீடை, பசு நாசம், பொருள் நாசம், கருத்தவனால் கலகம், மாதா பீடையும், வாய் அடைத்துப்போய் விடல், சத்துருக்களுடன் தர்க்கம், துஷ்ட சகவாஸம், காலில் வியாதி ஆகிய இவைகள் நடக்கும்.

புதன் புக்தி.

தனலாபம், பசுலாபம், மனோதைரியமும், உள்ளில் கலகம், புத்திரலாபம், காரிய ஜெயம், வித்யாலாபம், மாதாவின் வர்க்கத்தால் தனலாபம், வித்வான்கள் ஸ்நேகம், வஸ்த்ரபூஷணங்கள் லாபம், வியாபாரம் விருத்தி, பெரிய வ்யாபாரிகள் ஸ்நேகம், நல்லபேர் இவைகள் நடைபெரும்.

கேது புக்தி.

மனதுக்கு துயரம், ஜலபயம், வேலைக்காரர் நாஸம், பந்துக்களுக்கு துன்பம், அக்னிபயம், சரீரத்தில் வீக்கம், இடது கண்ணில் வியாதி, தண்டனை பெறல், பலரால் வெறுக்கப்படல், ஸ்திரீஸம்பந்தமான வியாதி, முதலியன நேரும்.

சுக்கிரன் புக்தி.

வாகனம், பூஷணம் இவைகள் விற்க வாங்கல், களத்திர புத்திர சவுக்யமும், தனக்கு சரீர அசவுக்யமும், கொஞ்சம் பொருள் நஷ்டம், சத்துரு மூலம் காரியம் தடைபடுதலும், ஸ்திரீ மூலம் தனலாபமும், மாதாவுக்கு வியாதியும், இவைகள் நேரிடும்.

சூரிய புக்தி.

கெட்டவர்கள் ஸ்நேகம், கெட்ட ஸ்திரீயினிடம் ஆசை, பந்துகலகம், ஜ்வரம், பித்த வியாதி, மித்திரன் மூலம் தனலாபம், வீட்டில் கலியாணம், அரசர்களிடம் மரியாதை, உள்காய்ச்சலும், பல்வலி, அலைச்சல், பலவிதத்துன்பங்கள், கண்ணோய், மூத்திர சம்மந்தமான வியாதி ஆகிய இவைகள் நடைபெரும்.

# குஜன் தசை.

## குஜன் புக்தி.

சிரங்கு, நஷ்டமான பொருள் வருதலும், ஸஹோதரர்களுடன் விரோதம், பூமி மூலம் லாபமும், ஏவற்றொழில் செய்தலும், நாயினுல் கடிபடுதலும், நீசர் மூலம் பயம், காரியநாசமும், குழைந்தைகளுக்குப்பீடை, மனையாள் பிரிதல், திருடர் பயம் இவைகள் நடக்கும்.

## ராகு புக்தி.

பந்துவர்க்கத்தில் மனஸ்தாபமும், பீடையும், அக்கினிவிஷபயமும், பந்து நாசமும், கட்டிச்சிரங்கும், இடம் விட்டு இடம்போகுதலும், துஷ்டகர்மங்களும் உண்டாகும்.

## குரு புக்தி.

களத்திர பந்துக்கள் சவுக்பமும், அவர்களால் லாபமும், ப்ராமண பூஜையும், புண்ய தீர்த்த பிராப்தியும், காதில் வியாதியும், ஸ்லேஷ்மரோகமாரம்பமாதலும், காரியத்தில் ஜெயமும், விவசாயப்பெருக்கும் ஏற்படும்.

## சனி புக்தி.

அதிகமான கஷ்டமும், குடும்பத்தில் பீடையும், சத்துருக்களினுல் பணநாசமும், ஸ்தான நாசமும், ஏற்படும்.

புதன் புக்தி.

சூத்திர விரோதமும், நாற்கால் ப்ராணி நாஸமும், பணவரத்தும், கஷ்டம் வந்து உடன் விலகுதலும், வைசியர்களின் உதவியும் ஏற்படும்.

கேது புத்தி.

இடம் மாறுதலும், குடும்பத்தில் மரணமும், ஸ்திரீகள் மூலம் பகையும், வியாதியும், சத்துரு பீடையும், சஹோதரபகை பீடையும், உண்டாகும்.

சுக்கிர புக்தி.

இடது கண்ணில் கெடுதலும், கேது புக்தியில் சொல்லிய கஷ்டங்களும், வேலைக்காரர்கள் நாஸமும், வெகு காலமாக எதிர்பார்த்த பொருள் சேருதலும், ஏற்படும்.

சூரிய புக்தி.

அரசாங்கத்தாரால் சவுக்யமும், கௌரவமும், உயர்ந்தபதவியும், தனலாபமும், பிராம்மணன் மூலம் கஷ்டமும், மனைவிக்குப் பிடையும், கலகங்களும் உண்டாகும்.

சந்திர புக்தி.

தனலாபம், புத்திரஜனனம், வயிற்று வலி, பூமிலாபம், வீட்டிலிருக்கும் பசு கர்ப்பந்தரித்தலும், ஸ்தானம் மாறுதலும், உண்டாகும்.

---

# ராகு தசா.

## ராகு புக்தி.

விஷபயமும், பிறர் பெண்டீருடன் சேருதலும், துஷ்டர் மூலம் கஷ்டம், அரசாங்கத்தாரால் பயமும், மனோதுக்கமும், மனைவிக்குத் துன்பமும், இடம் மாறுதலும், தூரதேசங்களுக்கு போகுதல்—இவைகள் நடைபெறும்.

## குரு புக்தி

சவுக்யமும், பிராமணன் உதவியும், நினைத்தவைகள் கைகூடுதலும், கலியாணமும், புத்திரலாபமும் உண்டாகும்.

## சனி புக்தி

மித்திரன், களத்திரம், ஸகோதரன் இவர்களுடன் கலகமும், சரீரபீடையும், தொழில் நாஸமும், வேலைக்காரர்களுக்கு ஆபத்தும், பந்துக்களாலும் ஸ்நேகிதர்களாலும் உபத்ரவமும், தூரதேசவாசமும் உண்டாகும்.

## புதன் புக்தி.

புத்திரலாபமும், வருமானம் அதிகப்படுதலும், ஸ்நேகிதர் சேர்க்கையும், புத்தியை சில அபூர்வமான விஷயங்களில் உபயோகப்படுத்தலும், பிறர்க்கு யோசனை கூறுதலும், ஆனால் உயர்ந்தபதவியுள்ளவர்களிடம் சத்துருத்துவமும் ஏற்படும்.

கேது புக்தி.

பீடையும், ஸ்நேகிதர்களுடன் விரோதமும், குழந்தைக்குப் பீடையும், சரீரத்தில் வீக்கமும், மனைவிக்குத் துன்பமும், திருடுபோய் விடுதலும், நாற்கால் பிராணி நஷ்டமும் ஏற்படும்.

சுக்கிர புக்தி.

விவாஹம், பூமிலாபம், ஸ்வஜனங்களுடன் விரோதம், வஞ்சனையால் துன்பம், அன்னியதேசத்தில் வாகனப்ராப்தியும், ஏற்படும்.

சூரிய புக்தி.

கண்ணில் பீடை, களத்திர புத்திர பீடை, அரசாங்கத்தரால் பயம், பிராதாக்களுடன் கலகம், ஸ்தானப்ரஷ்டமும், ஏற்படும்.

சந்திர புக்தி.

களத்திர நாஸம், ஸ்நேகிதர்களுக்கு துன்பம், ஜலபயம், கலஹம், பந்து நாஸம், மனைவியால் பொருட்சேதம், தொழில் நாஸம் இவைகள் நடக்கும்.

குஜ புக்தி.

மனைவியால் கிலேஸமும், கலகமும், அநேகவித உபத்ரவங்களும் உண்டாகும்.

---

# குரு தசை.

## குரு புக்தி.

புத்திரஜனனம், பெரியவர்கள் சகவாஸம், தர்ம குணம், கலியாணம், வித்யாஜ்ஞானமும் உண்டாகும்.

## சனி புக்தி.

குடும்பத்தில் பீடையும், பணச்செலவும், மனஸ்தாபமும், வேலை அல்லது ஜீவனத்துக்கு வழியில்லாது கஷ்டப்படுதலும், புத்திர மூலம் தனநாஸமும், கஷ்டப்ரசவமும், லாகிரி வஸ்துக்களை உட்கொள்ளுதலும், வாயு பீடையும், இருந்த இடத்தில் ஐயம் உண்டாகாமையும் ஏற்படும்.

## புதன் புக்தி.

வாதம் பித்த சம்பந்தமான வ்யாதிகளும், பந்துக்கள் ஸ்நேகிதர்கள் சேர்க்கையும், நல்லபதவியும், வைசியர்களின் உதவியும், புண்ய கர்மங்களும் ஏற்படும்.

## கேது புக்தி.

மனக்கவலையும், குடும்பத்தில் பீடையும், கீழ் ஜாதிக்காரருடைய விரோதமும், மனையாள் மூலம் ஓரிடம் விட்டு மற்றொரு இடம் போகுதலும், தீர்த்த யாத்திரையும், குருவினாலும் ராஜாக்களாலும் தன லாபமும் உண்டாம்.

## சுக்கிர புக்தி.

தனலாபம், நாற்கால் ஜெந்துலாபம், விவாஹம், பூமிலாபமும், பந்துக்கள் வரவும், வாகன லாபமும், ஸ்திரீ மூலம் பீடையும், ஏற்படும்.

சூரிய புக்தி.

சத்துருக்களை ஜயித்தலும், கீர்த்தியும், ஸம்பத்தும், காரிய ஜெயமும், விட்டில் கலகமும், புக்தியின் முடிவில் நன்மையும், உண்டாகும்.

சந்திர புக்தி.

தனலாபமும், புத்திரலாபமும், நல்ல காரியஞ் செய்தலும், ஸ்திரீ மூலம் சந்தோஷமும், ஏற்படும்.

குஜன் புக்தி.

வீடுகட்டுதலும், கண்ணில் பிடையும், பந்துக்கள் நாஸமும், ஸ்தானப்ரஷ்டமும், நினைத்த காரியம் முடியாமலிருத்தலும், எற்படும்.

ராகு புக்தி.

அதிகமான செலவுகளும், மனதிற்கு சந்துஷ்டியில்லாமையும், கலகமும், மனைவிக்குப் பிடையும், மேல் மேல் கஷ்டமும், மாதாவின் மரணமும் உண்டாகும்.

---

## சனி த்சா.

சனி புக்தி.

வாயுரோகம் பாபகரமான காரியங்கள், பந்து கலகம், தனதான்ய நாஸம்.

புதன் புக்தி.

மித்திரனின் சேர்க்கை, ஞானம், அரசாங்கத் தாரால் புகழப்படல், பயிர்தொழிலிலும் வியாபாரத் திலும் லாபமுண்டாகும்.

கேது புக்தி

சரீர பீடையும், நீச்சஜனங்களின் கலகமும், கெட்டஸ்வப்னங்களும், புத்திரன் மூலம் தாரித்திரிய மும், ஸ்திரீகள் மூலம் கஷ்டமும் உண்டாகும்

சுக்கிர புக்தி.

களத்திரலாபமும், புத்திரலாபமும், காரிய ஜெயமும், பகையும் அதில் வெற்றியும் உண்டாகும்.

சூரிய புக்தி.

பிதிருமாதிருவர்க்கத்தில் ரோகம், சரீர பீடை, குடும்பத்தில் பலவித பீடைகளும், அரசாங்கத்தா ரால் கண்டிக்கப்படுதலும் உண்டாகும்.

சந்திர புக்தி

ஸ்நேகிதர்களுக்கு ஆபத்தும், ஜலம் காற்று இவை மூலம் பயமும், வீட்டில் கலகமும், ஸ்தானப் ரஷ்டமும், உண்டாம்.

குஜன் புக்தி.

சொந்த ஜனங்கள் பகை, ஸ்தானயுச்சிதி, ஜூரம், அலைச்சல், நகைகள் களவுபோகுதல், ஸ்நே கிதர் சகோதரர் இவர்கள் மூலம் பகை ஏற்படும்.

ராகு புக்தி.

வியாதியும், சாமான்கள் திருடுபோவதும், வழி தப்பி நடத்தலும், விஷபயமும், பற்பல கஷ்டங்களும் ஏற்படும்.

குரு புக்தி.

புதிதாய் ஓர் ஸ்தானம் கிடைத்தலும், குடும்பத்தில் பீடைகள் விலகுதலும், எதிலும் சந்தோஷமும், காரியங்கள் நிறைவேறுதலும் உண்டாகும்.

---

## புத தசா.

புதன் புக்தி.

வித்வான்களின் சேர்க்கையும், தர்மத்தில் பற்றுதலும், வித்தைலாபமும், எதிர்பார்த்த காரியம் முடிவுபெறல், நல்ல வீட்டின் லாபமும், ஏற்படும்.

கேது புக்தி.

பந்து பீடையும், மனஸ்தாபமும், சத்ருக்கள் மூலம் சங்கடமும், க்ஷேத்திரம் வாகனம் இவைகளின் நாஸமும், மருந்திடுருணத்தால் துன்பம்.

சுக்கிர புக்தி.

ஆபரணப்ராப்தியும், தனலாபமும், புதியஸ்நேகமும், வாகனலாபமும், சர்வகாரியானுகூலமும், வேறு தேசம் போனவர் வருதலும் உண்டாகும்.

சூரிய புக்தி.

அரசாங்கத்தாரால் மரியாதையும், புண்யசரித்திரங்களில் பிரியமும், மனையாளுக்கு பீடையும், இவைகள் நேரும்.

சந்திர புக்தி

சரீரபீடையும், பெண்கள் மூலம் கலகமும், யாவரும் பகையாகுதலும், நால்கால் ஜந்துக்களால் பயமும் நேரிடும்.

குஜ புக்தி.

பலவிதமான சரீரபீடையும். எடுத்ததெல்லாம் கலகத்தில் முடிதலும், சாமான் திருடு போகுதலும், நேரும்.

ராகு புக்தி.

பெருத்த தனநஷ்டமும், அவமானமும், விஷ பயமும், நீர்சம்மந்தமான வியாதியும், இருக்கும் இடம் விட்டு போய்விடுதலும். நீசர் மூலம் கலகமும், வேலைக்கு ஆகாரமில்லாமையும், நேரிடும்.

குரு புக்தி.

புத்திரப்ராப்தியும், விவாஹமும், தனலாபமும், நல்ல காரியப்பிரயத்னங்களும், ஆனல் பந்துக்கள் விரோதமும் உண்டாகும்.

சனி புக்தி.

ஷ்லேஷ்ம வாத ரோகங்களும், மனவருத்தமும், வீண்ப்ரயத்னங்களும், பயிர் நாஸமும் ஏற்படும்.

# கேது தசா.

### கேது புக்தி.

தனநாஸம், ஜ்வரம், மரணம், மனைவி, புத்திரர், சகோதரர் இவர்களின் பிரிவும், உண்டாகும்.

### சுக்கிர புக்தி.

புத்திரி ஜனனமும், ப்ராமணர், ஸ்திரீ பந்துக்கள் இவர்களுடன் கலகமும், அவமானமும், மனையாளுக்கு பீடைவந்து நீங்குதலும், ஏற்படும்.

### சூரியன் புக்தி.

பிதுர் மரணம், யாத்ரை, ஸ்வஜன விரோதம், ஜ்வரமும் உண்டாகும்.

### சந்திரன் புக்தி.

பெண்பிள்ளைகள் மூலம் சண்டையும், புத்திரருக்குப் பீடையும், கஷ்டப்ரஸவமும், புத்திரி ஜனனமும், தனலாபமும் உடனே நஷ்டமும், நேரிடும்.

### குஜன் புக்தி.

பந்து நாஸம், சத்குரு பீடை, பெண்களால் கேடு, சண்டை, சகோதரர் விரோதம், நடைபெரும்.

### ராகு புக்தி.

விஷபயம், துஷ்டர்களிடமிருந்து பயமும் நடைபெரும்.

### குரு புக்தி.

அரசர் ஸ்நேகம், விவாஹம், புத்திர ஜனனம் நேரிடும்.

சனி புக்தி.

ஏமாற்றப்படல், வேலைக்காரர் மூலம் கஷ்டம், இடம் மாறுதல், சொறி செரங்கு, மனதுக்கு சஞ்சலம், நடைபெரும்.

புதன் புக்தி

பந்துக்கள் பகை, புத்திரசோகம், எண்ணினதற்கு விரோதமாக முடிதல், ஆனால் வித்யா சுகங்களும், தனவரவும் ஏற்படும்.

---

## சுக்கிர தசா.

சுக்கிர புக்தி.

கீர்த்தியும், அரசாங்கத்தார் மூலம் லாபமும், விவாஹமும், காரியானுகூலமும் உண்டாகும்.

சூரிய புக்தி.

வியாதியும், கண், வயிறு, கன்னம் இவை சம்மந்தமான பிணியும், பந்துக்கள் பீடையும், நஷ்டமும், மனைவி புத்திரர் இவர்கள் பிரிதலும் நடைபெரும்.

சந்திர புக்தி.

வாயு அல்லது பித்தசம்மந்தமான வியாதியும், ஜலசம்மந்தமான வியாதியும், ஆனால் காரியம் அனுகூலமாகுதலும் நடக்கும்.

குஜ புக்தி.

பித்த வியாதியும், ரத்தம் கெட்டு விடுதலும், இரண்டு பேர் மூலம் பகையுண்டாகுதலும், கண்ணோயும், உண்டாகும்.

ராகு புக்தி.

நீலவஸ்த்ரக்கள், தனம் இவற்றின் லாபமும், ஸ்நேகிதர்களால் பயமும், புத்திரனால் கலகமும், விஷபயமும் உண்டாகும்.

குரு புக்தி.

பெண்டுபிள்ளைகளுக்குப் பீடையும், பெரியோர்களின் சேர்க்கையும், தனலாபமும் உண்டாகும்.

சனி புக்தி.

க்ரகலாபமும், சத்துருநாஸமும், அன்னத்வேஷமும், அரசாங்கத்தாரால் கௌரவிக்கப்படுதலும் நடக்கும்.

புதன் புக்தி.

ஸ்நேகிதனால் நன்மையும், ஞானமும், எதிலும் லாபமும், சத்துரு நாஸமும், உண்டாகும்.

கேது புக்தி.

விஷபயமும், மனையாளுக்கு நோயும், பந்து மரணமும், தனவிரயமும் உண்டாகும்.

# தசாபுக்தி நாதர்களுடைய ஆதிபத்யம் பார்க்கும் விதம்.



ஏதாவது ஒருதசை புக்தி நடந்தால், தசாநாதனுக்கு லக்னரீதியாக என்ன ஆதிபத்யம் முதலிலோ அந்த அதிபதி தசையாகவும், லக்னரீதியாக புக்தி நாதனுக்கு எந்த ஆதிபத்யம் முதலில் வருகிறதோ அந்தபாவாதி பதியின் புக்தியாகவும் கணக்குப் பண்ணி அதற்குண்டான பலனை தசாநாதன் புக்தி நாதன் இருவருக்கும் ஒருவருக்கொருவர் இருக்கும் மித்திரத்தன்மை, ஸ்தான, க்ஷேத்ரபலம் இவைகளைக் கொண்டு சொல்லவேண்டும். அப்புறம் புக்திநாதனுக்கு லக்னரீதியாக அடுத்த ஆதிபத்யம் எதுவோ அதைக்கண்டுகொண்டு இன்ன அதிபதியின் தசையில் இன்ன அதிபதியின் புக்தியில் என காணவேண்டும். பிறகு தசாநாதன் இரண்டு பாவங்களுக்கு அதிபதியானால் லக்னரீதியாக இரண்டாவதாக வரும் ஆதிபத்யத்தைக்கண்டும், லக்னரீதியாக புக்திநாதனுக்குமுதல் ஆதிபத்யத்தைகண்டும், இன்ன அதிபதி தசையில் இன்ன அதிபதிபுக்தி எனக்காணவேண்டும். இதேமாதிரியாக மறுபடியும் புக்தி நாதனுக்கு லக்னரீதியாகவரும் இரண்டாவதாக வரும் ஆதிபத்யத்தைக்கொண்டு இன்ன அதிபதியின் தசையில் இன்ன அதிபதியின் புக்தியில் எனகணக்கிட வேண்டும்.

இம்மாதிரியாகவே சந்திரன் இருக்கும் ராசியையும் லக்னமாக பாவித்து தசாநாதன் புக்திநாதர்களுடைய ஆதிபத்யத்தையும் காணவேண்டும்.

முடிவில் தசாநாதன் இருக்கும் ராசியையே லக்னமாகப்பாவித்து புக்தி நாதனுக்குண்டான ஆதிபத்யம் என்னவென்பதைக் கவனித்துப்பலனுரைக்க வேண்டும்.

## இதற்கு உதாரணம்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | செவ் | சந் கேது |
| குரு | | | |
| லக் | | | |
| ராகு | புதன் | சூரி | சுக் |

இந்த ஜாதகத்திற்கு சனிதசையில் குருபுக்தி நடக்கிறதென்று வைத்துக்கொள்வோம். இவர்களுடைய ஆதிபத்யங்கள்:—

1-வது—லக்னாதிபதி தசையில் த்ரிதியாதிபதி புக்தி
2-வது— ,, விரயாதிபதி புக்தி
3-வது—த்விதியாதிபதி தசையில் த்ரியாதி புக்தி
4-வது— ,, விரயாதிபதி புக்தி

எந்தெந்த பாவங்களுடைய ஸ்திதியை நாம் பார்க்கவேண்டுமோ அந்தந்த பாவங்களுக்கு தசா

நாதன் புக்தி நாதர்கள் என்ன அதிபர்களாகிறார்கள் என்று பார்த்து முன் சொன்னது போல் சொல்லவேண்டும்.

உதாரணமாக இந்த ஜாதகத்தில் தசாநாதனாகிய சனி சப்தமாதிபத்தியமும் அஷ்டமாதிபத்யமும் களத்திரலக்னத்துக்குப் பெற்று, புக்திநாதனாகிய குரு ஷஷ்டம, பாக்கியாதி பத்யம் பெற்றிருக்கிறார். அதன் விபரம் பின் வருமாறு:—

| | |
|---|---|
| 1 சப்தமாதி தசையில் | ஷஷ்டியாதிபதி புக்தி |
| 2 சப்தமாதி தசையில் | பாக்யாதிபதி புக்தி |
| 3 அஷ்டமாதி தசையில் | ஷஷ்டியாதிபதி புக்தி |
| 4 அஷ்டமாதி திசையில் | பாக்யாதிபதி புக்தி |
| 5 பாக்யஸ்தானத்தில் இருப்பவன் தசையில் | அஷ்டமத்தி லிருப்பவன் புக்தி |

என காணவேண்டும்.

## குறிப்பு.

லக்னரீதியாகவும் தசமபாவ ரீதியாகவும் தசாநாதர் புக்தி நாதர்களுக்கு துஸ்தானாதி பத்யமேற்பட்டு துஸ்தானத்திலுமிருப்பார்களேயானால் அந்தந்த தசாபுக்தியில் ஸ்தான நாஸம், அதாவது உத்தியோகமிழத்தல் முதலியன கண்டு கொள்ளவேண்டும். ஆனால் தசாநாதர் புக்திநாதர்கள் துஸ்தானாதிபதியானாலும் கேந்திரகோணங்களில் நட்பு, ஆட்சி, உச்சராசி அம்ஸம் இவற்றில் இருந்தால் உத்தியோகம் பண்ணுமிடத்தில் பலவிதமான கஷ்டங்கள் வந்து நீங்கும்.

ஸ்வயம் சுபமான க்ரகம் தான் நட்பு அல்லது ஆட்சியில் இருந்து ஏதாவது ஒரு பாவத்தைப்பார்த்தால் அந்தபாவத்திற்கு புஷ்டியும் தங்களுடைய துஸ்தானுதி பத்யத்தின் பலனை தங்களுடைய தசை புக்தி காலங்களில் கொடுப்பார்கள். இவ்விதம் ஸ்வயம் சுபமான க்ரகங்கள் குருவும் சுக்கிரனுமே.

இம்மாதிரியாகவே அங்காரகன், சனி, சூரியன் முதலிய ஸ்வயம் அசுபர்கள் தங்களுக்கு சுபாதிபத்யம் ஏற்பட்டு நட்பு ஆட்சிராசிகளில் நல்லஸ்தானத்தில் இருந்தால் (கேந்திரதிரிகோணங்களில்) முதலில் கஷ்டத்தைக்கொடுத்து பின்னுல் தங்கள் ஆதிபத்தியத்துக்கேற்ற பலன்களைக் கொடுக்கிருர்கள்.

அதாவது எந்தக்ரகமானுலும் தங்களுக்கு ஏற்பட்ட ஸ்வயம் சுபபலத்தையோ அசுப பலத்தையோ கொடுத்து பின்னுல் தங்களுடைய ஆதிபத்யபலன்களை தங்களுக்கு ஏற்பட்ட ஸ்தானபலம் க்ஷேத்ர பலம் இவைகளை ஒட்டி கொடுக்கிருர்கள்.

ஆகையினுல் தசாநாதன் புக்திநாதன் இவர்களுடைய ஆதிபத்யங்களை லக்னம் சந்திரலக்னங்களைக் கொண்டும், அவர்கள் ஒருவருக்கு கொருவர் இருக்கும் ஸ்தானங்களைக்கொண்டும் சொல்லவேண்டும். 'தசமபாவத்துக்கு திரிதிய, சஷ்டம, அஷ்டம, விரயாதிபதிகளுடைய தசா புக்திகள் அவமானத்தையும், தொழில் நாஸத்தையும், வியாபாரமோ உத்தியோகமோ நின்று விடுதலோ ஏற்படுமென்று சொல்லவேண்டும்.

# முக்கிய கவனிப்பு.

தசாநாதனுக்கு இரண்டு ஆதிபத்யங்கள் ஏற்பட்டால் அவனுக்கு லக்ன ரீதியாக எவ்வாதிபத்யம் முதலில் ஏற்படுகிறதோ, அது முதலிலும், இரண்டாவதாக ஏற்படும் ஆதிபத்யம் அந்த தசையின் பின் பாதியிலும் நடக்குமென சில வித்வான்கள் சொல்லுகிறார்கள்.

## இன்ன பாவங்கள் இன்ன விஷயங்களைச் சொல்லுகிறதென்பது.



1-ம் பாவம்—அல்லது லக்னபாவம் தேகம், கீர்த்தி.
2-ம் பாவம்—தனம், குடும்பம்.
3-ம் பாவம்—விக்ரமம் சகோதரன் (இளைய சகோதரம்)
4-ம் பாவம்—வித்தை, மாதா.
5-ம் பாவம்—புத்திரன், புத்தி.
6-ம் பாவம்—சத்துரு, வியாதி, கடன்.
7-ம் பாவம்—களத்திரம்.
9-ம் பாவம்—பிதா, தர்மம்.
10-ம் பாவம்—ஜீவனம், அந்தஸ்து.
11-ம் பாவம்—லாபம், மூத்தசகோதரம்.
12-ம் பாவம்—விரயம், மரணம்.



# பாவகாரகர்கள்.

| | |
|---|---|
| ஒன்ரும் பாவம் | சூரியன். |
| இரண்டாம் பாவம் | குரு. |
| மூன்ரும் பாவம் | குஜன். |
| நான்காம் பாவம் | சந்திரன், புதன். |
| ஐந்தாம் பாவம் | குரு. |
| ஆரும் பாவம் | சனி, செவ்வாய். |
| ஏழாம் பாவம் | சுக்கிரன். |
| எட்டாம் பாவம் | சனி. |
| ஒன்பதாம் பாவம் | சூரியன், சனி, குரு |
| பத்தாம் பாவம் | குரு, சூரியன், புதன், சனி |
| பதினொராம் பாவம் | குரு. |
| பன்னிரெண்டாம் பாவம் | சனி |

அந்தந்த பாவக்காரகர்கள் தங்களுக்குரியபாவங்களில் இருந்தால் அந்தந்தபாவங்களை முதலில் நாசம்செய்து அப்புறம் விருத்தியடையும்படி செய்வார்கள். அந்தந்தபாவாதிபதிகளும் அந்தந்தபாவங்களில் இருந்தால் அந்தந்தபாவங்களை முதலில் நாசமடைய செய்வார்கள். பிறகு விருத்தி பண்ணுவார்கள்.

அந்தந்தபாவகாரகர்களும் பாவாதிபதிகளும் பாவங்களும் ஸ்தான, க்ஷேத்ர, சுபக்ரகபார்வை சம்மந்த பலங்களைப் பெற்றிருந்தால் அந்தந்தபாவங்கள் விருத்தியடையும்.

# மற்றொரு விதம்.

| | |
|---|---|
| சூரியன் | பிதுர்காரகன். |
| சந்திரன் | மாதுர்காரகன். |
| குஜன் | சகோதரகாரகன். |
| புதன் | வித்யாகாரகன் |
| குரு | புத்திரக்காரகன். |
| சுக்கிரன் | களத்திரக்காரகன் |
| சனி | ஆயுஷ்காரகன். |
| ராகு | மாதாமககாரகன் (தாய்வழி பந்து) |
| கேது | பிதாமககாரகன் (தகப்பன் வழி பந்து) |

---

| | |
|---|---|
| சூரியன் | ஆத்மா. |
| சந்திரன் | மனஸு. |
| குஜன் | விக்ரமம். |
| புதன் | வாக்கு. |
| குரு | அறிவு, யுக்தி. |
| சுக்கிரன் | ஆசை. |
| சனி | தூக்கம். |
| ராகு, கேது | ஞானம். |

இங்கு வெகு முக்யமானதை எழுதியிருக்கிறேன். மற்றப்படி ஒவ்வொருக்ரகங்களினுடைய மற்றகாரகங்களை வேறு ஜோதிடப் புத்தகங்களில் கண்டு கொள்க.

---

# கிரஹ சமயம் அறியும் வழி.

மேஷத்திலிருந்து லக்னம் எதுவோ அதுவரையில் எண்ணி வந்த தொகையையும், எந்தக்ரஹத்தின் சமயம் தெரியவேண்டுமோ அந்த க்ரஹம் லக்னத்திலிருந்து எத்தனுவது ராசியில் இருக்கிறதோ அந்த தொகையையும் கூட்டி, கூட்டிவந்த தொகையை இரண்டால் பெருக்கி, பெருக்கிவந்த தொகையை அந்த க்ரகத்திற்கு உடுதசாவருஷ சங்கை எவ்வளவோ அந்த தொகையினுல் பெருக்கி, பெருக்கிவந்த தொகையை 27 - ஆல் வகுத்து வந்தமீதத்தைக் கொண்டு பின் சொல்லியவாறு அறியவேண்டும்:—

| | | | |
|---|---|---|---|
| மீதம் | 1. | ஆனுல் | ஸ்நானசமயம்—எடுத்த காரியம் ஜெயமாகுதல் - நல்லகுழந்தைகள் எங்கும்மரியாதை. |
| ,, | 2. | ,, | ஆடைதரித்தல்—சுகமான வாழ்வு தனவரவு அரசாங்கத்தாரால் கௌரவிக்கப்படுதல். |
| ,, | 3. | ,, | வாஸனை அநுபவிக்கும் சமயம்—செல்வாக்கு. |
| ,, | 4. | ,, | பூஜைக்கு ஆரம்பிக்கும் சமயம்—பூலாபம் - வாகனலாபம். |
| ,, | 5. | ,, | தொழுது கொண்டிருத்தல்—பொருள்விரயம்-வியாஜ்ஜியம்-சங்கடம். |
| ,, | 6. | ,, | நமஸ்கார சமயம்—லாபம்-மதிப்பு துஷ்டசகவாசம். |
| ,, | 7. | ,, | பலிகொடுத்தல்—துக்கம் - ஆனுல் வித்தைலாபம். |

மீதம் 8. ஆனால் ஜபம் பண்ணும் சமயம்—தனலாபம்-பூலாபம்-பந்துக்கள் வருதல்.

,, 9. ,, நமஸ்காரசமயம் - சத்விஷயங்களை அறிதல்.

,, 10. ,, பிரதக்ஷணமாக வரும் சமயம்—நோய்-வியாஜ்ஜியம்.

,, 11. ,, தியான சமயம்—உத்தியோக லாபம்-நல்லபதவி கிடைத்தல்.

,, 12. ,, விருந்தாளிகளை வரவேற்கும் சமயம்—தனலாபம்.

,, 13. ,, அன்னம் புசிக்கும் சமயம்—ஜுரம்-கெட்ட எண்ணம் அநேகரால் வெறுக்கப்படுதல்.

,, 14. ,, தாகவிடாய் தீர்ததுக்கொள்ளும் சமயம்—கெட்ட வழக்கங்களை அநுஷ்டித்தல்.

,, 15. ,, பசியினால்வருந்தும்சமயம்—அநேகர் விரோதியாகுதல்.

,, 16. ,, தாம்பூலம்போடும்சமயம்—உயர்ந்தபதவி கிடைத்தல்.

,, 17. ,, நியாயஸ்தலம் ஏறும் சமயம்—வேதாந்தஞானம்கிடைத்தல்- தனவரவு.

,, 18. ,, கிரீடத்தை தரிக்கும் சமயம்—தனவரவு.

,, 19. ,, ரகசியம் பேசிக்கொண்டிருக்கும் சமயம்—சோம்பேரிதனம்.

மீதம் 20. ஆனல் சும்மா இருந்தல் சமயம்—வாசித்தவனுயிருந்தாலும்கூட சுருசுருப்பற்றவனுகவும் அஜாக்கிரதையாயும் இருத்தல்

,, 21. ,, தூங்கும் சமயம் — முன்கோபி-நோயாளி.

,, 22. ,, வெளியில்போகும் சமயம்—நல்லவர்களை பழித்துப் பேசுதல்

,, 23. ,, தித்திப்பு புசிக்கும் சமயம்—சுகமானவாழ்வு-நல்ல குழந்தைகள்-தர்ம குணமுள்ள மனைவி-எங்கும் மரியாதை.

,, 24 ,, தனத்தைகையில்வைத்துக்கொண்டிருக்கும் சமயம்—பல விதங்களால் தனவரவு-காரியஜயம்.

,, 25. ,, முடி இரக்கும் சமயம்—தொழில் நாசம்-துக்கம்-உதவியற்று இருத்தல்.

,, 26. ,, தன்னைமரந்து தூங்குதல்—வியாதி-மனஸ்தாபம்.

,, 27. ,, ஸ்திரீ சம்போக சமயம்—கெட்ட என்ணங்கள் - துக்கம்-அநாவசியமான சந்தேகங்கள்.

N. B. இங்கு க்ரகங்களின் சமயங்களை கூறி அந்தந்த சமயங்களுக்கு இன்ன பலன்கள் எனகூறப்பட்டிருக்கிறது. அந்தந்த பலன்கள் எந்த க்ரஹத்தின் சமயமாக வருகின்றனவோ அந்த க்ரகத்தின் தசாபுக்தியில் நேரிடுமென கண்டுகொள்ளவேண்டும்.

# க்ரஹமண்டலம் அறிய.

எந்த க்ரஹத்தின் மண்டலம் தெரியவேண்டுமோ அந்த க்ரஹம் லக்னமுதல் எத்தனுவது ராசியிலிருக்கிறது என்று கண்டு அந்த தொகையை, லக்னம் மேஷத்திலிருந்து எத்தனுவது ராசியென்று அரிந்து அந்த தொகையால் பெருக்கி 27-ஆல் வகுத்துவருகிற மீதம் எதுவோ அந்த எண் பிரகாரம் அஸ்வினியிலிருந்து எத்தனுவது நக்ஷத்திரமாகிறதோ அந்த நக்ஷத்திரத்தை அறிந்து அந்த நக்ஷத்திரம் எந்த மண்டலமோ அம்மண்டலமே அக்கிரகத்தின் மண்டலமென அறியவேண்டும்.

| தேவமண்டலம் | மனுஷமண்டலம் | அரக்கர்மண்டலம் |
|---|---|---|
| அசுவனி | பரணி | க்ருத்திகை |
| மிருகசீருஷம் | ரோகணி | ஆயில்யம் |
| புனர் பூசம் | திருவாதிரை | மகம் |
| பூசம் | பூரம் | சித்திரை |
| அஸ்தம். | உத்திரம் | விசாகம் |
| ஸ்வாதி | பூராடம் | கேட்டை |
| அநுஷ்ம | உத்திராடம் | மூலம் |
| திருவோணம் | பூரட்டாதி | அவிட்டம் |
| ரேவதி | உத்திரட்டாதி | சதயம் |

தேவமண்டலம் உத்தமம் என்றும் மனுஷமண்டலம் மத்திமம் என்றும், அரக்கர் மண்டலம் அதமம் என்றும் அறியவேண்டும்.

Sri Bharathi Press, Choolai, Madras.

॥ श्रीराधाकृष्णपरब्रह्मणे नमः॥



# ॥ जातकचन्द्रिका ॥

# ஜாதகசந்திரிகை.

(தமிழுரையுடன்.)

இச்சிறந்த உரை

மஹாமஹோபாத்தியாய வேதாந்தகேஸரி
பங்காளுடு பிரும்மஸ்ரீ, கணபதி சாஸ்திரிகள்
அவர்களின் முக்கிய சிஷ்யரும், வியாகரண வேதாந்த
சாஸ்திரபாரங்கதரும், பாகவத, பகவத்கீதோபன்யாஸகரும்,
சோதிட மந்திர சாஸ்திர வித்வானும், 'ஆர்யமத ஸம்வர்த்தனி'
பத்திராதிபருமான

**பிரும்மஸ்ரீ, கடலங்குடி நடேச சாஸ்திரிகள்**

அவர்களால் இயற்றி

தமது 'ஆர்யமத ஸம்வர்த்தனி' பிரஸ்ஸில்
அச்சிட்டுப் பிரசுரஞ் செய்யப்பட்டது.

காபிரைட்]　　1926　　[விலை ரூ. 1-0-0

# முகவுரை.



ஜாதகசந்திரிகை.முன் ஜன்மங்களிற் செய்த புண்ணிய பாப கர்மங்காரணமாய் இந்த ஜன்மத்தில் சுகம் துக்கம் இவைகள் நேருகின்றன வென்பதை நமது ஆரிய சாஸ்திரங்கள் வற்புருத்து கின்றன. அவ்விதம் ஊழ்வினை காரணமாய் இப்பிறவியில் இன்னின்ன ஸமயத்தில் இன்னின்ன வஸ்துக்கள் மூலம் மேற்கூறிய சுகதுக்கங்கள் நேரக்கூடும் என்பதைச் சூரியன் முதல் கேது முடிய வுள்ள 9 கிரஹங்களும் பிராணிகள் பிறக்கும் காலத்திலுள்ள மேஷாதிலக்கினங்களிலேற்படும் தத்தமது சஞ்சாரமூலம் சூசிப்பிக்கின்றனவென்பது சோதிட சாஸ்திரங்களின் கொள்கை. ஆகவே பிராணிகளின் ஜனனகாலத்தி லமையப்பெற்ற மேஷாதி ராசிகளில் சூரியாதிகிரஹங்களின் சஞ்சாரமே"ஜாதகம்" என்றேற்படும். ஆயினும் "அண்டத்தி லுள்ளபடியே பிண்டத்திலும் நடை பெறும்" என்றபடி அண்டத்திலுள்ள சூரியாதி கிரஹ சஞ்சா ரமூலம் பிண்டமான சரீரத்தில் நிகழும் சுகதுக்காதிகளைத்தெரிந்து கொள்ளுவதற்காக சூரியாதி கிரஹ சஞ்சாரஸ்தானமான மேஷாதி ராசிகளைத் தனியே வழக்கப்படி அமைத்துக் கொண்டும், இவற்றுள் பிராணியின் ஜனனகாலத்தி லமைந்துள்ள ராசியை ஜன்மலக்கினமாகக்கொண்டும், சூரியாதி கிரஹங்களின் சஞ்சாரம் அச்சமயம் இன்னின்னவிடங்களி லமையப் பெற்றிருக் கின்றது என்பதைக் காட்டவே சுத்தமான திருக்கணித பஞ்சாங்கப்படி திருக்ஸ்புடஞ்செய்துகிரஹசஞ்சாரங்களையறிந்து அந்தந்தக் கிரஹங்களின் சாரங்களை நாம் கற்பித்துக் கொண்ட ஓர்வகை

கட்டத்திலமைக்கிறோம். இவ்விதம் கிரஹங்க ளடைக்கப் பெற்ற பேஷாதி ராசிகளைக் காட்டும் கட்டமும் உலகில் ஜாதகமென்றே வழங்கப் படுகின்றது, இம்முறைப்படி ஜனனகாலத்திய கிரஹநிலையை நாமறிந்தோமாயினும் கிரஹங்கள், பின்னர் நேரும் பலனை எவ்விதம் தெரிவிக்கின்றன வென்பதை நாம் அறிய முடியாதவர்களா யிருக்கிறோம். இருள் சூழ்ந்த விடத்திற் கிடக்கும் வஸ்துவை சந்திரிகை யினுதவியால் அறிந்து கொள்வது போலவே, அக்ஞானமாகிற இருளாற் சூழப்பெற்ற ஒவ்வொரு பிராணியும் தத்தமது சஞ்சார மூலம் பின்னர் வரும் சுபாசுபபலனைக் கிரஹங்கள் தெரிவிக்கும் முறையை யறியாமலிருக்கும் பொழுது இந்தச்சாஸ்திரமானது அம்முறையைத் தெரிவிப்பதால் இதுசந்திரிகை போலாகிறது. ஆகவே இந்தக்கிரந்தத்திற் கிடப்பெற்ற ஜாதகசந்திரிகை என்றபெயரானது மிக்கப்பொருத்த முள்ளதாகவே ஆகிவிட்டது.

ஜாதகவிஷயத்தில், சந்திரிகை போன்று விஷயங்களை யறிவிக்கும் இந்தக் கிரந்தமானது மஹாகவி ஸ்ரீகாளிதாஸனால் செய்யப்பட்டதாக கர்ணபரம்பரையாய்க் கூறப்பட்டு வருகிறது. இதிலமைக்கப்பெற்ற சொற்சுவை, பொருட்சுவை நிறைந்த அருமைதங்கிய சுலோகரசனையை க்கொண்டும்,

सिद्धान्तमौपनिषदं शुद्धान्तं परमेष्ठिनः ।
शोणाधरमहं किञ्चिद्वीणाधरमुपास्महे ॥

என்று தொடக்கத்திற் கூறிய மங்கள சுலோகத்தைக் கொண்டும் அவ்விதம் கர்ணபரம் பரையாய்க் கூறப்படுவது நியாயமாயிருக்கலா மென்றும் ஒருவாறு எண்ண இடமேற்படுகின்றது. மேலும் இந்த ஜாதகசந்திரிகையானது பெ

துவாய்ச் சோதிடசாஸ்திரத்திற்கே திறவுகோல் போலுள்ளதெனலாம். ஏனெனில் இதை நன்ருய்கற்றுவிட்டபிறகே எந்தச்சோதிட சாஸ்திரத்தையும் கற்றுப்பலன் சொல்வது அனுபவத்தில் ஒற்று நடப்பதே அதன்காரணமாகும். மேலும் நமது தேசத்திலுள்ள எவ்வளவுபிரபல சோதிடவித்வான்களும் இதனுதவியின்றி ஒருபொழுதும் ஜாதகபலன் சொல்வதில்லை என்பது வெளிப்படை. ஆகவே இத்தகைய பெருமைவாய்ந்த இந்த நூல் வடமொழியிலெழுதப்பட்டிருப்பதாலும், மிக்க மிக்க அர்த்த புஷ்டியுள்ளதாகையாலும் இதன்பொருளை வடமொழிப்பயிர்ச்சியற்றவர்களும், வடமொழிப்பயிர்ச்சி பெற்றசிலரும் சுலுவில் அறியக் கூடாததாகவே இருந்துவந்திருக்கிறது.

மேலும் இந்த ஜாதகசந்திரிகையைச் சிலர் ஆங்கிலத்திலும் தமிழிலும் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கின்றனர். ஆயினும் நாமும்தமிழில் இதற்குப்பதவுரை, கருத்துரைவிசேஷவுரைகளை எழுதிவெளியிட்டிருக்கிறோம். பலர் செய்தகாரியத்தையே நாமும் செய்யவேண்டுவது அவசியந்தானு வென்பது,வேறு மொழிபெயர்ப்புகளையும் நமதுமொழிபெயர்ப்பையும் வாசிப்பவர்க்கு விளங்கக் கூடுமாதலால் அதுவிஷயமாக அதிகம் நாம்எழுதவேண்டுவதில்லை என்றுஎண்ணுகிறோம். மேலும் வடமொழியில் சுவல்பபழக்கமுள்ளவரும் கூட ரகுவம்சம் முதலியகாவ்யங்களைப்படிப்பது போல நாம் எழுதிய பதவுரையைக் கொண்டு இந்நூலைப்படிக்கும்பொழுது சோதிடசாஸ்திரஞானமவர்க்குண்டாவதுடன் விசேஷமாய்வடமொழிப்பயிற்சியும்அவர்க்கேற்பட்டுபின்னும்வடமொழியிலுள்ள அநேகம் சாஸ்திரங்களை எவ்வித

உதவியுமின்றித் தாமேபடித்தறிவதற்குரியயோக்கியதையும் அவர்க்குண்டாகக் கூடும் என்பதில்யாதுமாக்ஷேபமில்லை. ஆகவே நமது மொழி பெயர்ப்பானது இக்கிரந்தத்தின் உண்மையான பொருளைக் கூடியவரை விரித்துக்கூறி யிருப்பதுடன், வடமொழிப்பயிர்ச்சி பெறுவதற்கு உபயோகமாகும் முறையை யனுஸரித்ததாயு மிருப்பதால். "செய்ததைச் செய்தல்" என்ற குற்றம் நமக்கு ஒருபொழுதும் வருவதற்கிடமில்லை. மேலும் சோதிட சாஸ்திரத்திற் பயிர்ச்சி பெற விரும்பும் எவரும் இன்னூலைப் படித்தறிந்தே பின்னர் பிருஹத்ஜாதகம் முதலியசாஸ்திரங்களைப்படித்தறிந்தால் ஜாதக பலனைத் தெளிவாய் அறிந்து கொள்ளக் கூடுமாதலால் இதை, எவரும், படித்தறியவேண்டுவதவசியமானது என்றும், இத்துடன் நமது கோசர பலநிர்ணயம் என்றபுஸ்தகத்தையும் ஹோரைஎன்ற பிருஹத் ஜாதக தமிழ்மொழிபெயர்ப்பையும் படித்தறிந்து கொள்வது மிக்க அவசியமானதென்றும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

கடலங்குடிநடேசசாஸ்திரிகள்.
12-9-1926. இக்கிரந்தத்தை இயற்றியவர்.



# விஷய அட்டவணை.



கட்டத்திலமைக்கிறோம். இவ்விதம் கிரஹங்களடைக்கப் பெற்ற மேஷாதி ராசிகளைக் காட்டும் கட்டமும் உலகில் ஜாதகமென்றே வழங்கப் படுகின்றது, இம்முறைப்படி ஜனனகாலத்திய கிரஹநிலையை நாமறிந்தோமாயினும் கிரஹங்கள், பின்னர் நேரும் பலனை எவ்விதம் தெரிவிக்கின்றனவென்பதை நாம் அறிய முடியாதவர்களா யிருக்கிறோம். இருள் சூழ்ந்த விடத்திற் கிடக்கும் வஸ்துவை சந்திரிகை யினுதவியால் அறிந்து கொள்வது போலவே, அக்ஞானமாகிற இருளாற் சூழப்பெற்ற ஒவ்வொரு பிராணியும் தத்தமது சஞ்சார மூலம் பின்னர் வரும் சுபாசுபபலனைக் கிரஹங்கள் தெரிவிக்கும் முறையை யறியாமலிருக்கும் பொழுது இந்தச்சாஸ்திரமானது அம்முறையைத் தெரிவிப்பதால் இதுசந்திரிகை போலாகிறது. ஆகவே இந்தக்கிரந்தத்திற் கிடப்பெற்ற ஜாதகசந்திரிகை என்றபெயரானது மிக்கப்பொருத்தமுள்ளதாகவே ஆகிவிட்டது.

ஜாதகவிஷயத்தில், சந்திரிகை போன்று விஷயங்களை பரிவிக்கும் இந்தக் கிரந்தமானது மஹாகவி ஸ்ரீகாளிதாஸனால் செய்யப்பட்டதாக கர்ணபரம்பரையாய்க் கூறப்பட்டு வருகிறது. இதிலமைக்கப்பெற்ற சொற்சுவை, பொருட்சுவை நிறைந்த அருமைதங்கிய சுலோகரசனையைக்கொண்டும்,

सिद्धान्तमौपनिषदं शुद्धान्तं परमेष्ठिनः ।
शोणाधरमहं किञ्चिद्वीणाधरमुपास्महे ॥

என்று தொடக்கத்திற் கூறிய மங்கள சுலோகத்தைக்கொண்டும் அவ்விதம் கர்ணபரம் பரையாய்க் கூறப்படுவது நியாயமாயிருக்கலா மென்றும் ஒருவாறு எண்ண இடமேற்படுகின்றது. மேலும் இந்த ஜாதகசந்திரிகையானது பொ

துவாய்ச் சோதிடசாஸ்திரத்திற்கே திறவுகோல் போலுள்ளதெனலாம். ஏனெனில் இதை நன்றாய்க்கற்றுவிட்டபிறகே எந்தச்சோதிட சாஸ்திரத்தையும் கற்றுப்பலன் சொல்வது அனுபவத்தில் ஒற்று நடப்பதே அதன்காரணமாகும். மேலும் நமது தேசத்திலுள்ள எவ்வளவுபிரபல சோதிடவித்வான்களும் இதனுதவியின்றி ஒருபொழுதும் ஜாதகபலன் சொல்வதில்லை என்பது வெளிப்படை. ஆகவே இத்தகைய பெருமைவாய்ந்த இந்த நூல் வடமொழியிலெழுதப்பட்டிருப்பதாலும், மிக்கமிக்க அர்த்த புஷ்டியுள்ளதாகையாலும் இதன்பொருளை வடமொழிப்பயிர்ச்சிபெற்றவர்களும், வடமொழிப்பயிர்ச்சி பெற்றசிலரும் சுளுவில் அறியக் கூடாததாகவே இருந்துவந்திருக்கிறது.

மேலும் இந்த ஜாதகசந்திரிகையைச் சிலர் ஆங்கிலத்திலும் தமிழிலும் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கின்றனர். ஆயினும் நாமும்தமிழில் இதற்குப்பதவுரை, கருத்துரைவிசேஷவுரைகளை எழுதிவெளியிட்டிருக்கிறோம். பலர் செய்தகாரியத்தையே நாமும் செய்யவேண்டுவது அவசியந்தானு வென்பது,வேறு மொழிபெயர்ப்புகளையும் நமதுமொழிபெயர்ப்பையும் வாசிப்பவர்க்கு விளங்கக் கூடுமாதலால் அதுவிஷயமாக அதிகம் நாம்எழுதவேண்டுவதில்லை என்றுஎண்ணுகிறோம். மேலும் வடமொழியில் சுவல்பபழக்கமுள்ளவரும் கூட ரகுவம்சம் முதலியகாவ்யங்களைப்படிப்பது போல நாம் எழுதிய பதவுரையைக் கொண்டு இன்னூலைப்படிக்கும்பொழுது சோதிடசாஸ்திரஞானமவர்க்குண்டாவதுடன் விசேஷமாய்வடமொழிப்பயிற்சியும்அவர்க்கேற்பட்டுபின்னும்வடமொழியிலுள்ள அனேகம் சாஸ்திரங்களை எவ்வித

உதவியுமின்றித் தாமேபடித்தறிவதற்குரியயோக்கியதையும் அவர்க்குண்டாகக் கூடும் என்பதில்யாதுமாக்ஷேபமில்லை. ஆகவே நமது மொழி பெயர்ப்பானது இக்கிரந்தத்தின் உண்மையான பொருளைக் கூடியவரை விரித்துக்கூறி யிருப்பதுடன், வடமொழிப்பயிர்ச்சி பெறுவதற்கு உபயோகமாகும் முறையை யனுஸரித்ததாயு மிருப்பதால். "செய்ததைச் செய்தல்" என்ற குற்றம் நமக்கு ஒருபொழுதும் வருவதற்கிடமில்லை. மேலும் சோதிட சாஸ்திரத்திற் பயிர்ச்சி பெற விரும்பும் எவரும் இந்நூலைப் படித்தறிந்தே பின்னர் பிருஹத்ஜாதகம் முதலியசாஸ்திரங்களைப்படித்தறிந்தால் ஜாதக பலனைத் தெளிவாய் அறிந்து கொள்ளக் கூடுமாதலால் இதை, எவரும், படித்தறியவேண்டுவத வசியமானது என்றும், இத்துடன் நமது கோசர பலநிர்ணயம் என்றபுஸ்தகததையும் ஹோரைஎன்ற பிருஹத் ஜாதக தமிழ்மொழிபெயர்ப்பையும் படித்தறிந்து கொள்வது மிக்க அவசியமானதென்றும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

கடலங்குடிநடேசசாஸ்திரிகள்.
12-9-1926. இக்கிரந்தத்தை இயற்றியவர்.



# விஷய அட்டவணை.



பக்கம்

பக்கம்

## ஆயுர்த்தாயப்பிரகரணம்.

## ராஜயோக புக்திலக்ஷணம்.

அட்டவணை முற்றிற்று.

॥ श्रीः ॥

॥ श्रीगोपालश्शरणम् ॥



# ॥ जातकचन्द्रिका ॥

प्रारभ्यते.

## ஜாதகசந்திரிகை.



सूर्यः शौर्यमथेन्दुरुच्चपदवीं सन्मंगळं मङ्गळः
  सद्बुद्धिं च बुधो गुरुश्च गुरुतां शुक्रः सुखं शं शनिः ।
राहुर्बाहुबलं करोतु विपुलं केतुः कुलस्योन्नतिं
  नित्यं प्रीतिकरा भवन्तु भवतां सर्वे प्रसन्ना ग्रहाः ॥

सूर्यो यच्छतु भूपतां, द्विजपतिः प्रीतिं परां तन्वतां,
  मांगळ्यं विदधातु भूमितनयो, बुद्धिं विधत्तां बुधः ।
गौरं गौरवमातनोतु च गुरुः, शुक्रः सशुक्रार्थदः,
  सौरिर्वैरिविनाशनं वितनुतां, रोगक्षयं सैंहिकः ॥

मू०॥ सिद्धान्तमौपनिषदं शुद्धान्तं परमेष्ठिनः ।
शोणाधरं वयं किञ्चिद्वीणाधरमुपास्महे ॥ १ ॥

(ப - ரை) **औपनिषदम्**-உபநிடதத்திற்கூறிய **सिद्धान्तम्**=முடிவு பொருளாயும் **शोणाधरम्**-சிவந்த உதடுள்ளவளாயும் **वीणाधरम्**-வீணையைக் கையிற்றாங்கினவளாயு மிருக்கின்ற **परमेष्ठिनः**-பிரும்ம தேவனுடைய **किञ्चित्**-மிக்க மகிமைவாய்ந்த **शुद्धान्तम्**-களத்திரமான ஸரஸ்வதி தேவியை **वयम्**=நாம் **उपास्महे**=உபாஸிக்கிறோம். (தியானிக்கிறோம்)

அவதாரிகை—ஜாதக சந்திரிகை என்ற இந்தக் கிரந்தமானது சோதிட சாஸ்திர மாகிற இரும்புப் பெட்டிக்குத்திறவு கோல் போனுள்ளது. அதற்கென்றேற்பட்டத் திறவு கோலின்றி இரும்புப் பெட்டியைத் திறக்க வியலாதது போல அருமை தங்கிய இந்நூலின் உதவியில்லாவிடில் சோதிடசாஸ்திரத்தின் உண்மையையறிவ தென்பது எவர்க்கும் முடியாத காரியமேயாகும். ஆதலால் இந்நூலின் உட்கருத்தை எவரும் அறிந்து கொள்வது அவசியமாகின்றமையின், வடமொழியிலுள்ள இந்நூலை நாம் மொழி பெயர்க்கத் தொடங்குகிறோம். நூலாசிரியர் ஊழ்வினையின் பயனுய் ஒவ்வொரு ஜாதகர்க்கும் நேரும் பலனை பாராசரஹோரையிற் சொல்லிய உடுதசாக்கிரமத்தை யனுசரித்துத்தாம் விரிவு படுத்துவதாக முதன் முதலில் தெரிவிக்கிறார் :—

मू०॥ फलानि नक्षत्रदशाप्रकारेण विवृण्महे ।
वयं पाराशरीं होरामनुसृत्य यथामति ॥२॥

(ப - ரை) वयम्-நாம் पाराशरीम्-பராசரமஹருஷியாற் செய்யப்பட்ட होराम्-ஹோரையை अनुसृत्य=அனுசரித்து फलानि=ஜாதகனுக்கு நிகழும் பலன்களை नक्षत्रदशाप्रकारेण-உடுதசாக்கிரமமாக यथामति=எமது புத்திக்குத் தோன்றி பவளவு विवृण्महे=விரிவுபடுத்துகின்றோம்.

(தா - ம்) ஜாதகனுக்கு அவனது வாழ் நாளில் நிகழும் பலன்களை யறிந்து கொள்ளுவதர்க்குச் சோதிட சாஸ்திரங்களிற்பற்பல வழிகள் உபதேசிக்கப் பட்டிருக்கின்றனவாயினும் பராசரமஹருஷியா லியற்றப்பட்ட பிருஹத்பராசர ஹோரையிற் சொல்லிய உடுதசாக்கிரமத்தை யொட்டியே இந்தக் கிரந்தத்தில் ஜாதக பலன் விரிக்கப் படுகின்றது (எ - று.)

(அ - கை) லக்னம் முதலிய 12-பாவங்களையும், தசாபுக்திக்கிரமம், கேந்திரம், திரிகோணம், இவை முதலியவற்றின் லக்ஷணத்தையும் வேறு சாஸ்திரத்தைக் கொண்டு அறிந்து கொள்ள வேண்டும் என்பதைத் தெரிவிக்கிறார்.

மூ०। बुधैर्भावादयस्सर्वे ज्ञेयास्सामान्यशास्त्रतः ।
एतच्छास्त्रानुसारेण संज्ञां ब्रूमो विशेषतः ॥ २ ॥

(ப - ரை) भावादयः-भाव=லக்னம் முதலிய 12-பாவங்களை आदयः = முதலாவதாகவுடைய सर्वे = மற்றவையாவும் (அதாவது தசாபுக்தி விபாகம், கேந்திரம், திரிகோணம், முதலியன) सामान्यशास्त्रतः-வேறு சோதிட சாஸ்திரங்களினின்றும் बुधैः= சோதிடப் புலவர்களால் ज्ञेयाः=அறிந்து கொள்ளத்தக்கவை (वयम्-நாம்) एतच्छास्त्रानुसारेण - இனி

சொல்லப்போகும் இந்தச் சாஸ்திரத்திர்க் கேற்றவாறு विशेषतः-தனிப்பட்ட संज्ञाम्-பெயரை (இடுகுறியை) ब्रूमः-சொல்லுகிறோம்.

(தா-ம்) சோதிட சாஸ்திர வித்வான்கள் லக்னம் முதலிய 12.பாவங்களையும், கேந்திரம், திரிகோணம் இவற்றின் லக்ஷணத்தையும் வேறு சாஸ்திரத்தைக் கொண்டு தான் அறிந்து கொள்ள வேண்டும். இந்த சாஸ்திரத்தில் இனி கூறப்போகும் முறையை யனுசரித்து அதற்கனு குணமான ஸம்க்ஞையை (பெயரை) மட்டும் நாம் இங்கு கூறுகிறோம் (எ-று.)

(அ-கை) சூரியன், முதல் சனி வரையுள்ளக் கிரகஹங்கள் தாமிருக்கு மிடமிருந்து எந்தெந்தஸ்தானங் களைப் பார்க்கின்றனர் என்பதை இதனுனுப தேசிக்கிறார்—

மூ॰॥ पश्यन्ति सप्तमं सर्वे, शनिजीवकुजाः पुनः ।
विशेषतश्च त्रि-दश-त्रिकोण-चतुरश्रकान् ॥ ४ ॥

(ப-ரை) सर्वे=சூரியன் முதலிய 7-கிரஹங்களும் सप्तमम्-தாமிருக்குமிடமிருந்து ஏழாவது ஸ்தானத்தை पश्यन्ति பார்க்கின்றனர். शनिजीवकुजाः पुनः=சனி, குரு செவ்வாய் இவர்களோ வெனில், (क्रमेण=முறையே) त्रि-दश, त्रिकोण, चतुरश्रकान् 3-10-, 5-9-, 4-8, இந்த விடங்களை विशेषतः=அதிகமாக पश्यन्ति=பார்க்கின்றனர்.

(தா-ம்) எல்லாக் கிரஹங்களும் தாமிருக்குமிட மிருந்து 7-மிடத்தைப் பார்க்கின்றன. சனி 3-மிடம் 10-மிடம் இவற்றையும், குரு 5-9-மிடத்தையும், செவ்வாய் 4-8-மிட

த்தையும் விசேஷமாகப் பார்க்கின்றனர். அதாவது: சனிக்கு 7-மிடப்பார்வையை விட 3-10-மிடப்பார்வை விசேஷமென்றும், குருவுக்கு 7-மிடப்பார்வையைவிட 5-9-மிடப்பார்வை விசேஷமென்றும், செவ்வாய்க்கு 7-மிடப்பார்வையை விட 4-8-மிடப்பார்வை விசேஷமென்றும் ஏற்பட்டது. இவ்விஷயம் இந்த ஆசிரியர் கூறியதிலிருந்து எல்லாக்கிரஹங்களும் 7-3-10-5-9-4-8, இந்த விடங்களை பார்க்கின்றனர் என்று சிலர் எண்ணுவதை இவர் அங்கீகரிக்கவில்லை யென்பது வெளியாகின்றது. (எ - று)

(அ - கை) லக்கினம் முதலிய பாவங்களுள் எந்தப்பாவாதிபதியான கிரஹம் சுபன், எந்தப் பாவாதிபதியான கிரஹம் அசுபன் என்பதை உபதேசிக்கிறார்.

மூ॥ सर्वे त्रिकोणनेतारो ग्रहाः शुभफलप्रदाः ।
पतयस्त्रिषडायानां यदि पापफलप्रदाः ॥ ५ ॥

(ப - ரை) **त्रिकोणनेतारः** = 5-9-மிடங்களுக்கு அதிபர்களான **सर्वेग्रहाः**=எல்லாக்கிரஹங்களும் **शुभफलप्रदाः** = சுபமான பலனையே தருவர். **त्रिषडायानाम्**-3-6-11-மிடங்களுக்கு **पतयोयदि**=பதிகளாக ஆவார்களேயானால் **पापफलप्रदाः**-கெட்ட பலனைக்கொடுப்பவர்களாகவே(**भवन्ति**=ஆகின்றனர்)

(தா - ம்) 5-9-மிடங்களுக்கு அதிபதியான கிரஹம் குரூரக்கிரஹமோ சுபக்கிரஹமோ எதாயினும் நல்ல பலனையே தரும். 3-6-11-க்குடைய கிரஹம் எதானாலும் அசுப பலனே தரும். (எ - று)

## லக்னவாரியாக சுபாசுபக்கிரஹங்களைக் காட்டும் கட்டம்

| லக்னம். | 5-க்குடையோர். | 9-க்குடையோர். | சுபர். | 3-க்குடையோர். | 6-க்குடையோர். | 11-மிடத்துக்குடையோர். | அசுபர். |
|---|---|---|---|---|---|---|---|
| மேஷம் | சூரி | குரு | சுபர் | புத | புத | சனி | அசுபர். |
| விருஷபம் | புத | சனி | ,, | சந் | சுக்கி | குரு | ,, |
| மிதுனம் | சுக்கி | சனி | ,, | சூரி | செவ் | செவ் | ,, |
| கடகம் | செவ் | குரு | ,, | புத | குரு | சுக்கி | ,, |
| சிம்மம் | குரு | செவ் | ,, | சுக்கி | சனி | புத | ,, |
| கன்னி | சனி | சுக்கி | ,, | செவ் | சனி | சந்தி | ,, |
| துலாம் | சனி | புத | ,, | குரு | குரு | சூரி | ,, |
| விருச்சிகம் | குரு | சந் | ,, | சனி | செவ் | புத | ,, |
| தனுஸ் | செவ் | சூரி | ,, | சனி | சுக்கி | சுக்கி | ,, |
| மகரம் | சுக்கி | புத | ,, | குரு | புத | செவ் | ,, |
| கும்பம் | புத | சுக்கி | ,, | செவ் | சந்தி | குரு | ,, |
| மீனம் | சந் | செவ் | ,, | சுக்கி | சூரி | சனி | ,, |

இக்கட்டத்திற் காட்டியபடி மேஷம் முதல் மீனம் வரையுள்ள 12-ராசிகளுக்கும் 5-9-க்குடையவனு யிருப்பதுபற்றி

சுபபலனைத் தரும் கிரஹம் இன்னின்னது என்றும், 3, 6, 11-க்குடையவனு யிருப்பது பற்றி பாபபலனைத்தரும் கிரஹம் இன்னின்னது என்றும் தெளிவாய்க்கண்டு கொள்ள வேண்டும். ஆகவே எந்த லக்கினத்திற்கு எந்தக்கிரஹம் சுபமாகவும் அசுபமாகவும் சொல்லப் பட்டிருக்கின்றதோ அந்த லக்கினத்திற் பிறந்தவர்க்கு சுபக்கிரஹம் சுபபலனையும், அசுபக்கிரஹம் அசுபபலனையும்தரும் என்றும் கண்டு கொள்ள வேண்டும். மேலும்,

> क्ष्माच्चरागद्विशरीरभाजां उपान्त्यधर्मस्मरगास्तदीशाः ।
> खेरेशमान्दिस्थितराशिनाथा अतीव बाधाकरखेचरास्स्युः ॥

"மேஷம், கடகம், துலாம், மகரம், இந்த நான்கும் சரராசிகள். விருஷபம், சிம்மம், விருச்சிகம், கும்பம், இந்த நான்கும் ஸ்திரராசிகள். மிதுனம், கன்னி, தனுஸ், மீனம், இந் நான்கும் உபயராசிகள். ஆகவே சரராசிகட்கு 11-மிடத்திபனும் 11-மிடத்தி லிருக்கும் கிரஹமும், ஸ்திர ராசிகட்கு 9-மிடத்ததிபனும் அதிலிருக்கும் கிரஹமும், உபயராசிகட்கு 7-மிடத்ததிபனும் அதிலிருக்கும் கிரஹமும், ஜன்ம லக்கினத் திரேஷ்காணத்திற்கு 22-வது திரேஷ்காணாதி பதியும், ஜனனகாலத்தில் மாந்தி (குளிகன்) இருக்கும் ராசிக்கதிபனான கிரஹமும் அதிகமான பாதகத்தைத் தருகின்றவர்களாக ஆகின்றனர்." என்றபடி சரராசியான மேஷத்திற்கு 11-க்குடைய சனியும், 11-லிருக்கும் கிரஹமும்; சரராசியான கடகத்திற்கு 11-க்குடைய சுக்கிரனும் 11-லிருக்கும் கிரஹமும், துலாத்திற்கு 11-க்குடைய சூரியனும், 11-லிருக்கும் கிரஹமும், மகரத்திற்கு 11-க்குடைய

செவ்வாயும், அதிலிருக்கும் கிரஹமும், பாதகத்தை (கெடுதலை) ச்செய்யும் கிரஹங்களாகும். இதிலிருந்து பாதகாதிபதி பாதகஸ்தானத்திலேயே யிருந்தால் விசேஷமான பாதகத்தையே தருவர் என்றும் கொள்ள வேண்டும். ஸ்திரராசியான விருஷபத்திற்கு 9-க்குடைய சனியும் 9-லிருக்கும் கிரஹமும், ஸ்திரராசியான சிம்மத்திற்கு 9-க்குடைய செவ்வாயும் 9-லிருக்கும் கிரஹமும், ஸ்திரராசியான விருச்சிகத்திற்கு 9-க்குடைய சந்திரனும் 9 லிருக்கும் கிரஹமும், ஸ்திரராசியான கும்பத்திற்கு 9-க்குடைய சுக்கிரனும் 9-லிருக்கும் கிரஹமும், பாதகத்தைச் செய்யும் கிரஹங்களாகும். இவ்விதமே உபயராசியான மிதுனத்திற்கு 7-க்குடைய குருவும் 7-லிருப்பவனும், கன்னிக்கு 7-க்குடைய குருவும், 7 லிருப்பவனும் தனுஸ்ஸுக்கு 7-க்குடைய புதனும் 7-லிருப்பவனும். மீனத்திற்கு 7-க்குடைய புதனும் 7-லிருப்பவனும், பாதகக்கிரஹங்களென்று சொல்லப்படும். இவ்விதம் கூறியதிலிருந்து சர, ஸ்திர, உபயராசிகளுக்குப் பாதகங்களான கிரஹங்கள் எந்தப்பாவங்களில் வசிக்கின்றனவோ, அந்தபாவங்கட்கு அக்கிரஹம் பாதகத்தையே செய்யுமென்றும் ஏற்படுகிறது. ஆகவே மேஷலக்கினத்திற்கு சனி 11-க்குடையவனுயிருப்பதுபற்றி மேற்கூறிய வசனப்படி பாதகக்கிரஹமாகவும், சந்திரிகையின் வசனப்படி பாபபலனைத் தருகின்றவனுகவும் ஆகிவிடுகிறுன். क्रूराश्चेदशुभं என்ற 6-வது சுலோகப்படி 10-க்குடையவனுக ஆவது பற்றி சுபத்தைத் தருகின்றவனுகவும் ஆகின்றுன். ஆகவே மேஷலக்கின ஜாதகத்திற்கு சனி எந்த பாவத்தி லிருக்கின்றுனே அந்த பாவத்திற்கு 3-ல் 2-பங்கு தோஷத்தையும் 3-ல் 1-பங்கு குணத்தையும் செய்

..ன் என்றும் ஏற்படுகிறது. மேலும் மேஷலக்கினத்திற் ..றந்த ஜாதகத்திற்கு 10-க்கும் 11-க்கும் உடையவனாகிற ..னி லக்கினத்தி லிருந்தால் நீசனாயிருப்பதுபற்றி भीतानी- ..गतोग्रहः என்றபடி நீசத்தை யடைந்தகிரஹம் பயத்தை ..டைந்தவனாகையால், மேஷ லக்கினத்தில் சனியிருக்கப் ..றந்த ஜாதகன் எவ்வித லாபமுமற்ற நீசகாரியத்தில் பற்று ..ளவனாகவும், வெளிப்படையாக நீச(தாழ்ந்த) காரியத்தைச் ..செய்யும் விஷயத்தில் பயந்தவனாகவும், மேஷம் சனிக்குச் ..த்துரு வீடாகையால் அவ்வித நீசகாரியஞ்செய்யத் தொட ..க்குங்கால் சத்துருவால் வெறுக்கப்பட்டவனாகவும், இருப் ..பன் என்று கண்டு கொள்ளவேண்டும். இவ்விதமே ஒவ் ..வொரு லக்கின விஷயத்திலும் அந்தந்த லக்கினத்திர்க்குப் ..தகாதிபதியையும் அசுபகிரஹங்களையும் கொண்டு பலன் ..ஹித்தறிய வேண்டும். (எ - று.)

(அ - கை) 1-4-7-10, இந்த ஸ்தானங்களுக் கதிபர்களான ..பக்கிரஹங்கள் சுபத்தைத்தரு என்பதையுபதேசிக்கிறார்.

मू०॥ न दिशन्ति शुभं नृणां शुभाः केन्द्राधिपा यदि ।
क्रूराश्चेदशुभं त्वेते प्रबला उत्तरोत्तरम् ॥ ६ ॥

(ப - ரை) शुभाः=சுபக்கிரஹங்கள் केन्द्राधिपायदि - கேந் ..திர ஸ்தானங்களுக்கதிபதிகளாக யிருப்பார்களே யானுல் ..णाम्=மனிதர்களுக்கு शुभम्=சுபத்தை नदिशन्ति=கொடுக் ..கின்றனவில்லை. क्रूराः - பாபகிரஹங்கள் (केन्द्राधिपाः) चेत्= ..கேந்திரஸ்தானங்களுக்கதிபர்களாக யிருப்பார்களே யானுல் ..अशुभम्-கெடுதிலை (नदिशन्ति-கொடுக்கமாட்டார்கள். किन्तु- ..னுல் एते-முற்கூறிய எல்லா கிரஹங்களும் उत्तरोत्तरम्-

மேன்மேலுள்ளவர் प्रबलाः=வலுவுடையவர்களாக भवन्ति-ஆகின்றனர்.

(தா-ம்) குரு, சுக்கிரன், சுக்ல சந்திரன், பாபருடன் சேராத புதன், ஆகிய இவர்கள் ஸ்வபாவ சுபர்களாவர். இந்தச்சுபக்கிரஹங்கள் 1-4-7-10-இந்த ஸ்தானங்களுக்கதிபர்களாக ஆவார்களே யானுல் மனிதர்கட்குச் சுபத்தைக் கொடார். தேய் பிறைச்சந்திரன், பாபியுடன்சேர்ந்தபுதன் சூரியன், செவ்வாய், சனி இவர்கள் 1-4-7-10-இந்த விடங்களுக்கு அதிபர்களானுல் மனிதர்கட்கு அசுபத்தைக் கொடார். அதாவது சுபத்தைக் கொடுப்பர் என்றேற்படுகிறது. மேலும் सर्वेत्रिकोणनेतारः என்ற 5-வது சுலோகத்திலும் नदिशन्तिशुभंनृणाम् என்ற இந்த 6-வதுசுலோகத்திலும் சொல்லியபடி சுபபலனையோ அசுபபலனையோ, தருவனவாகக் கூறப்பட்டக் கிரஹங்கள் ஒன்றைவிட மற்றொன்று தனது பலனை தரும் விஷயத்தில் கீழுள்ள கிரஹத்தைவிட மேன் மேலுள்ள கிரஹம் அதிகம் வலுவுள்ளதெனக்கண்டு கொள்ள வேண்டும், அதாவது: 5-க்குடைய சுபக்கிரஹங்கள் கொடுக்கும் சுபபலனைவிட 9-க்குடைய சுபக்கிரஹங்கள் மிக்க வலுவுள்ளன வாகையால் அவை கொடுக்கும் சுபபலன் அதிகமாக இருக்கும் என்பதாம். இதுபோலவே 3-க்குடைய கிரஹத்தைவிட 6-க்குடைய கிரஹம் மிக்க வலுவுள்ள தாகையால் 3-க்குடைய கிரஹம் கொடுக்கும் அசுப பலனைவிட 6-க்குடைய கிரஹம் கொடுக்கும் அசுப பலன் அதிகமானதென்றும், 6-க்குடைய கிரஹத்தைவிட 11-க்குடைய கிரஹம் மிக்கவலுவுள்ள தாகையால் 6-க்குடைய கிரஹம் தரும் அசுப பலனைவிட 11-க்குடைய கிரஹம் தரும் அசுப பலன் மிக்க அதிகமாயிருக்குமென்றும்

ஏற்படுகிறது. இவ்விதமே லக்னாதிபனான சுபக்கிரஹத்தை விட 4-க்குடைய சுபக்கிரஹம் மிக்க வலுவுடைய தாகை யால் லக்னாதிபனான சுபக்கிரஹம் கொடுக்கும் அசுப பலனை விட 4-க்குடையவனான சுபக்கிரஹம் கொடுக்கும் அசுப பலன் அதிகமான தென்றும், 4-க்குடைய கிரஹத்தைவிட 7-க்குடைய கிரஹம் அதிகம் வலுவுடைய தாகையால் 4--க் குடையவனைவிட 7-க்குடைய சுபக்கிரஹம் கொடுக்கும் அசு பபலன் அதிகமான தென்றும், இதைவிட 10 க்குடைய சுப க்கிரஹம் கொடுக்கும் அசுபபலன் மிக்க மேலான தென் றும் ஏற்பட்டது.

இவ்விதமே லக்னாதிபதியான குரூரக்கிரஹம் தரும் சுபபலனைவிட 4-க்குடையவனான குரூரக்கிரஹம் தரும் சுப பலன் அதிகமான தென்றும், இதைவிட 7-க்குடைய குரூ ரக்கிரஹம் தரும் சுபபலன் மேலான தென்றும், இதை விட 10-க்குடைய குரூரக்கிரஹம் தரும் சுபபலன் மிகவும் மே லான தென்றும் ஏற்பட்டது. அதாவது: மேஷத்திற்குச் சூரியன் 5-க்குடையவனாகவும், குரு 9-க்குடைய வனாகவுமி ருப்பது பற்றி குரு கொடுக்கும் சுபபலன் மேலானதாகவே யிருக்கும் என்றேற்படுகிறது. இவ்விதமே விருஷப லக்கி னத்திற்கு 3-க்குடையவனா யிருப்பது பற்றி சந்திரன் கொடு க்கும் அசுப பலனைக்காட்டிலும் 6-க்குடையவனாயிருக்கும் சுக்கிரன் கொடுக்கும் அசுபபலன் அதிகமாகவே யாகும் 6-க்குடைய சுக்கிரன் கொடுக்கும் அசுபபலனைவிட 11 க்கு டையவனாயிருப்பது பற்றி குரு கொடுக்கும் அசுபபலன் அதிகமானதாகவே யிருக்கும் என்றேற்படுகிறது. இவ்வித மேமற்ற லக்னங்கள் விஷயத்திலும் காண்க. மேலும் மீன லக்னத்திற்கு 1-க்குடைய சுபக்கிரஹமான குரு கொடுக்கும்

அசுபபலனை விட 4-க்குடைய புதன் கொடுக்கும் அசுபப லன் மேலானதாகவேயாகும், இதைவிட 7-க்குடையவனுயி ருப்பது பற்றி புதன் கொடுக்கும் அசுபபலன் அதிகமான தாகும், இதைவிட 10-க்குடையவனு யிருப்பதுபற்றி குரு கொடுக்கும் அசுபபலன் மேலானதாகவே இருக்கும் என்றேற்படுகிறது. இவ்விதமே கும்ப லக்ன ஜாதகத் திற்கு லக்னதிபனு யிருப்பது பற்றி சனி கொடுக்கும் சுபபலனைவிட 7-க்குடையவனுன சூரியன் கொடுக்கும் சுபபலன் அதிகமாகவே யிருக்கும். அதைவிட 10-க்கு டையவனுன செவ்வாய் கொடுக்கும் சுபபலன் அதிகமான தாகவே யிருக்கும். ஆனல் 11-வது சுலோகத்தினல் இந்த கும்ப லக்னத்திற்கு 10-க்குடையவனுக யிருத்தல் மூலம் செவ்வாய் சுபபலனைத் தரக்கூடியவனுயினும் 5-க்கும் உடை யவனுக எந்த லக்னத்தில் வருகிறுனே அங்கு தான் விசே ஷபலனை சொல்லவேண்டும் என இதற்கு விலக்கு விதி சொல்லப்பட்டிருக்கிறது. (எ - று)

(அ - கை) லக்னத்திற்கு 12-மிடம், 2-மிடம் இவற்றி ற்கதிபதியான கிரஹங்கள் பலன் தரும் முறையை யுபதே சிக்கிருர்—

மூ॥ लग्नाद्व्ययद्वितीयेशौ परेषां साहचर्यतः ।
स्थानान्तरानुगुण्येन भवतः फलदायकौ ॥ ७ ॥

(ப - ரை) लग्नात्-ஜன்மலக்கினத்தினின்றும் व्ययद्वितीयेशौ-व्यय=பன்னிரண்டாமிடத்திற்கும் द्वितीय = இரண்டா மிடத்திற்கும் ईशौ-அதிபர்களான கிரஹங்கள் परेषाम्-அந் தந்த சுபா சுப பாவாதிபர்களான கிரஹங்களுடைய साहच

यैतः-சம்பந்தத்தை யொட்டியும் स्थानान्तरानुगुणयेन - சுபங் களும் அசுபங்களுமான வேறு ஸ்தானங்களின் தத்தமக்கு றிய ஆதிபத்யத்திர்க்கேற்றவாறும் फलदायकौ - சுபா சுப பலன் களைத்தருகின்றவர்களாக भवत:- ஆகின்றனர்.

(தா - ம்) ஜன்மலக்னத்திற்கு 12-மிடம், 2-மிடம் இவ் விடங்களுக்கு அதிபர்களான கிரஹங்கள், ஜன்மலக்கினத் திற்கு 3, 6, 8, 11, 12-மிடங்களுக்கதிபர்களான கிரஹங்க ளின் சம்பந்தத்தை யொட்டியும், அதாவது: 3, 6, 8, 11, 12-மிடங்களி லிருப்பதையும், அல்லது 3, 6, 8, 11, 12-மிடத்ததிபருடன் சேர்ந்திருப்பதையும், அல்லது 3, 6, 8 11, 12-மிடத்ததிபர்களின் பார்வையை யடைந்திருப்பதை யும், அல்லது 3, 6, 8, 11, 12, மிடத்ததிபர்களுக்கு கேந் திர (1,4, 7, 10) த்திலோ, திரிகோண (5, 9) த்திலோ இரு ப்பதையும் ஒட்டி அசுபபலனையும், இவ்விதமே சுபபாவங் களான 1, 2, 4, 5, 7, 9, 10-மிடத்ததிபர்களான கிரஹ களின் சம்பந்தத்தை யொட்டி, அதாவது: 1, 2, 4, 5, 7 9, 10-இவ்விடங்களி லிருத்தலையும், அல்லது 1, 2, 4, 5, 7 9, 10, மிடத்ததிபர்களுடன் சேர்ந்திருத்தலையும், அல்லது 1, 2, 4, 5, 7, 9, 10-மிடத்ததிபர்களின் பார்வை பெற்றிரு த்தலையும், அல்லது 1, 2, 4, 5, 7, 9, 10-மிடத்ததிபர்களு க்கு கேந்திரம் என்ற 1, 4, 7, 10, மிடம், திரிகோணம் என்ற 5, 9, மிடம் இவற்றிலிருத்தலையும் அனுஸரித்துச் சுபபலனையும் தருவதுடன், இந்த 12, 2, மிடத்ததிபர்களா னகிரஹங்களுக்கு ஏற்படும் சுபமானதும் அசுபமானது மான வேறு ஸ்தானங்களின் ஆதிபத்யத்தை (ஆக்ஷியை) யொட்டியும், சுபபலனையோ அசுபபலனையோ தருவர் என் றும் கண்டு கொள்ள வேண்டும் என்பதாம்; அதாவது: மே

ஷலக்ன ஜாதகத்திற்கு குரு 12-மிடத்ததிபராவர். இந்தக் குரு 9-மிடத்திற்கும் அதிபராவதால் சுபராகவே கருதக் படுவர். இதுபோலவே சுக்கிரன் 2-மிடத்ததிபர். இவர் 7-மிடத்திர்க்கும் அதிபராவதால் கேந்திராதிபத்யம் சுக்கிரனுக்குத் துஷ்டமானது என்று ¹இனிச்சொல்லப்படும் வசனப்படி 7-மிடம் சுக்கிரனுக்கு கெட்ட ஸ்தானமாகிறது. ஆகவே இந்தச்சுக்கிரன் அசுபஸ்தானத்திற்கு அதிபராக வருவதால் அசுபபலனையே தருவார் என்றும் ஏற்படும். இவ்விதமே மற்றெல்லாலக்ன ரீதியாகவும் பார்த்துக்கொள்ள வேண்டும். ஆகவே 12-மிடம், 2-மிடம், இவ்விரண்டிடங்களுக்கும் அதிபர்களான கிரஹங்கள் மூலம் வரும் பலனை மேற்கூறியபடி ஊஹித்தறியவேண்டுவது அவசியமானது (எ-று)

(அ - கை) 8-மிடத்ததிபனான கிரஹத்தைத் "துஷ்டன்" என்று சொல்லுவதர்க்குரிய காரணத்தையும், அந்த எட்டாமிடத்ததிபன் சிலஜாதக விஷயத்தில் சுபனாகவே ஆகிறானென்பதையும் உபதேசிக்கிறார்.

मू०॥ भाग्यव्ययाधिपत्वेन रंध्रेशो न शुभप्रदः ।
स एव शुभसन्धाता लग्नाधीशोऽपि चेत्स्वयम् ॥ ८ ॥

(ப - ரை) **रंध्रेशः**=8-மிடத்ததிபதியான கிரஹம் **भाग्य-व्ययाधिपत्वेन-भाग्य**=பாக்கியஸ்தானமான 9-மிடத்திற்கு **व्यय** 12-மிடத்திற்கு **अधिपत्वेन** = அதிபதியாயிருக்குந் தன்மையினால் **शुभप्रदः**=சுபத்தைத் தருகின்றவனாக **न** = ஆவதில்லை. **सएव**=அந்த 8-மிடத்ததிபதியான கிரஹமே **स्वयम्** - தான் **लग्नाधीशोऽपिचेत्**=லக்கினாதிபதியாகவும் இருப்பானேயானால் **शुभसन्धाता**=சுபத்தைத் தருகின்றவனாக (**भवति**=ஆகிறான்)

(தா-ம்) பொதுவாய் 8மிட மென்பது 9-மிடத்திற்குப் பன்னிரண்டா மிடமாகின்றது. 9-மிடத்தை பாக்கிய ஸ்தானமென்கிறோம். பாக்கிய ஸ்தானமான 9-மிடத்திற்கு 12-மிடமான 8-மிடம் பாக்கியத்திற்கு வியய (நாச) ஸ்தானமாகும். ஆனது பற்றி 8-மிடத்ததிபன் பாக்கியவ்யயாதிபதியாகிறான். ஆகவே பாக்யநாச ஸ்தானாதிபதி யாவது பற்றி 8-க்குடையவன் சுபனாக ஆகாததினால் சுபபலனைத் தருதவனாகவாகிறான். ஆனால் இந்த 8-க்குடையவன் லக்னாதிபதியாகவும் ஆவனே யானால் 8-க்குடைய வனாயிருப்பவன், தான் கொடுக்கவேண்டிய அசுபபலனைத் தருவதில்லை. இவ்விதம் கூறியதி லிருந்து ஜன்மலக்னாதிபதியாகவும் அஷ்டமாதிபதியாகவுமான கிரஹம் ஜன்மலக்னாதிபதியாயிருப்பதைக்கொண்டு கேவலம் சுபத்தை மட்டும் தருகின்றவனாகவோ, 8-க்குடையயனாக வாவதன்மூலம் கேவலம் அசுபத்தை மட்டும் தரு கின்றவனாகவோ ஆவதில்லை என இந்த ஆசிரியரின் கருத்து. அதாவது: மேஷலக்னத்திற்குச் செவ்வாயும், துலாலக்னத்திற்குச் சுக்கிரனும், லக்னாதிபதியாகவும் 8-க்குடையவனாகவும் ஆகின்றனர். இவ்விருலக்கினங்களுக்கே இந்தச்சுலோகம் பொருந்தமுள்ளது. (எ-று)

(அ-கை) "न दिशन्ति शुभं नृणां शुभाः केन्द्राधिपा यदि" என்று முன்னர் கூறப்பட்டது. இனி வரும் 3-சுலோகங்களால் எந்தெந்தச் சுபக்கிரஹங்களுக்கு கேந்திராதிபத்யம் அதிகம் தோஷமுள்ளது, எந்தெந்தக் கிரஹங்களுக்குக் கேந்திராதிபத்யம் தோஷ விஷயத்தில் குறைவுள்ளது என்பதை உபதேசிப்பதுடன் செவ்வாய், கேந்திராதிபத்யத்தை

லல்லாது சுபனுவதில்லை என்பதையு முபதேசிக்கிறார்—

மூ०॥ केन्द्राधिपत्यदोषस्तु बलवान् गुरुशुक्रयोः ।
मारकत्वेऽपि च तयोर्मारकस्थानसंस्थितिः ॥ ९ ॥

बुधस्तदनु चन्द्रोऽपि भवेत्तदनु तद्विधः ।
न रन्ध्रेशत्वदोषस्तु सूर्याचन्द्रमसोर्भवेत् ॥ १० ॥

कुजस्य कर्मनेतृत्वप्रयुक्तशुभकारिता ।
त्रिकोणस्यापि नेतृत्वे न कर्मेशत्वमात्रतः ॥ ११ ॥

(ப - ரை) 9 **केन्द्राधिपत्यदोषस्तु**=கேந்திராதிபதியா யிருப்பதன் மூலம் நேரும் தோஷமோவெனில் **गुरुशुक्रयोः**=குரு, சுக்கிரன், இவ்விரு கிரஹங்கள் விஷயத்திலும் **बलवान्**=மிக்கவனுவுள்ளது. (அதாவது கேந்திராதிபர்களான குரு, சுக்கிரன் இவர்கள் அதிகம் தோஷத்தையே தருவர் என்பதாம்.) **तयोः**=கேந்திராதி பத்யம் பெற்ற குரு சுக்கிரர்களுக்கு **मारकस्थानसंस्थितिः** = மாரகஸ்தானத்திலிருத்தலானது **मारकत्वे-ऽपिच**=மாரகனுகவிருக்கும் விஷயத்திலும் (**बलवती** மிக்கவனுவுள்ளது.) அதாவது: கேந்திராதி பத்யம் பெற்ற குருசுக்கிரர்கள் மாரகஸ்தானத்திலு மிருப்பாரானுல் அவசியம் மாரகராகவாவர் என்பதாம்.

10. **बुधः**=கேந்திராதிபத்யம்பெற்ற புதக்கிரஹமானது **तदनु**-அந்தகுரு சுக்கிரர்களுக்கடுத்தபடியாக **तद्विधः**=தோஷமுள்ளவனுக **भवेत्**=ஆவன். **चन्द्रोऽपि** = கேந்திராதிபத்யம் பெற்ற சந்திரனும் **तदनु** = புதனுக்கடுத்தபடியாக **तद्विधः**= தோஷமுள்ளவனுக (**भवेत्**=ஆவன்.)

**सूर्याचन्द्रमसोः**=சூரியன், சந்திரன் இவர்கட்கு **रन्ध्रेशत्वदोषस्तु** = எட்டாமிடத்ததிபனாயிருப்பதன் மூலம் நேரும் தோஷமோ வெனில் **नभवेत्**=உண்டாவதில்லை, **कुजस्य**=செவ்வாய்க்கு **कर्मनेतृत्वप्रयुक्तशुभकारिता** = கர்மாதிபதியாயிருக்குந் தன்மையை முன்னிட்ட சுபத்தைச்செய்கின்றவனா யிருக்குந்தன்மையானது **त्रिकोणस्यापि**=திரிகோணத்திற்கும் **नेतृत्वे (सत्येव)** அதிபதியாக விருக்குந்தன்மையானது நேர்ந்தவிடத்தில் தான் **(भवति=உண்டாகிறது.) कर्मेशत्वमात्रतः**=கர்மாதிபதியாயிருக்குந் தன்மையைக் கொண்டு மட்டும் **न (भवति)**=உண்டாவதில்லை.

(தா-ம்) குரு, சுக்கிரர்கள் கேந்திராதிபதிகளாக ஆனால் அவர்கள் மூலம் ஏற்படும் தோஷம் அதிகமாகவே உண்டாகின்றது. அத்துடன், கேந்திராதிபர்களாகி அதிகம் தோஷத்தைத்தரும் குரு சுக்கிரன் இவர்கள், மாரகஸ் தானத்திலுமிருப்பார்களானால் * அதாவது: 2-7-மிடங்களிலிருப்

---

* சந்திரிகையின் வியாக்கியானத்தில் **"मारकस्थानसंस्थितिः"** என்ற விடத்திலுள்ள **"मारकस्थान"** என்ற பதத்திற்கு "2-மிடம் 7-மிடம்" என சந்திரி காவியாக்யானத்தை யொட்டி 2-7 மிடம் என்று எழுதினோம். ஆனால் கேந்திரஸ்தானமாயும் மாரகஸ்தானமாயுமாகுமிடத்தில் (அதாவது 7-மிடத்தில்) என்று பொருள் கொள்வதுதான் உசிதமானது என்றேற்படுகிறது. இல்லையேல்—

**"अष्टमं ह्यायुषः स्थानमष्टमादष्टमञ्च तत् ।**
**तयोरपि व्ययस्थानं मारकस्थानमुच्यते ॥"**

என்று தொடங்கி இதே கிரந்தத்தில் 22-வது சுலோகம் முதற் சொல்லப்போவதை யொட்டி 2-3-7-8-இந்த நான்கு ஸ்தானங்களும் மாரகஸ்தானங்களாக வாகும்பொழுது 2-மிடம் 7-மிடம்

பார்களானால் விசேஷ மாரகர்களாக ஆகின்றனர். இந்த விடத்தில்

"एवञ्च द्वितीयसप्तमाधिपत्यापेक्षया तत्रस्थितावेव विशेषमारकौ इत्यर्थः। अयञ्च मारकत्वदोषः तयोः केन्द्राधिपत्यादिदोषप्रसङ्गादुक्तः। द्वितीयसप्तमयोः मारकस्थानत्वलक्षणमुत्तरत्र वक्ष्यति।"

"இவ்விதம் கூறியதிலிருந்து இரண்டாமிடம் ஏழாமிடம்இவ்விடங்களுக்கு அதிபதியாக விருக்குந்தன்மையையபேக்ஷித்து 2-மிடம் 7-மிடம் இவ்விடங்களிலிருத்தலே மாரகத்தன்மைக்கு விசேஷமாய்க் காரணமாகின்றது எனப் பொருள் ஏற்படுகின்றது. குரு சுக்கிரர்களுக்குச் சொல்லிய இந்த மாரகத்வ தோஷமானது கேந்திராதி பத்யாதிதோஷத்தைச் சொல்லத்தொடங்கியதாற் கூறப்பட்டது. 2-மிடம் 7-மிடம் இவ்விரண்டிடங்களும் மாரகஸ்தானங்களாகின்றனவென்பது இதே கிரந்தம் 22-வது சுலோகத்தில் சொல்லப்படப்போகிறது" என்று சந்திரிகையின் வியாக்யானத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இந்த வியாக்யானப்படி பார்க்கும் பொழுது வேறு விதமாகவும் பொருள் கொள்ள யிடமிருக்கிறது. அதாவது: குரு, சுக்கிரர்கள் கேந்திராதிபத்யம்பெற்றிருத்தல் மூலம் விசேஷ தோஷத்தைத் தருவதைக் காட்டிலும், கேந்திராதிபத்யம் பெறுவிடினும் மாரக ஸ்தானங்களான 2-மிடம் 7-மிடம் இவ்விடங்களி லிருப்பார்களே யா

---

இவ்விரண்டிடங்களைமட்டும் மாரகஸ்தானமாகச் சொல்லுவது ஒருபொழுதும் பொருத்தமுள்ளதாயாகா. ஆகவே 7 - மிடத்தை மட்டுமே "மாரகஸ்தானம்" என்றதின் பொருளாகக் கொள்ள வேண்டும் என்றேற்படுகின்றது.

னல் விசேஷ மாரகர்களாக ஆகிவிடுகின்றனர். அதாவது: எந்த ஜாதகத்திலும் 2-7-மிடங்களில் குரு, சுக்கிரன் இவர்கள் இருப்பார்களானல் விசேஷமாரகர் களாகவே யாகின்றனர் என்பதாம்.

அல்லது 'கேந்திராதிபத்யம் குரு சுக்கிரர்களுக்கு விசேஷ தோஷமுள்ளது, 2-மிடம் 7-மிடம் இவ்விடங்களில் ஸ்திதியையும் மாரகனவதில் விசேஷகாரணமாகவே கொள்ள வேண்டும்' என்று உபதேசிக்கப்பட்டதென்று பொருள் கொள்ளலாம். அவ்விதம் பொருள்கொண்டபோதிலும் கேந்திராதிபத்யம் எவ்விதம் குரு, சுக்கிரர்களுக்கு தோஷத்தைத் தரக்கூடுமோ அவ்விதமே கேந்திரமாயும் மாரகஸ்தானமாயு மாகுமிடத்தில் ஸ்திதியும் விசேஷமாரக மாகவாகும் என்று பொருள் கொள்ளுதல்தான் பொருத்தமுள்ளதாகிறது. இவ்விதம் பொருள் கொள்வதால் குரு சுக்கிரன் இவர்கள் எந்த லக்னத்திற் பிறந்தவர்க்கும் 7 - மிடத்திலிருந்தால் அந்த 7 - மிடம் மாரகஸ்தானமாயும் கேந்திரஸ்தானமாயும் ஆவதால் குரு சுக்கிரன் இவர்கள் அந்த ஜாதகனுக்கு மாரகர்களாகின்றனர் என்று மட்டுந்தான் பொருளேற்படும். 2-மிடத்திலிருக்கும் குரு சுக்கிரன் இவர்கள் மாரகர்களாகின்றனர் என்றும் கூறுவதற்கிடமில்லை. ஆனல் இந்தச் சுலோகத்தைக் கவனிக்கும் பொழுது 7-க்குடையவர்களாகி 7-மிடத்திலேயே குரு சுக்கிரர்களிருக்கவுமிருந்தார்களேயானல் விசேஷமாக மாரகர்களாகவாகின்றனர் என்றும், 7-க்குடையவர்களாய் வேறுஎந்தப்பாவங்களிலிருந்தாலும் அந்தப்பாவங்களுக்கு விசேஷதோஷத்தைச் செய்கின்றவர்களாக வாகின்றனரென்றும் ஆசிரியரின் கருத்தா

யிருக்கலா மென்று நமக்குப்படுகிறது. ஆகவே ஒவ்வொரு வரும் தத்தமது குரூபதேச மூலம் கிடைத்த பொருளையே இவ்விடத்திற் கொண்டு அதன்படி ஜாதகபலன் அறிந்து கொள்வது தான் மிகவும் மேலானது.

மேலும் குரு சுக்கிரன் இவர்களுக்குக் கேந்திராதிபத்யமூலம் நேரும் தோஷத்தைவிட புதன் கேந்திராதிபதியாக வாகும் பொழுது நேரும் தோஷம் குறைந்த தாகவே யாகும். இவ்விதமே கேந்திராதிபதியான புதன் மூலம் நேரும் தோஷத்தை விட கேந்திராதிபதியான வளர்பிறை சந்திரன்மூலம்நேரும் தோஷம் குறைந்ததாகவே ஆகும். மேலும் செவ்வாய் முதல் சனி வரையுள்ள 5-கிரஹங்கள் 8-க்குடையவர்களாயிருப்பதன் மூலம் எவ்வளவு தோஷமுள்ளவர்களாக ஆவார்களோ அவ்வளவு தோஷம் சூரியன் சந்திரன் இவர்களுக்கு அஷ்டமாதிபத்ய மூலம் கிடையா. மேலும் 'பாபக்கிரஹமான செவ்வாய்க்கு 10-மிடத்தாதிபத்யம் வருமிடத்தில் தோஷத்தைத் தருந்தன்மை கிடையா. சுபத்தைத் தருபவனாகவே ஆவான்' என்பதாக 6-வது சுலோகத்தில் "க்ரூராஂஶ்சேச்சுபம்" என்றதால் கூறி இருப்பதால் ஏற்படினும், 10-மிடத்தாதிபத்யத்துடன் திரிகோணாதிபத்யமும் அதாவது: 5-மிடத்தாதிபத்யமும் சேர்ந்து எந்த விடத்தில் வருமோ அந்த விடத்திற்றான் அங்காரகன் 10-க்குடையவனாகவாவதன் மூலம் சுபத்தைச் செய்வானேயன்றி 10-மிடத்திற்கதிபனா யிருப்பதைக் கொண்டுமட்டும் அங்காரகன் சுபனாகவாவதில்லை.

இம் மூன்று சுலோகத்திலும் சொல்லியதை விளக்கிச்

காட்டுவாம். அதாவது: மிதுனம், கன்னி இவ்விரண்டு லக்னங்களுக்குள் மிதுனத்திற்கு 7-10-க்குடைய வனுகவும், கன்னிக்கு 4-7-க்குடையவனுகவும் குரு ஆகிறுன். ஆனது பற்றிஇவ்விரு ஜாதக விஷயத்திலும் குரு எங்கிருந்தாலும் அந்தப்பாவத்திற்குத் தோஷத்தையே தருவான் என்றேற்படுகிறது. இது போலவே முறையே 7-மிடமான தனுஸ்ஸிலும் மீனத்திலுமே இருப்பானுனல் அந்த 7ம் பாவத்திற்கோ ஜாதகனுக்கோ மாரகனுகவும் ஆகிறுன் என்றும் கொள்ள வேண்டும். இதுபோலவே சுக்கிரன், மேஷம், விருச்சிகம் இவ்விரண்டு ஜாதகங்களுக்கும் 7-க்குடையவனுகிறுன். ஆகவே இவ்விரண்டு ஜாதகங்களுக்கும் சுக்கிரன் எங்கட்பாவத்திலிருந்தாலும் அந்தப்பாவத்திற்கு விசேஷதோஷத்தையே செய்வான். 7-லேயே யிருந்தால் அந்த 7-ம் பாவத்திற்கோ ஜாதகனுக்கோ விசேஷமாக மரணத்தையும் தருவான். மேலும் தனுர் மீனலக்கினங்களுக்கு முறையே புதன் 7-10-க் குடையவனுகவும், 4-7-க்குடையவனுகவும் ஆகிறுன். ஆகவே கேந்திராதிபத்யம் இருப்பதால் குரு சுக்கிரர்களைப்போல அவ்வளவு தோஷத்தை புதன் செய்யாவிடினும் குரு சுக்கிரர்களால் ஏற்படும் தோஷத்திற்கு அடுத்தபடியிலேயே இவனும் தோஷத்தைத் தருவான். மேலும் மகர லக்ன ஜாதகத்திற்குச் சந்திரன் கேந்திராதிபதியாகிறுன். இவன் புதன்கொடுக்கும் தோஷத்தைவிடக் குறைந்த தோஷத்தையே மகரலக்ன ஜாதகர்களுக்குச் செய்கிறுன். மேலும் தனுர்லக்ன ஜாதகத்திற்குச் சந்திரனும், மகரலக்ன ஜாதகத்திற்குச் சூரியனும் முறையே 8-க்குடையவர்களாகின்றனர். ஆகிலும் இவ்விரு லக்னங்களுக்கும் சந்திர

சூரியர்கள் 8-க்குடையவர்களாயிருத்தல் மூலம் எவ்வித தோஷத்தையும் தருவதில்லை. மேலும் கும்பம், கடகம் இவ்விரண்டு லக்னங்களுக்கும் செவ்வாய் 10-க்குடையவனாக ஆகிறான். ஆயினும் கடகலக்னத்திற்கு மட்டும் 5-க்கும் 10-க்கும் உடையவனாவதால் சுபத்தைத் தருகின்றவனாகிறான். *கும்பலக்னத்திற்கோவெனில் 3-க்கும் 10-க்கும் உடையவனாதலால் சுபத்தைத் தராததுடன் விசேஷமாக அசுபத்தையே தருகிறான் என்றும் பிறித்தறிந்துகொள்ள வேண்டும் (ஏ - று.)

(அ - கை) ராகு, கேது இவர்களுக்குச் சொந்தவீடில்லாதபடியால் அவர்கள் மூலம் வரும் பலனை எவ்விதம் அறிந்து கொள்ளுவதென்பதை உபதேசிக்கிறார்.

மூ०॥ यद्यद्भावगतौ वापि यद्यद्भावेशसंयुतौ ।
तत्तत्फलानि प्रबलौ प्रदिशेतां तमोग्रहौ ॥ १२ ॥

(ப - ரை) तमोग्रहौ-சாயாக் கிரஹங்களான ராகு, கேது இவ்விரு கிரஹங்களும் यद्यद्भावगतौ = எந்தெந்த பாவத்தை யடைந்தவர்களாகவும் (अथ) वापि=அல்லது यद्यद्भावेशसंयुतौ எந்தெந்த பாவாதிபதிகளுடன் சம்பந்தத்தை யடைந்தவர்க

---

* கும்பலக்கினத்திற் பிறந்த ஜாதகனுக்குச் செவ்வாயின் தசையோ, புக்தியோ, இவைகள் 3-வதாகவோ, 5-வதாகவோ, 7-வதாகவோ வந்து நமது "கோசரபல நிர்ணயத்திற்" சொல்லியபடி கோசாரமும் கெட்டிருந்தால் வஸிஷ்டராயிருந்தபோதிலும்கூட கிரிமினல் கோர்ட்டில் சாக்ஷிக் கூடேறி சாக்ஷி சொல்லவேண்டி வரும் என்றால் நம்போன்றவர்க்குக் கேழ்க்கவும் வேண்டுமோ. இவ் விஷயம் வெகுவாய் அனுபவத்திற் கண்டதாகும்.

ளாகவும் (**भवत:** ஆகின்றனரோ) **प्रबलौ** (**सन्तौ**) அந்தந்த பாவம், அந்தந்த பாவாதிபதி இவர்களைக் காட்டினும் வலு வுள்ளவர்களாய்க் கொண்டு **तत्तत्फलानि**=அந்தந்த பலன்களை **प्रदिशेताम्**=கொடுக்கின்றனர்.

(தா-ம்) சாயாக்கிரஹங்களான ராகு, கேது இவர் களுக்கு மேஷம் முதல் மீனம் வரையுள்ள 12-ராசிகளின் ஆதிபத்யம் இல்லாவிடினும், அந்தந்த ஜாதகங்களில் லக் னம் முதலிய எந்தெந்த பாவங்களிலோ, அல்லது எந்தெந்த பாவாதிபதியான கிரஹங்களின் சேர்க்கையை யடைந்தோ இருக்கின்றனரோ (இங்கு எந்தெந்த பாவாதிபதிகளான கிரஹங்களாற் பார்க்கப்படுகின்றனரோ வென்றும் கொள்ள வேண்டும் என்று சந்திரிகையின் வியாக்யானத்திற் சொல் லப்பட்டிருக்கிறது.) தாங்களிருக்கும் பாவம், அல்லது அந்த பாவத்திற்கதிபதியான கிரஹம் இவை எந்தப் பலனைத் தரு மோ, அல்லது தங்களுடன்சேர்ந்த கிரஹம் எந்தப்பலனைத் தருமோ அவைகளைவிட ராஹு, கேதுகிரஹங்கள் அதிகம் வலுவுடையவர்களாய்க்கொண்டு அவை கொடுக்கும் பலனை விட அதிகமான பலனைத் தருகின்றனர். ராகு, கேதுகிரஹங் களுடன் சம்பந்தம்பெற்று அனேகம் கிரஹமிருக்குமானல் அந்த அனேகம் கிரஹங்களுள் எந்தக்கிரஹம் அதிகம் வலுவுள்ளதோ அந்தக் கிரஹம் தரவேண்டிய பலனை இந்த ராகு கேதுக்கள் கொடுக்கின்றனர் என்றறியவேண் டும் (எ-று.)

(அ-கை) கேந்திர, திரிகோணதிபதிகள் 3-6-8-11- மிடத்ததிபதிகளுடன் ... சம்பந்தத்

தை யடைந்தனரேயானால் விசேஷ பலனைத் தருகின்றனர் என்பதை உபதேசிக்கிறார்.

मू०॥ केन्द्रत्रिकोणपतयः सम्बन्धेन परस्परम् ।
इतरैरप्रसक्ताश्चे द्विशेषफलदायकाः ॥ १२ ॥

(ப-ரை) केन्द्रत्रिकोणपतयः=கேந்திரம், திரிகோணம், இவ்விரண்டிற்கும் பதிகளான கிரஹங்கள் परस्परम् = ஒருவருக்கொருவர் सम्बन्धेन-சேர்ந்து ஒரே ராசியில் சஞ்சரித்தல், ஒருவரையொருவர் பார்த்தல் அல்லது இவ்விருவருள் ஒருவரால் பார்க்கப்படல் முதலிய சம்பந்தத்தால் इतरैः= 3-6-8-11-மிடத்ததிபர்களுடன் अप्रसक्ताश्चेत्=சேர்க்கையை யடையாதவர்களாக இருப்பார்களேயானால் विशेषफलदायकाः= அதிகமான சுபபலனைத் தருகின்றனர்.

(தா-ம்) கேந்திராதிபதிகளான கிரஹங்கள், திரிகோணாதிபதிகளான கிரஹங்களுடன்கூட சம்பந்தம் பெற்று, அதாவது: கேந்திராதிபதியும் திரிகோணாதிபதியுஞ் சேர்ந்து ஒரு ராசியிலிருத்தல், கேந்திரத் திரிகோணாதிபதிகள் ஒருவரையொருவர் பார்த்தல், அல்லது இவ்விருவருள் யாதேனும் ஒருவரால் மற்றவர் பார்க்கப்படல் ஆகிய இம்முறைகளுள் யாதானுமொரு முறையில் சம்பந்தம்பெற்று, 3-6-8-11க்குடைய கிரஹங்களின் மேற்கூறிய சம்பந்தம் பெறாதவர்களாகவு மிருப்பார்களேயானால் விசேஷமான சுபபலனையே தருவர். இவ்விடத்தில் கேந்திரத் திரிகோணபதிகள் 3-6-8-11க்குடையவர்களின் ஸம்பந்தம் பெறாதவர்களாயிருந்தால் என்று கூறியதிலிருந்து கேந்திராதிபதியாகவோ

திரிகோணுதிபதியாகவோ ஆகின்ற கிரஹத்திற்கு தோஷ முள்ள வேறுபாவங்களுக் காதிபத்யம் இல்லாதிருத்தல் வேண்டும் என்றும் சொன்னதாயேற்படுகின்றது. ஆகவே தோஷமுள்ள வேறு பாவாதிபத்ய மில்லாதவர்களாயிருக்கின்ற கேந்திர திரிகோணுதிபதிகள், முற்கூறியபடி பரஸ்பர ஸம்பந்தத்தையடைந்தனரேயானல் விசேஷமாக சுப பலனைத் தருவர் என்றும், தோஷமுள்ள வேறு பாவாதிபத்யம் பெற்ற கேந்திர திரிகோணுதிபதிகள் முற்கூறியபடி பரஸ்பர ஸம்பந்தத்தைப் பெறுவாராயின் சாமான்யமான சுப பலனைத்தருவரே யொழிய முற்கூறியபடி விசேஷ சுபபலனைத்தரார் என்றும் கருத்துக்கொள்ளவேண்டும். மேலும் கேந்திர, திரிகோணுதிபர்களான கிரஹங்களுள் சில கிரஹங்களுக்கு தத்தமது ஸ்தான மஹிமையால் சுபமான பலனைத் தரும் தன்மையானது சுவபாவமாயிருந்தபோதிலும் கூட முற்கூறியபடி பரஸ்பர ஸம்பந்தத்தையும் அடைந்து விட்டனரேயாயின் விசேஷசுபபலனைத் தருகின்றவர்களாகின்றனர் என்றும் கண்டுகொள்ளவேண்டும். இந்தச் சுலோகத்திற்கூறியவற்றை பின்னும் இங்கு விளக்குவாம்:—மேஷலக்கினத்திற்குச் சந்திரனும் சூரியனும், விருஷபத்திற்கு சூரியனும் சனியும், கடகத்திற்கு சந்திரனும் செவ்வாயும், சிம்மத்திற்கு செவ்வாயும் சூரியனும், கன்னிக்கு சுக்கிரனும் குருவும், துலாத்திற்கு சனியும் செவ்வாயும், விருச்சிகத்திற்கு குருவும் சூரியனும், தனுஸ்ஸிற்கு குருவும் சூரியனும், மகரத்திற்கு சனியும் சுக்கிரனும், கும்பத்திற்கு சூரியனும் சுக்கிரனும், மீனத்திற்கு குருவும் செவ்வாயும், ஆகிய இந்த கிரஹங்கள் மேஷம் முதல் மீனம் வரையுள்ள பன்னிரண்டு

ராசிகளுக்கும் வேறு ஸ்தாநாதிபத்திய தோஷமில்லாதவர்களான கேந்திர திரிகோணாதிபதிகளாகின்றனர். ஆகவே, இந்தக்கிரஹங்கள் 3, 6, 8, 11-மிடத்ததிபர்களான கிரஹங்களின் சம்பந்தம் பெறாதவர்களாக இருப்பார்களேயானால் விசேஷ சுபபலனைத் தருவர் என்று சொன்னதாக ஏற்பட்டது (எ - று.)

(அ - கை) இனி எழுசுலோகங்களால் ராஜயோகங்கள் சொல்லப்படுகின்றன.

मू०॥ केन्द्रत्रिकोणनेतारौ दोषयुक्तावपि स्वयम् ।
संबन्धमात्रात्प्रबलौ भवेतां योगकारकौ ॥ १४ ॥

(ப - ரை) **प्रबलौ**=பலமுள்ள **केन्द्रत्रिकोणनेतारौ** - கேந்திர திரிகோணாதிபதிகள், அதாவது:—தர்ம கர்மாதிபதிகள் **स्वयम्**=தாம் **दोषयुक्तावपि**=தோஷமுள்ள வேறுஸ்தானங்களுக்கு அதிபர்களாவதன் மூலம் நேரும் தோஷமுள்ளவர்களாயிருந்தபோதிலும் **संबन्धमात्रात्**=ஒரே ராசியில் சேர்ந்திருத்தல், ஒருவரை யொருவர் பார்த்தல்முதலிய ஸம்பந்தத்தைக் கொண்டு மட்டும் **योगकारकौ**=ராஜயோகத்தைத் தருகின்றவர்களாக **भवेताम्**=ஆகின்றனர்.

(தா - ம்) 6-வது சுலோகத்தில் **प्रबला उत्तरोत्तरम्** என்றுகூறியிருப்பதை யொட்டி 9, 10 - மிடங்களே எல்லா ஸ்தானங்களையும்விட மேலானதாகவாவதால் இந்தச்சுலோகத்திலுள்ள **प्रबलौ केन्द्रत्रिकोणनेतारौ** என்ற பதத்திற்கு தர்ம கர்மாதிபதிகள் என்று பொருள்கொள்ளப்பட்டது. ஆகவே தர்ம கர்மாதிபதிகள் வேறு துஸ்தாநாதிபதிகளாயிருந்த

ால் தோஷமுள்ளவர்களா யிருந்தபோதிலும் ஒருவரோ டொருவர் சேர்ந்து வஸித்தல், ஒருவரை யொருவர் பார்த்தல், இருவருள் ஒருவரால் மற்றவர் பார்க்கப்படல் என்ற சம்பந்தத்தை மட்டும் அடைவார்களே யானுல் ராஜயோகத்தைத் தருவர் என்று கண்டுகொள்ள வேண்டும். இதனுல் ராஜயோகமானது தர்ம கர்மாதிபதிகளைக் கொண்டே சொல்லவேண்டும் என்று பெறப்பட்டது.

(அ - கை.) 9-மிடத்தில் 10-மிடத்திற்குடைய கிரஹமும், 10-மிடத்தில் 9-க்குடைய கிரஹமுமாகமாறி இருந்தாலும், அல்லது இவ்விருவர்களுள் 9-ல் 10-க்குடையவனே, 10-ல் 9-க்குடையவனே இருந்தாலும் ராஜயோக முண்டென்பதை இதனுலுபதேசிக்கிருர்.

மூ०॥ निवसेतां व्यत्येन तावुभौ धर्मकर्मिणौ ।
एकत्राऽन्यतरो वापि वसेच्चेद्योगकारकौ ॥ १९ ॥

(ப - ரை) **तौ**=அந்த **धर्मकर्मिणौ**=9, 10-மிடத்ததிபதிகளான **उभौ**=இருவரும் **व्यत्ययेन**=மாறுதலோடு **निवसेताम्**=வஸிப்பார்களேயானுலும் **एकत्र**=9, 10 - மிடங்களுளொன்றில் **अन्यतरोवापि**=இவ்விருவருள் ஒருவர் **वसेच्चेत्**=வஸித்தாலும் **योगकारकौ**=ராஜயோகத்தைச் செய்கின்றவர்களாக (**भवतः**=ஆகின்றனர்.)

(தா - ம்) தர்மகர்மாதிபதிகளான இவ்விரு கிரஹங்களுள் 9-மிடத்தில் 10 - குடையவரும், 10 - மிடத்தில் 9 - குடையவருமாக மாறி இருந்தாலும் அவ்விரு கிரஹங்களும் ராஜயோகத்தைச் செய்வர். மேலும் மேற்கூறியபடி

மாறி வசிக்காவிடினும், 9. 10-மிடங்களுள் யாதானுமொன்றில் இவ்விருவருள் எவரேனுமொருவரிருந்தாலும் (அதாவது: 9-மிடத்தில் 10-மிடத்ததிபர் மட்டுமோ, 10-மிடத்தில் 9-மிடத்ததிபர் மட்டுமோ இருந்தாலும்) இவ்விருகிரஹங்களும் ராஜயோகத்தையே செய்வர் (எ - று)

(அ - கை) திரிகோணாதிபர்களான 5, 9-மிடத்ததிபர்களுக்குள் யாதேனு மொருவருடன் 10-மிடத்திற்குடைய கிரஹத்திற்கு ஸம்பந்தமிருந்தாலும் ராஜயோகமுண்டென்பதை இதனாலுபதேசிக்கிறார்.

मू०॥ त्रिकोणाधिपयोर्मध्ये संबंधो येन केन चित् ।
केन्द्रनाथस्य बलिनो भवेद्यदि स योगकृत् ॥ १६ ॥

(ப - ரை.) बलिनः=வலிவுள்ள केन्द्रनाथस्य=கேந்திராதிபதிக்கு அதாவது: கர்மாதிபதிக்கு त्रिकोणाधिपयोः = 5, 9-மிடத்ததிபர்களுள் येनकेनचित् = எவரேனு மொருவருடன் संबंधः=சம்பந்தமானது भवेद्यदि=நேருமானால் सः = அவ்வித ஸம்பந்தம் பெற்றக்கிரஹம் योगकृत्=ராஜயோகத்தைச் செய்வதாக भवति=ஆகின்றது.

(தா - ம்) இவ்விடத்தில் बलिनः केन्द्रनाथस्य என்று கூறியதற்கு प्रबला उत्तरोत्तरम् என்று முன்னர் ஆறுவது சுலோகத்திற் சொன்னபடி 10 - மிடத்திற்குடைய கிரஹமே பலவானாக ஆவதுபற்றி 10-மிடத்திற்குடைய கிரஹம் என்று பொருள் கொள்ளப்பட்டது. இவ்விதமே சந்திரிகா வியாக்யானத்திலும் "बलिनः केन्द्रनाथस्य=कर्माधिपतेः" என்று உரை எழுதப்பட்டிருக்கிறது. ஆகவே 10-மிடத்

ற்குடைய கிரஹத்திற்கு, திரிகோணங்களான 5, 9-மிடங்களுக்கு அதிபர்களான கிரஹங்களுள் யாதேனும் ஒரு கிரஹத்துடன் ஸம்பந்த மிருக்குமானால் அந்த ஸம்பந்தமானது ராஜயோகத்தையே செய்யும்.

சங்கை—14-வது சுலோகத்தில் கேந்திரதிரிகோணாதிபர்கள் ஒருவரோ டொருவர் ஸம்பந்தத்தை யடைந்தனரேயானால் ராஜயோகத்தைத் தருவர் என உபதேசித்திருக்கும்பொழுது, திரும்பவும் இந்த சுலோகத்தாலும் 14-வது சுலோகத்தி லுபதேசித்ததையே உபதேசித்தால் "கூறியதைக் கூறல்" என்ற தோஷம் வராதோ வெனில்,

உத்தரம்—அந்த 14 வது சுலோகத்தில் 9, 10-மிடத்ததிபர்களுக்குள்ள சம்பந்தமானது ராஜயோகத்தைத்தரும் என்று கூறப்பட்டது. இந்த சுலோகத்தாலோ 9 மிடம் 5-மிடம் இவ்விரண்டிடத் ததிபர்களுள் எவரேனும் ஒருவருடன் 10 க்குடைய கிரஹத்திற்குச் சம்பந்தமிருந்தால் அந்த சம்பந்தம் ராஜயோகத்தைத் தரும் என்று கூறியிருப்பதால் மேற்கூறிய ஆசங்கைக் கிடமில்லை (எ - து.)

(அ - கை) எந்தத் தசையிலும் ராஜயோகத்தைத் தரும் கிரஹங்களுடைய புக்திகாலங்களிலும், யோககாரகர்களான கிரஹங்களின் தசைகளில் யோககாரகர்களான கிரஹங்களுக்கு நடுவிலிருக்கின்றவர்களும், அதாவது: புக்திநாதர்களும், யோககாரகர்களான கிரஹங்களின் சம்பந்தம் பெறாதவர்களும் சுபர்களுமான கிரஹங்களுடைய புக்திகளிலும் பெரும்பாலும் ராஜயோக முண்டாகலாம் என்பதை உபதேசிக்கிறார்.

मू०॥ दशास्वपि भवेद्योगः प्रायशो योगकारिणोः ।
दशाद्वये मध्यगततद्युक्तशुभकारिणाम् ॥ १७ ॥

(ப - ரை) दशास्वपि-தசாபுக்திகாலங்களிலும் கூட प्रायशः=பெரும்பாலும் योगः=ராஜயோகமானது भवेत्=உண்டாகக்கூடும். योगकारिणोः = ராஜயோகத்தைத்தரும் இரண்டு கிரஹங்களுடைய, அதாவது: தர்மகர்மாதிபதிகளுடைய दशाद्वये=இருதசைகளிலும் मध्यगततद्युक्तशुभकारिणाम्=मध्यगत=தர்ம கர்மாதிபதிகளுக்கு மத்தியிலிருக்கின்றவர்களும் तद्युक्=யோககாரகர்களுடைய சம்பந்தம் பெறுதவர்களும் शुभकारिणाम्=சுபத்தைச் செய்கின்றவர்களுமான கிரஹங்களுடைய (दशास्वपि=தசைகளிலும்கூட योगः प्रायशो भवेत्=ராஜயோகமானது பெரும்பாலுமுண்டாகும்.)

(தா - ம்.) ராஜயோகமானது தசாகாலங்களிலுமுண்டாகலாம். அதாவது:—இங்குள்ள दशासु என்றதால் பொதுவாய் எல்லா உடுதசைகளையும் கிரஹித்துக்கொண்டு ஷஷ்டி-தசைகளில் ராஜயோகம் உண்டாகலாம் என்றால் எந்தத் தசைகளிலும் ராஜயோக காரகர்களான கிரஹங்களுடைய (தர்ம கர்மாதிபதிகளுடைய) புக்திகாலங்களிலும் பெரும்பாலும் ராஜயோக முண்டாகலாம் என்று கூறினதாகக் கொள்ளவேண்டும். மேலும் ராஜயோக காரகர்களான கிரஹங்களுடைய இரண்டு தசாகாலத்திலும்(அதாவது : தர்ம கர்மாதிபதிகளுடைய தசாகாலத்திலும்) தர்ம கர்மாதிபதிகளுக்கு இடையிலுள்ளவர்களும், அதாவது: தர்ம கர்மாதிபதிகளின் தசையின் புக்தி நாதர்களும், தர்ம கர்மாதிபதிகளுடன் வீக்ஷணம் கேந்திர திரிகோணஸ்திதி முதலிய எவ்

வித ச்ம்பந்தத்தையுமடையாதவர்களும், இயற்கையில் அந்தந்த லக்னரிதியாய் சுபத்தைச் செய்கின்றவர்களுமான சுபக் கிரஹங்களுடைய தசாகாலங்களிலும் (அதாவது :— புக்திகாலங்களிலும்) கூட ராஜயோகமானது பெரும்பாலுமுண்டாகலாம், ஆகவே இந்தச் சுலோகத்தால் எந்தத்தசைகளிலும் தர்ம தர்மாதிபதிகளுடைய புக்தி நடக்கும் பொழுதும் ராஜயோகமுண்டாகலாம் என்றும், அல்லது தர்மகர்மாதிபதிகளுடைய இரண்டு தசாகாலங்களிலும் இடையிலிருக்கின்றவர்களும் (அதாவது :—புக்தி நாதர்களும்) தர்ம கர்மாதிபதிகளின் கேந்திர திரிகோணஸ்திதி, வீக்ஷணம் முதலிய எவ்வித சம்பந்தத்தையும் பெருதவர்களும், அந்தந்த ஜாதகங்களுக்கு இயற்கையில் சுபத்தைச் செய்கின்றவர்களாக மட்டுமிருக்கின்றவர்களுமான கிரஹங்களின் புக்தி நடக்கும் காலத்திலும்கூட ராஜயோகமானது பெரும்பாலுமுண்டாகலாம் என்று உபதேசிக்கப்பட்டதாயேற்படுகிறது. இந்தச் சுலோகத்தில் प्रायशः=பெரும்பாலும் என்று கூறியதிலிருந்து யோககாரகதசையில் ஏற்படும் பலனைவிட மேற்கூறியபடிவரும் பலன் சற்று குறைந்ததாகவேதானிருக்கும் என்பதைக் காட்டப்படுகிறது (எ-று.)

குறிப்பு:—இந்தச் சுலோக விஷயமாக நமக்குக் கிடைத்த வியாக்யானத்தைக்கொண்டு நமக்கு எட்டியவரை உரை எழுதியிருக்கிறேமாயினும் அவரவர்கள் தத்தமது குருக்கள் மூலம் தெரிந்துகொள்வதும் மிகவும் சிலாக்யமானதென்றே எண்ணுகிறேம்.

(அ - கை) ராஜயோககாரர்களான தர்மகர்மாதிபதிகளின் ஸம்பந்தத்தையடைந்த 3, 6, 8-11-க்குடைய கிர

ஹங்கள்கூட ராஜயோககாரகர்களின் தசையில் தத்தமது புக்திகாலங்களில் ராஜயோகத்தைத் தருகின்றனவென்பதை இதனுலுபதேசிக்கிறுர்.

மூ०॥ योगकारकसंबंधात्पापिनोऽपिग्रहाः स्वतः।
तत्तद्भुक्त्यनुसारेण दिशेयुर्यौगिकं फलम् ॥ १८ ॥

(ப - ரை.) ग्रहाः=கிரஹங்கள் स्वतः पापिनोऽपि=3, 6, 8, 11 - க்குடையவர்களாவதுபற்றி பாபிகளாயினும்கூட योगकारकसंबंधात्=யோககாரகர்களான கிரஹங்களின் ஸம்பந்தமிருந்தால் तत्तद्भुक्त्यनुसारेण=தத்தமது புத்திக்குத் தக்கபடி यौगिकम्=ராஜயோகமூல முண்டாகின்ற फलम्=பலனை दिशेयुः=கொடுப்பார்கள்.

(தா - ம்.) 3, 6, 8, 11-க்குடைய கிரஹங்கள் பாபிகள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒருகிரஹமானது 3-க்குடையவனுகவும் 10 மிடத்திற்குடையவனுகவும், 6 - க்குடையவனுகவும் 9-க்குடையவனுகவும், 8-க்குடையவனுகவும் 9-குடையவனுகவும், 10-க்குடையவனுகவும் 11 - க்குடையவனுகவுமாகலாம். அதாவது:—கும்பத்திற்குச்செவ்வாய் 3, 10 - க்குடையவனுகிறுன். கடகத்திற்குக் குரு 6, 9-க்குடையவனுகிறுன். மிதுனத்திற்குச் சனி 8, 9-க்குடையவனுகிறுன். மேஷத்திற்குச் சனி 10, 11-க்குடையவனுகிறுன். ஆகவே கும்பத்திற்கு 3-க்குடையவனுவதுபற்றி செவ்வாயும், கடகத்திற்கு 6க்குடையவனுவது பற்றி குருவும், மிதுனத்திற்கு 8-க்குடையவனுவதுபற்றி சனியும், மேஷத்திற்கு 11 - க்குடையவனுவதுபற்றி சனியும் பாபிகளாகின்றனர். ஆகவே மேற்கூறிய முறைப்படி கும்ப கடக

க்கினங்களுக்கு முறையே பாபிகளான செவ்வாய், குரு
இவர்கள் யோக காரகர்களான கிரஹங்களுடன் சேர்ந்தி
ருந்தால், அதாவது:-செவ்வாய் சுக்கிரனுடனும், குரு செவ்
வாயுடனும் சேர்ந்திருந்தால் சுக்கிரதசையில் செவ்வாய்
புக்தி நடக்கும்பொழுதும் செவ்வாய்தசையில் குருபுக்தி
நடக்கும் பொழுதும் ராஜயோகத்தைத் தருகின்றனர்
என்றேற்படுகின்றது. மிதுன லக்கினத்திற்குக் குருவும்
சனியும், மேஷத்திற்குக் குருவும் சனியும் சேர்ந்திருந்து,
சனிதசையில் குருபுக்தியோ, குருதசையில் சனிபுக்தியோ
நடக்கும்பொழுதும் ராஜயோகமுண்டாகும் என்றும் மேற்
கூறிய முறையைக் கொண்டு கூறக்கூடுமாயினும்

**धर्मकर्माधिनेतारौ रंध्रलाभाधिपौ यदि ।**
**तयोस्संबंधमात्रेण न योगं लभते नरः ॥**

என்றதால் மேஷ மிதுன லக்கினங்களுக்குச் சனி
குரு சம்பந்தம் ராஜயோகத்தைத் தருவதில்லை என்று கூறப்
போவதால் இங்கு அவ்விரு லக்கினங்களும் விடுக்கப்பட்
டன. யோக காரகர்களின் சம்பந்தத்தை யடைந்த பாபக்கி
ரஹங்கள் கூடத் தமது புக்திகளில் ராஜயோகத்தைத் தரு
கின்றன வென்றால் யோக காரகர்களின் ஸம்பந்தம் பெற்ற
சுபக்கிரஹங்கள் தமது புக்திகாலங்களில் சம்பூர்ண பலனைத்
தருகின்றன வென்ற விஷயத்தில் என்ன தடை என்பதும்
இதனால் பெறப்பட்டது என்று சந்திரிகையின் வியாக்யா
னத்தில் கூறப்பட்டிருக்கிறது. (எ-று)

(அ-கை) கேந்திரத்திலோ, திரிகோணத்திலோ ராஹு
கேது ...

யாதானுமொருவருடைய ஸம்பந்தம் பெறுவார்களாயின்
ராஜயோகத்தைத் தருவர் என்பதை உபதேசிக்கிறார்—

**மூ॰ ॥ यदि केन्द्रे त्रिकोणे वा निवसेतां तमोग्रहौ ।**
**नाथेनाऽन्यतरस्यैव संबंधाद्योगकारकौ ॥ १९ ॥**

(ப-ரை) **तमोग्रहौ**=சாயாக் கிரஹங்களான ராஹு கேது என்ற கிரஹங்கள் **केन्द्रे**=கேந்திரத்திலோ, **त्रिकोणे वा**=திரிகோணத்திலோ **निवसेतां यदि**=வஸிப்பார்களேயானால் **अन्यतरस्य**=கேந்திரம், திரிகோணம் இவ்விரண்டிடங்களுள் ஓரிடத்தினுடைய **नाथेन**=அதிபதியுடன் **संबंधात्**=ஸம்பந்தத்தையொட்டி **योगकारकौ**=ராஜயோகத்தைத் தருகின்றவர்களாக (**भवतः**=ஆகின்றனர்.)

(தா-ம்) ராஹு கேது இவர்கள் ஜன்மலக்கினத்திற்குக் கேந்திரத்திலோ, திரிகோணத்திலோ இருந்து, அவ்விரண்டிடத்ததிபர்களுள் ஒருவருடன் ஸம்பந்தத்தை யடைந்தார்களே யானால் கேந்திரத் திரிகோணாதிபதிகளின் ஸம்பந்தத்தையொட்டி ராஜயோகத்தைத் தருவர் (எ-று)

(அ-கை) ஒரேகிரஹம் கேந்திரத் திரிகோணங்களுக்கு அதிபதியாக விருந்தால் அவர் ராஜயோகத்தைத் தருவ[ர்] கேந்திரம் திரிகோணம் இவ்விரண்டிற்குமே அதிபதியா[ன] ஒரு கிரஹத்திற்கு வேறு திரிகோண பதியோடு ஸம்பந்த[ம்] மிருக்குமானல் விசேஷ பலனுண்டாவதில் சந்தேஹமில்[லை] என்பதை இதனலுபதேசிக்கிறார்:—

मू० ॥ केन्द्रत्रिकोणाधिपयोरैक्ये तौ योगकारकौ ।
अन्यत्रिकोणपतिना संबंधो यदि किं पुनः ॥ २०.

(ப-ரை) केन्द्रत्रिकोणाधिपयोः= கேந்திரம் திரிகோணம் இவ்விரண்டுஸ்தானங்களுக்கு அதிபதியான கிரஹங்களுக்கு ஐக்யே=ஒன்றாயிருக்குந் தன்மையானது (सति=இருந்தால்)तौ= கேந்திரத் திரிகோணங்களுக்கு அதிபதியான அந்தக் கிரஹங்கள் योगकारकौ=ராஜயோகத்தைத் தருகின்றவர்களாக भवतः=ஆகின்றனர் एवं सति=இவ்விதமிருக்கும் பொழுது) अन्यत्रिकोणपतिना=வேறு திரிகோணபதியுடன் संबंधो यदि= ஸம்பந்தமுமிருக்குமானல் किं पुनः=ராஜயோக பலனைத் தரும் விஷயத்தில் யாதேனும் ஸந்தேகமும் உண்டோ?

(தா-ம்) கேந்திராதிபதியான கிரஹம் எதுவோ அது திரிகோணதிபதியாகவு மாகுமானல் அந்தக் கிரஹம் ராஜயோகத்தைத் தரும். அதாவது: விருஷப லக்கினத்திற்குச் சனி 9-10 க்குடையவனாகவும், கும்ப லக்கினத்திற்குச் சுக்கிரன் 4-9 க்குடையவனாகவும், சிம்மலக்கினத்திற்குச் செவ்வாய் 4, 9க்குடையவனாகவு மாகின்றனர். ஆகவே விருஷப லக்கினத்திற்குச் சனியும், கும்பலக்கினத்திற்குச் சுக்கிரனும், சிம்மலக்கினத்திற்குச் செவ்வாயும் ராஜயோகத்தைத் தருகின்றவர்களாக வாகின்றனர். மேற்கூறிய லக்கினங்களுக்கு கேந்திரத் திரிகோண பதிகளான சனி, சுக்கிரன், செவ்வாய் இவர்கள் திரிகோணாதிபதியான வேறுகிரஹத்துடன் சம்பந்தத்தையும் பெறுவாரானல் ராஜயோகத்தை விசேஷமாகத் தருவர். அதாவது: விருஷப லக்கினத்திற்கு கேந்திரத் திரிகோணாதிபதியான சனிக்கு வேறு திரிகோண

பதியான புதனுடன் சம்பந்தமிருந்தால், அதாவது:புதன்
விடான மிதுனம் கன்னி இவற்றிலிருத்தல், அல்லது
சனியும் புதனும் சேர்ந்து ஒரு ராசியிலிருத்தல், அல்லது
சனியும் புதனும், ஒருவரை யொருவர் பார்த்தல், அல்லது
இவ்விருவருள் சனிக்கு கேந்திரத் திரிகோணத்தில் புதனும்
புதனுக்குக் கேந்திரத் திரிகோணத்தில் சனியுமாகமாறியிரு
த்தல் முதலிய ஸம்பந்தங்களுள் யாதானு மோர்வித சம்பந்த
மிருந்தால் அவசியம் ராஜயோக முண்டாகும் என்பதில்
யாதும் தடையில்லை. இவ்விதமே கும்பலக்கினரிதியாய்
கேந்திரத் திரிகோண பதியாகவான சுக்கிரனுக்கு வேறு
திரிகோண பதியான புதனுடன் மேற்கூறிய முறை
ப்படி சம்பந்த மிருந்தாலும் ராஜயோக முண்டாவதில்
யாதும் தடையில்லை. இதுபோலவே சிம்ம லக்கினத்திற்கு
கேந்திரத் திரிகோண பதியான செவ்வாய்க்கு வேறு திரி
கோண பதியாக குரு வாகிறன். இந்தச் செவ்வாய்க்கு
குருவுடன் மேற்கூறியபடி ஸ்ம்பந்த மிருக்குமானலும்
ராஜயோக முண்டாவதில் யாதும் தடையில்லை என்று மேற்
பட்டது. இவ்விதம் கூறியதிலிருந்து மேற்கூறிய கிரஹங்க
ளின் பலதாரதம்யத்தை யொட்டியும் ராஜயோக ரூபமான
பலத்திலும் தாரதம்யத்தை ஊஹித்துக் கொள்ளவேண்டும்
என்று முபதேசிக்கப்பட்டதாய்க் கொள்ளவேண்டும்.

(அ—கை) தர்ம கர்மாதிபதிகளான கிரஹங்கள், 8, 1
மிடங்களுக்கு மதிபர்களாகி, அவ்விரு கிரஹங்களுக்கும்
முற்கூறியபடி ஸம்பந்தமு மிருக்குமானல் ராஜயோக முண்
டாகாதென்பதை இதனுப தேசிக்கிறர் :—

{०} ॥ धर्मकर्माधिनेतारौ रंध्रलाभाधिपौ यदि ।
तयोस्संबंधमात्रेण न योगं लभते नरः ॥२१॥

(ப—ரை) धर्मकर्माधिनेतारौ=9, 10க்குடைய கிரஹங்கள் ध्रलाभाधिपौ=8–11க் குடையவர்களாகவும் (भवेताम्) यदि= வார்களேயானல் तयोः=8–11க் குடையவர்களாகவும், 9, 0க்குடைய வர்களாகவுமான கிரஹங்களுக்கு संबंधमात्रेण= யாககாரகனுனவேறு கிரஹத்தின் ஸம்பந்த மிருப்பதைக் கொண்டு மட்டும் नरः= (அவ்வித யோகத்திற் பிறந்த) மனி ன் योगम्=ராஜயோகத்தை न लभते=அடைய மாட்டான்.

(தா—ம்) முந்தின சுலோகத்தில் ஒரே கிரஹம் தர்ம ர்மாதிபதியாக வாகி, அந்தக் கிரஹத்திற்கு வேறு திரி காணுதிபதியான கிரஹத்துடன் சம்பந்தமு மிருந்தால் அவ்விரு கிரஹங்களுக்கு மிருக்கும் பலதாரதம்யத்தை பாட்டி ராஜயோக ரூபமான பலனிலும் தாரதம்ய முண் ாகும் என உபதேசிக்கப்பட்டது. இந்தச் சுலோகத்தில் –10க்குடைய கிரஹங்கள் 8–11க்குடைய வர்களாகவுமாகி இந்தக் கிரஹங்களுக்கு யோக காரகர்களான வேறு கிரஹங் ளுடன் மேற்கூறியவாறு சம்பந்தமு மிருக்குமானல் அவ்வி யோகத்திற் பிறந்தவற்கு ராஜயோக முண்டாவதில்லை ன்று உபதேசிக்கப் பட்டதா யேற்பட்டது. அதாவது: மேஷ லக்கினத்திற்குக் குரு 9க் குடையவனுகவும், சனி 0க் குடையவனுகவும் ஆகிறுன். மிதுன லக்கினத்திற்குச் னி 9க்குடையவனுகவும் குரு 10க்குடையவனுகவு மாகி றன். இவ்விரு லக்கின விஷயத்திலும் மேஷலக்கின ரீதி ாய் சனி 11க்குடையவனுகவும், மிதுன லக்கின ரீதியாய்

சனி 8க்குடையவனுகவு மாகிருன். ஆகவே, மேஷம், மிது
னம் என்ற இவ்விரு லக்கினங்களுக்கும் தர்ம கர்மாதிபதிக
ளாக, குரு சனி, சனி குரு, இவ்விருவரு மான போதிலும்
மேஷத்திற்கு 11க் குடையவ னுகவும், மிதுனத்திற்கு 8க்
குடையவனுகவும் சனி ஆவதால், மேஷ மிதுன லக்கின
ஜாதகத்திற்கு முறையே தர்ம கர்மாதிபதிகளாக வான
குரு சனி, சனி குரு, இவர்களுக்கு மேஷத்திற்குத் திரிகோ
ணுதிபயான சூரியனுடனும், மிதுனத்திற்குத் திரிகோணுதி
பதியான சுக்கிரனுடனும்மேற்கூறியவாறு ஸம்பந்த முமிருக்
குமானுல் ராஜயோக முண்டாவதில்லை என்று உபதேசிக்க
ப்பட்டதா யேற்பட்டது. இவ்விதமே—**तयोस्संबंधमात्रेण इत्य
नेन अन्ययोगकारकसंबंधात् योगं न प्राप्नोतीत्यर्थः** என்றதால்
சந்திரிகையின் வியாக்யானத்திலும் கூறப்பட்டிருக்கிறது.
ஆனுல் இந்தச் சுலோகத்திற்குச் சிலர் வேறு விதமாகவும்
பொருள் கூறுகின்றனர். அதாவது: தர்ம கர்மாதிபதி
யான கிரஹங்கள் 8க்கும் 11 க்கும் உடையவர்களாக ஆகி
அவ்விரு கிரஹங்களுக்கும் மேற்கூறியவாறு சம்
பந்தமு மிருக்குமானுல் ராஜயோக முண்டாவதில்லை என்
பதாம். இவ்விதம் பொருள் கொள்ளு மிடத்தும் மேஷலக்
கின ஜாதகனுக்கு தர்ம கர்மாதிபதிகளான குரு சனி
இவர்களின் ஸம்பந்தமும் ராஜயோகத்தைத் தருவதில்லை
என்று உபதேசிக்கப்பட்டதா யேற்படுகிறது (எ—று)

## ஆயுர்த்தாயப் பிரகரணம்.

(அ—கை) ஒரு ஜாதகத்திற்கு ஆயுள் நிர்ணயம் செய்
யத் தொடங்கும் பொழுது ஜன்ம லக்கினத்தினின்றும் எ

ந்தெந்த விடங்களை ஆயுள் ஸ்தானமாகக் கொள்ளவேண்டும் என்பதை இதனு லுபதேசிக்கிருர் :—

मू० ॥ अष्टमं ह्यायुषस्स्थानमष्टमादष्टमं च तत्।
तयोरपि व्ययस्थानं मारकस्थानमुच्यते ॥ २२ ॥

(ப—ரை) **अष्टमम्**=ஜன்ம லக்கினத்தினின்றும் 8 மிட மானது **आयुषः**=ஆயுளுக்கு **स्थानम्**=இடமாகும். (**इति**=என் பது) **हि**=ஜோதிட சாஸ்திரத்தில் பிரஸித்தமானது. **अष्ट मात्**=8 மிடத்தினின்றும் **अष्टमंच**=8 மிடமும், அதாவது: ஜன்ம லக்கினத்திற்கு மூன்ருமிடமும் **तत्**=அந்த ஆயுள் ஸ்தானமாகவாகும். **तयोः**=8 மிடம், 8க்கு 8மிடம் இவ் விரண்டிற்கும் **व्ययस्थानमपि**= பன்னிரண்டாமிடமும், அதா வது: 8 மிடத்திற்கு 12 மிடமான 7 மிடமும், 8க்கு 8 மிடமான 3 மிடத்திற்கு 12 மிடமான 2 மிடமும் **मारक स्थानम्**=மாரக ஸ்தானமாக **उच्यते**=சொல்லப் படுகின்றது.

(தா—ம்) ஜன்ம லக்கினத்திற்கு 3, 8 மிடங்கள் ஆயுள் ஸ்தானங்களாகும் என்றேற்பட்டது. இந்தச் சுலோகத் தில் **तयोः व्ययस्थानम्** என்று மட்டும் கூறினுலே போதுமான தாயிருக்கும் பொழுது **तयोरपि व्ययस्थानम्** என்று **अपि** என்ற பதத்தையும் சேர்த்து ஆசிரியர் கூறி யிருப்பதி லிருந்து 8 மிடத்திற்கு வியயஸ்தானமான 7 மிடமும், 8க்கு 8 மிடத்திற்கு வியயஸ்தானமான 2 மிடமும் மாரகஸ்தான மாக ஆவது போலவே ஜன்ம லக்கினத்திற்கு 12 மிடமும் மாரக ஸ்தானமாகவேயாகும் என்று கருத்துக் கொண்டிரு ப்பதாக ஏற்படுகிறது. இவ்விதமே சந்திரிகையின் வியாக்யா னத்திலும் **एवं द्वादशभावानामपि व्ययस्थानत्वं द्रष्टव्यम्** “ இம்

முறைப்படி 12ம் பாவங்களுக்கும் வியயஸ்தானமாகும் தன்மை காணத்தக்கது'' என்றதா லுபதேசிக்கப் பட்டிருக் கிறது. ஆகவே ஜன்ம லக்கினத்தினின்றும் 2, 7, 12 இந்த ஸ்தானங்கள் மாரக ஸ்தானங்க ளென்றும்,8மிடம், 3 மிடம் இவைகள் ஆயுள் ஸ்தானங்களென்றும் ஏற்பட்டது. ஆனல், இவ்விஷயத்தில் 2–7 மிடங்களை மாரகஸ்தானங்களாகவும் 3, 8, 12 மிடங்களை கண்டஸ்தானமாகவும் பிரித்தறிய வேண்டும் எனச் சிலர் என்னுகின்றனர். (எ–று.)

(அ–கை) 2, 7, 12 என்ற இந்த மாரகஸ்தானங்களுக்குள் எந்தஸ்தானம் அதிக வலுவுள்ளது என்பதையும், அந்த 2ம் பாவாதிபர்களைக் காட்டிலும் அந்த 2ம் பாவத்திலிருக் கின்றவர்களே அதிகம் வலுவுடையவர்கள் என்பதையும், 2ம் பாவாதிபர்களுடன் மேற்கூறியவாறு ஸம்பந்தம் பெற்ற வர்களும் மாரகர்களாக வாகின்றனர் என்பதையும் இதன லுபதேசிக் கிறார் :—

**मू० ॥ तत्राप्याद्यव्ययस्थयानादुत्तरं बलवत्तरम् ।**
**तदीशितुस्तत्रगताः पापिनस्तेन संयुताः ॥२३॥**

(ப–ரை) **तत्रापि**=முற்கூறிய 2வியய ஸ்தானங்களுள் **आद्यव्ययस्थानात्**=முதலாவதாகக் கூறிய வியய ஸ்தானத்தைக் காட்டிலும், அதாவது : ஏழாமிடத்தைக் காட்டிலும் **उत्त-रम्**=அதற்கடுத்தபடியாகக் கூறிய ஸ்தானமானது, அதா வது : ஜன்மலக்கினத்தி னின்று மிரண்டா மிடமானது, **बलवत्तरम्**=மாரகவிஷயத்தில் அதிகம் வலுவுடையதாக வாகி றது **तदीशितुः**=இரண்டா மிடத்த திபனைக்காட்டிலும் **तत्र**=அந் த இரண்டாமிடத்தை **गताः**=அடைந்த கிரஹங்கள் **पापिनः**=

பாபிகளாக வாகின்றனர். तेन=இரண்டா மிடத்ததிபனுடன் **संयुता:**= சேர்க்கையை யடைந்த கிரஹங்களும் **पापिन:**= பாபிகளாகின்றனர்.

(தா—ம்) ஜன்ம லக்கினத்திற்கு 8 மிடம், 3 மிடம் இவ்விரண்டிடங்கட்கும் 12 மிடங்களான 7 மிடம், 2 மிடம் ஆகிய இவ்விரண்டு ஸ்தானங்களும் மாரக ஸ்தானங்களாகு மென முந்திய சுலோகத்திற் கூறப்பட்டது. அவ்விதம் கூறப் பட்ட 7மிடம், 2 மிடம் ஆகிய இவ்விரண்டு ஸ்தானங்களுள், முதலாவதாகக் கூறிய 8 மிடத்திற்கு 12 மிடமான 7 மிடத்தைக் காட்டிலும், இரண்டாவதாகக் கூறப்பட்ட 8 மிடத்திற்கு 8மிடமான 3 மிடத்திற்கு 12 மிடமான 2 மிடமானது மாரகஸ்தானமாவதில் அதிகம் வலுவுள்ளது. ஆகவே 7 மிடமானது கண்டஸ்தானமாக ஒருஸமயம் ஆனாலுமாகலாமேயின்றி 2 மிடமானது மாரகஸ்தானமா வது திண்ணம் என்பது சிலரின் கொள்கை. இதிலிருந்து 2 மிடத்ததிபதியான கிரஹம் மாரகனாகவு மாகிறான் என் றேற்படும். மேலும், பிரபல மாரகஸ்தான மாகவான 2 மிடத்திற்கு அதிபதியான கிரஹம் மாரகனாக வாவதைக் காட்டிலும், பிரபல மாரகஸ் தானமான 2 மிடத்திலிருக்கி ன்ற கிரஹங்கள் யாவருண்டோ அவர்கள் மாரகர்களாகும் விஷயத்தில் அதிக வலுவுடைய வர்களாவர். இவர்களைவிட இரண்டா மிடத்ததிபதியான கிரஹத்துடன் சேர்க்கையை படைந்த கிரஹங்கள் எவர்களுண்டோ, அவர்கள் மாரகர் களாகும் விஷயத்தில் மிக்க வலுவுடையவர்கள் என்றேற் பட்டது.

சங்கை—**आद्यव्ययस्थानादुत्तरं बलवत्तरम्** என்றிருப்பதால் ஜன்ம லக்கினத்தைக் காட்டிலும் 2மிடம் முதலாவதாக வேற்படும் மாரகஸ்தானமாகவாகும். **उत्तरम्** என்றதால் அதற்கடுத்த படியாயுள்ள 7மிடம் என்று ஏற்படும். இவ்விதம் பொருள் கொள்வது நியாயமாயிருக்க, இதற்கு நேர் விரோதமாக **उत्तरम्** என்றதற்கு 3மிடத்திற்கு 12மிடமான 2மிடம் என்று பொருள் கொண்டது எவ்விதம் தகும் எனின் ?

உத்தரம்—அதன் காரணம் பின்வருமாறு :—22வது சுலோகத்தில் 8மிடத்தை இரண்டாவதாகக்கூறி, இந்த 8மிடம் ஆயுள் ஸ்தானமாவது போல 8மிடத்திற்கு 8 மிடமான 3மிடமும் ஆயுள் ஸ்தானமாக வாகும் என்று மூன்றுமிடம் இரண்டாவதாகக் கூறப்பட்டது. பின்னர் **तयोः व्ययस्थानम्** என்றதால் முதலாவதாகக் கூறிய ஆயுள் ஸ்தானமான 8மிடத்திற்கும், **उत्तरम्**=இரண்டாவதாகக் கூறிய மூன்றுமிடத்திற்கும் விய ஸ்தானம் என்றேற்படுகின்றது. ஆகவே 7 மிடம் முதலாவது விய ஸ்தானமாகவும், 2 மிடம் இரண்டாவது வியயஸ்தானமாகவும் கூறப்பட்டதாக யேற்படுகிறது. இந்தச் சுலோகத்தில் **आद्यव्ययस्थानादुत्तरम्** என்று கூறியிருப்பதால் முதலாவது வியயஸ்தானமான 7 மிடத்தைக் காட்டிலும் **उत्तरम्** இரண்டாவது ஆயுள் ஸ்தானமான மூன்றுமிடத்திற்கு வியயஸ்தானமான 2 மிடமும் என்று தான் பொருள் கொள்ளவேண்டுவது அவசியமாகிவிட்டது. ஆகவே **प्रबला उत्तरोत्तरम्** என்று முன்னர் 6வது சுலோகத்தில் ஆசிரியரே கூறிய நியாயப்படி ஜன்ம லக்கினத்திற்கு இரண்டாமிடமானது **उत्तरं व्ययस्थानम्** என்

றதின் பொருளாகக் கொள்ளப் பட்டிருக்கிறது. ஆகவே முற்கூறிய ஆசங்கைக் கிடமில்லை. மேலும் இந்தச் சுலோகத்தில் उत्तरं बलवत्तरम् என்று கூறியிருப்பதைக் கொண்டு பின்வருமாறு பிரித்துப் பொருள் கொள்ளவேண்டுவதாக ஏற்படுகிறது. அதாவது: 7 மிடம் மாரகஸ்தானமாவதால் அந்த 7மிடத்ததிபன் மாரகனாகிறான். அந்த 7மிடத்ததிபனைவிட அந்த ஏழாமிடத்தி லிருப்பவன் பின்னும் மாரக விஷயத்தில் வலுவுள்ளவனாவன். இவ்வேழாமிடத்திலிருப் பவனை விட அவ்வேழாமிடத்ததிபனான கிரஹத்துடன் சேர்ந்திருக்கும் கிரஹம் மாரகனாகும் விஷயத்தில் அதிகம் வலுவுடையவ னாகிறான். இவ்விதம் 7மிடம், 7க்குடையவன், அந்த 7மிடத்திலுருப்பவன், அந்த 7மிடத்ததிபனுடன் சேர்ந்தவன் இவர்களைக் காட்டிலும், 2மிடம், 2க்குடையவன், 2லிருப்பவன்,2மிடத்ததிபனுடன் சேர்ந்திருக்கும் கிரஹம் இவர்கள் மாரகனாகும் விஷயத்தில் மிக்கமிக்க வலுவுபெற்ற வர்களாக வாகின்றனர் என்பதாம். மேலும், 7க்குடையவன், 2க்குடையவன் இவர்களின் பலதாரதம்யத்தைக் கண்டறிந்தும், அவர்களுடன் சேர்ந்த கிரகங்களின் பலாபலத்தன்மை யறிந்தும், மாரகத்தன்மையைக் கற்பிக்க வேண்டுவது மவசியமாகின்றது. (எ—று)

(அ—கை) 7மிடம், 2மிடம் இவ்விரண்டு வியயஸ்தானங்களிலு மிருக்கின்ற வர்களும் 7மிடம், 2 மிடம் இவ்விரண்டிடங்களுக்கும் அதிபதிகளான கிரஹங்களின் ஸம்பந்தத்தை யடைந்திருக்கின்ற வர்களுமான பாபிகளான கிரஹங்களுடைய தசை புக்தி இவைகளிலோ அல்லது, 7, 2 மிடத்

தநிபர்களுடைய தசை, புக்தி இவைகளிலோ மரணமுண்டாகும் என்பதை இதனாலுபதேசிக்கிறார்.

**मू०॥ तेषांदशाविपाकेषु संभवेन्निधनं नृणाम् ।**
**तेषामसंभवे साक्षाद्व्ययाधीशदशास्वपि ॥२४॥**

(ப—ரை) **तेषाम्**=7, 2 மிடங்களி லிருக்கின்றவர்களும், 7, 2 மிடத்தநிபர்களுடன் ஸம்பந்தத்தை யடைந்தவர்களுமான பாபிகளான கிரஹங்களுடைய **दशाविपाकेषु**=தசைபுக்தி இவைகள் நடக்கும் பொழுது **नृणाम्**=மனிதர்களுக்கு **निध-नम्**=மரணமானது **संभवेत्**=நிச்சயமா யுண்டாகலாம். **तेषाम्**=முற்கூறிய கிரஹங்களுடைய **असंभवे**=ஸம்பவமில்லாவிடில் **साक्षात्**= நேரில் **व्ययाधीशदशास्वपि**—**व्ययाधीश**= 7, 2 மிடத்தநிபரின் **दशास्वपि**=தசை, புக்தி இவைகளிலும் கூட (**नृणां निधनं भवेत्**=மனிதர்களுக்கு மரணமுண்டாகலாம்).

(தா—ம்) ஜன்மலக்கினத்திற்கு 7மிடம், 2மிடம் இவ்விரண்டிடத்திலு மிருக்கின்றவர்களும், அல்லது 7மிடம், 2மிடம் இவ்விரண்டிடத் தநிபர்களுடன் சேர்ந்திருக்கின்றவர்களுமான பாபக்கிரஹங்களுடைய தசை, புக்தி இவைகள் நடக்கும்பொழுது ஜாதகனுக்கு மரணமுணடாகலாம். அல்லது 7மிடம், 2மிடம் இவ்விரண்டிடங்களிலும் ஒரு பாபக்கிரஹமு மில்லாமலும், 7மிடம் 2மிடம் இவ்விரண்டிடத்தநிபர்களுடைய சம்பந்தத்தை ஒரு பாபக்கிரஹமு மடையாமலு மிருந்தால், அப்பொழுது 7மிடம், 2மிடம் இவ்விரண் டிடங்களுக்கும் எந்தக் கிரஹங்கள் அதிபதிகளோ அந்த அதிபதியான கிரஹமே நேரில் மரணத்தைத் தரும் என்று கொள்ள வேண்டும். இந்தச் சுலோகத்தில்

**साक्षात्**=என்று கூறியதிலிருந்து 7மிடம், 2மிடம் இவ்விரண்டிடத்ததிபர் மாரணத்தைத் தருகின்றவர்களாக ஆகும் பொழுது தனது தசை, தனது புக்தி இவற்றிலேயே தத்தமக்குச் சொல்லிய நிமித்தமூலம் மாரணத்தைத் தருவர் என்று கூறியதாகக் கொள்ள வேண்டும். கிரஹங்கள் மாரணத்தைத்தரும் நிமித்தங்கள் பின்வருமாறு:—

**अग्न्युष्णज्वरपित्तशस्त्रजमिनः चन्द्रो विषूच्यंबुरु**
**ग्यक्ष्मादिक्षितिजोऽसृजा च दहनक्षुद्राभिचारायुधैः ।**
**पाण्ड्वादिभ्रमजं बुधो, गुरुरनायासेन मृत्युं कफा-**
**त्स्त्रीसंगोत्थरुजं कविस्तु, मरुता वा सन्निपातैः शनिः ॥**
**काष्ठेन वा कृत्रिमभक्षणाद्वा राहुर्विषाद्वाथ मसूरिकाद्यैः ।**
**कुर्याच्छिखी दुर्मरणं नराणां रिपोर्विरोधादपि कीटकाद्यैः ॥**

ஸூரியன்—நெருப்பு, உஷ்ணஜ்வரம், பித்தம், ஆயுதம் இவற்றினாலுண்டாகும் மாரணத்தையும், சந்திரன்—விஷூசி (காலரா முதலியன) ஜலரோகம், ராஜயக்ஷ்மா முதலியவற்றாலுண்டான மாரணத்தையும், செவ்வாய்—ரக்தம், நெருப்பு, க்ஷுத்திரம், பில்லி சூன்யம், ஆயுதம் முதலியவற்றா லுண்டானமாரணத்தையும், புதன்—பாண்டு முதலியன, பைத்தியம் முதலியவற்றா லுண்டான மாரணத்தையும், குரு—கபத்தா லுண்டான அனயாஸ மாரணத்தையும், சுக்கிரன்—ஸ்திரீகளின் சேர்க்கையாலுண்டான ரோகமூலமான மாரணத்தையும், சனி—வாயுவினாலும், ஸன்னிபாத ஜ்வரம் முதலியவற்றாலு முண்டான மாரணத்தையும், ராஹு—குஷ்டம், கிருத்திரிமமான ஆஹாரத்தை உட்கொள்ளுதல், விஷம்,

வஸூரி முதலியவற்று லுண்டான மாரணத்தையும், கேது தூர்மாரணத்தையும், சத்துரு விரோதம் சில்விஷக்கடி முதலியவற்று லுண்டான மாரணத்தையும் தருவர்" எனப் பலதீபிகை 14வது அத்தியாயம் 14, 15வது சுலோகங்களில் கூறப்பட் டிருக்கிறது. பின்னும், சூரியன் முதல் சனிவரையுள்ள கிரஹங்கள் மூலமறிய வேண்டிய மாரண நிமித்தத்தை நமது பிருஹத்ஜாதக மொழிபெயர்ப்பில் 604, 605 வது பக்கங்களிலும் கூறப்பட்டிருப்பதைக் கண்டு கொண்டு அதற்குத் தக்கபடி ஊஹித்துப் பலன் சொல்ல வேண்டும். மேலும் பலதீபிகை 14வது (1) அத்தியாயம் 1முதல் 11வது முடியவுள்ள சுலோகங்களில் சொல்லியபடி ரோக நிர்ணயமும் செய்துகொண்டு 14, 15வது சுலோகத்திற் சொல்லியபடி மாரண நிமித்தத்தையுமறிந்து சொல்வது அனுபவத்திற் பொருத்தமுள்ளதாகவே இருக்கும். மேலும் **साक्षाद्व्ययाधीशदशास्वपि** என்றதற்கு ஜன்ம லக்கினத்தினின்றும் 12 மிடத்ததிபரின் தசைகளில் மாரணமுண்டாகும் எனச் சிலர் பொருள் கூறுகின்றனர். ஆயினும் முற்கூறியபடி பொருள் செய்வது தான் பொருத்தமானது என்பது நமது தோற்றம். (எ-று)

(அ-கை) முற்கூறியபடி 7-2 க்குடையவன், 7-2 லிருப்பவன், 7-2 க்குடைய கிரஹஸம்பந்தம் பெற்றவன் ஆகிய பாபிகளுடைய தசை புக்தி இவைகள் வராவிடினும் முற்

(1) ரோகநிர்ணயம் செய்யவேண்டிய சுலோகங்களை இங்குமொழி பெயர்த் தெழுது வதானல் கிரந்தம் விரிவடையுமாதலால் எழுதவில்லை.

கூறிய வியயாதி பதியினுடைய சம்பந்தத்தையொட்டி யோக காரகர்களல்லாத சுபக்கிரஹங்களுடைய தசைகளிலும் கூட சில ஜாதக விஷயத்தில் மரணமுண்டாகலாம் என்பதை இதனு லுபதேசிக்கிருர்:—

सू० ॥ अलाभे पुनरेतेषां संबंधेन व्ययेशितुः ।
क्वचिच्छुभानां च दशास्वष्टमेशदशासु च ॥ २९

(ப-ரை) **एतेषां पुनः**=முற்கூறிய படிக்குள்ள பாபக்கிரஹங்களுடைய **अलाभे**=தசைகள் நேராத ஸமயத்தில் **व्ययेशितुः**= முற்கூறியபடி வியயஸ்தா (7-2) ஞதிபனுடைய **संबंधेन**= முற்கூறிய படிக்கான ஸம்பந்தத்தை யொட்டி **शुभानाम्**= யோக காரர்களாக இல்லாத சுபக்கிரஹங்களுடைய **दशासुच**= தசைகளிலும் **क्वचिच्च**=சில ஜாதகவிஷயத்தில் முற்கூறியபடி ஸம்பவிக்காத விடத்தில் **अष्टमेशदशासु च—अष्टमेश**= ஜன்ம லக்கினத்திற்கு 8மிடத்திற்கும், 8மிடத்திற்கு 8மிடமான 3மிடத்திற்கும் அதிபர்களுடைய தசை, புக்திகளிலும் **मरणं भवेत्**=மரணமுண்டாகலாம்.

(தா-ம்) முற்கூறியபடி 7-2க்குடையவன், 7-2லிருப்பவன், 7-2க்குடைய கிரஹத்துடன் சம்பந்தம் பெற்றவன் ஆகிய பாபக்கிரஹங்களுடைய தசையோ, புக்தியோ வராவிடினும், 7-2 மிடத்ததிபர்களான கிரஹங்களுடைய ஸம்பந்தம் பெற்றவர்களும் யோககாரகர்களாகச் சொல்லப்படாதவர்களுமான சுபக்கிரஹங்களுடைய தசை புக்தி இவைகளிலும் கூட சில ஜாதகத்திற்கு மரணமுண்டாகலாம். இங்கு

**क्वचित्** "சிலவிடத்தில்" என்று கூறியதால் இது பொது வாய் எல்லாஜாதகத்திற்கு முள்ள விதியாகாதெனப்பெறப் பட்டது. மேலும் மேற்கூறியவாறும் நேராத விடத்தில் 8-3 மிடங்களுக்கு அதிபன் எவனோ, அவனது தசாபுக்தி களிலும் மரணமானது சிலஜாதகவிஷயத்தி லுண்டாகலாம். ஆனால், இந்த 8மிடம் 3மிடம் இவற்றை **अष्टमं ह्यायुषः स्थान मष्टमाद्ष्टमंचतत्** । என்றதால் ஆயுள் ஸ்தானமாகக் கூறி யிருப்பதால் ஆயுள் ஸ்தானங்களான 8 மிடம், 3 மிடம் இவ் விடங்களுக்கு அதிபர்கள் ஆயுஷ்காரகர்க ளென்றேற் படுகிறது. இந்த 8-3 மிடத்ததிபர்களான கிரஹங்கள் ஆயுஷ் காரகர்களா யிருப்பது பற்றி மரணத்தைத் தருகின் றனர் என்று கூறியது ஒருவாறு பொருத்த மானதல்ல வாயினும் கூட மரணம் சொல்லுவதற்கு வேறு வழியி ல்லாத சில ஜாதக விஷயத்திலேயே 8 மிடம் 3 மிடம் இவ ற்றின் அதிபர்களைக்கொண்டு மரணம் சொல்லலாமேயொ ழிய, பொதுவாய் எல்லாஜாதக விஷயத்திலுமிந்த நியாயம் பொருந்தாது என்பதைக் காட்டவே இந்தச் சுலோகத்தில் **क्वचित्** என்றபதம் பிரயோகிக்கப் பட்டது என **अगत्याक्वचि-न्निधनं भवेत्** என்றதால் சந்திரிகையின் வியாக்யானத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. (எ—று)

(அ—கை) மேற்கூறியபடி மாரகலக்ஷன மமையாதவர் களும், மாரகக்கிரஹங்களுடைன் எவ்வித ஸம்பந்தத்தையு மடையாதவர்களுமான பாபக் கிரஹங்களுடைய தசை களிலும் சில ஜாதகவிஷயத்தில் மரணகல்பனை செய்ய வேண்டும் என்பதை இதனு லுபதேசிக்கிறூர்.

मू० ॥केवलानाञ्च पापानां दशासु निधनं क्वचित्।
कल्पनीयं बुधैर्नृणां मारकाणामदर्शने ॥ २६ ॥

(ப—ரை) मारकाणाम्=இதுவரை மாரகர்களெனக் கூறப்பட்ட கிரஹங்களுடைய अदर्शने=ஸம்பவமில்லாத क्वचित्=சில ஜாதகவிஷயத்தில் केवलानाम्=மாரகர்களான கிரஹங்களுடன் எவ்விதஸம்பந்தமும் பெருதவர்களான पापानाम्=பாபக் கிரஹங்களுடைய दशासु=தசைகளில் नृणाम्= மனிதர்கட்கு निधनम्=மரணமானது बुधैः=சோதிட சாஸ்திரமறிந்த வித்துவான்களால் कल्पनीयम्=கற்பிக்கத் தக்கது.

(தா—ம்) மாரகர்களாக விருக்கும் தன்மைக்குரிய லக்ஷணம் வாய்ந்த கிரஹங்களின் தசைகளைக் கொண்டு மரணகல்பனை செய்யக்கூடாத சிலஜாதக விஷயத்தில் மாரகர்களான கிரஹங்களுடன் வீக்ஷணம் முதலிய எவ்வித ஸம்பந்தமும் பெருதவர்களும், பாபர்களுமான கிரஹங்களுடைய (அதாவது :—पतयस्त्रि षडायानां यदि पापफलप्रदाः என்றபடி 3-6-11க் குடைய கிரஹங்களுடைய) தசைகளிலும் சில ஜாதக விஷயத்தில் மரணகால நிச்சயம் செய்யவேண்டும். இங்கும் क्वचित् என்று கூறியிருப்பதைக் கொண்டு இவ்விதம் மரணகால நிச்சயம் செய்வதானது ஏதோசில ஜாதகவிஷயமே யல்லாது இது பொது விதியாகாதென்றும் பெறப்படுகிறது.

(அ—கை) மாரகலக்ஷணம் வாய்ந்தவனும், மாரகக் கிரஹங்களின் ஸம்பந்தம் பெற்றவனுமான சனி மற்றெல்லாக் கிரஹங்களைக் காட்டிலும் மாரகனுகும் விதம் இதனுலுபதேசிக்கப்படுகிறது.

मू० ॥ मारकैस्सह संबद्धो निहन्ता पापकृच्छनिः ॥
अतिक्रम्येतरान्सर्वान् भवत्येव न संशयः ॥ २७ ॥

(ப—ரை) **मारकैस्सह=** மாரகக் கிரஹங்களுடன்கூட **संबद्धः=**ஸம்பந்த மடைந்தவனும் **पापकृत्=** பாபலக்ஷணம் வாய்ந்தவனுமான (அதாவது. 3—6—11க்குடைய வனுமான) **शनिः=** சனியானவன் **इतरान् सर्वान्=** தன்னைக்காட்டிலும் மாரகர்களான எல்லாக் கிரஹங்களையும் **अतिक्रम्य=**தாண்டி **निहन्ता=**மாரகனாக **भवत्येव=** ஆகியே விடுகிறான். (**अत्र=** இவ்விஷயத்தில்) **न संशयः=** ஸந்தேஹமே இல்லை.

(தா—ம்) மாரகர்களான கிரஹங்களுடன் சம்பந்தம் பெற்றவனும், ஸ்வயம் பாபபலனைத் தருகின்ற வனும், அதாவது: 3—6—11 க்குடையவனுமான சனி, தன்னைவிட வேறுகாரணங்களால் முந்தியே மாரகர்களாக வாகின்றவர்களும், தனக்குப் பின்னர் மாரகர்களாக ஆகக்கூடிய வர்களுமான எல்லாக் கிரஹங்களையும் மீறி தான் மாரகனாகின்றான். என்ற இந்த விஷயத்தில் சந்தேஹம் யாதுமில்லை.

(அ—கை) இதுவரை கிரஹதசைகளைப் பற்றி உபதேசித்து இனி புக்திவிஷயமாக உபதேசிக்கிறார்—

**सू०॥ न दिशेयुः ग्रहास्सर्वे स्वदशायां स्वभुक्तिषु।**
**शुभाशुभफलं नृणामात्मभावानुसारतः ॥ २८ ॥**

(ப—ரை) **सर्वे ग्रहाः=** எல்லாக் கிரஹங்களும் **स्वदशायाम्=** தனது தசையில் **स्वभुक्तिषु=** தமது புக்திகளில் **आत्मभावानुसारतः=** தத்தமது பாவத்திற் கேற்றவாறு **शुभाशुभफलम्=** சுபமாகவோ அசுபமாகவோ உள்ள பலனை **न दिशेयुः=** கொடுக்கின்றனரில்லை.

(தா—ம்) எந்தக் கிரஹமும் தனது தசையில் தனது புக்தியில் தனது பாவாதிபத்யத்திற் கேற்றவாறு சுபபலனையோ, அசுபபலனையோ தருவதில்லை. இதனால், தனது தசை

க்கு முந்திய தசை எதுவோ அந்தத் தசையில் எந்தப்பலன் நடைபெறுமோ அதற்கனுகுணமாக சுபபலனையோ, அசுப பலனையோ தருவர் என்றேற்பட்டது. இவ்விதமே **किन्तु पूर्वदशानुगुण्येन शुभाशुभफलं दिशेयुरित्यर्थः ।** என்றதால் சந்திரிகையின் வியாக்கியானத்திலும் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே ஒருவனுக்கு சனிதசை நடந்து, அந்தச்சனிதசையின் முடிவில் விசேஷமான பாபபலனே அனுபவத்தில் நடந்திருந்தால், சனிதசைக்குப் பின்னர் நடக்கும் புததசையின் தனது புக்தியிலும் அதேபாபபலன்தான் நடைபெறும். புததசை எவ்வளவு நல்லதசையாக இருந்தபோதிலும் கூட அந்தத் தசையிற்சொல்லிய எவ்வித நல்லபலனும் புததசை புதபுக்தியில் நடைபெறுவதில்லை. இதுபோலவே ஒருவனுக்கு குருதசை பூராவும் விசேஷமான நல்லபலனே நடைபெற்றுப் பிறகு சனிதசையில் சனிபுக்தி நடக்கும் பொழுதும் குருதசையில் நடந்த விசேஷமான நல்லபலனேதான் நடைபெறும். சனிதசையானது எவ்வளவு கெட்டதசையாக விருந்தபோதிலும் அதிற்சொல்லிய கெட்டபலன் எதுவும் சனிதசை சனிபுக்தியில் நடைபெறுவதில்லை என்றேற்பட்டது. இதிலிருந்து "எந்தத் தசையிலாவது ஸ்வ புக்தியில் ஒருவனுக்குநல்லபலன் நடைபெற்றால் மீதமுள்ள அந்தத் தசையின் புக்திகளில் நல்லபலன் எதுவும் நடைபெறாதென்றும் எந்தத் தசையிலும் ஸ்வபுக்தியில் விசேஷமான கெட்டபலனே நடைபெற்றால் மீதமுள்ள அந்தத் தசையில் விசேஷமான நல்லபலனே நடக்கும்" என்றும் சிலர் சொல்வது நியாயமானதென்றே எண்ணுவதற்கு இடமேற்படுகிறது. (எ—று)

(அ-றை) எல்லாக் கிரஹங்களும், தமது சேர்க்கை அல்லது பார்வை முதலியவற்றை யடைந்த கிரஹங்களுடையவும், அல்லது தங்களுக் கொப்பாக சுபாசுப பாவாதிபத்யம் பெற்ற கிரஹங்களுடையவும் புக்திகாலங்களில் தத்தம்து

தசைக்குரிய பலன்களைத் தருகின்றனர் என்பதை இதனுலுபதேசிக்கிருர்.

**मू०॥ आत्मसंबंधिनो येच ये ये निजसधर्मिण:।**
**तेषामन्तर्देशास्वेव दिशन्ति स्वदशा फलम्॥२९॥**

(ப-வை) (**सर्वेग्रहा:**=எல்லாக்கிரஹங்களும்) **आत्संबंधिन:**= தம்முடன் சேர்க்கை வீக்ஷணம் முதலியவற்றைப் பெற்றக் கிரஹங்கள் **ये**=எவைகளுண்டோ **निजसधर्मिण:—निज**=தமக்கு **सधर्मिण:**=ஒப்பான, (அதாவது: தம்மைப்போல சுபாசுப பாவாதிபத்யம் பெற்ற) கிரஹங்கள் **ये, ये**= எவைஎவைகளுண்டோ **तेषाम्**=அந்தக் கிரஹங்களுடைய **अन्तर्देशास्वेव**= புக்திகளிலேயே **स्वदशाफलम्**=தமது தசைக்குரிய சுபாசுபபலனை **दिशन्ति**=கொடுக்கின்றனர்.

(தா-ம்) எல்லாக்கிரஹங்களும், தம்முடன் சேர்ந்து ஒரே ராசியில் வஸித்தல், ஒருவரை யொருவர் பார்த்தல், தமதுக்குக் கேந்திரம் திரிகோணம் இவ்விடத்தில் வஸித்தல், தம்வீட்டில் எந்தக் கிரஹமிருக்குமோ அந்தக்கிரஹத்தின் வீட்டில் தாம் வஸித்தல் ஆகிய இவ்வைந்து விதமான ஸம்பந்தங்களை யடைந்த கிரஹங்கள் எவைகளுண்டோ அந்தக் கிரஹங்களுடைய புக்திநடக்கும் பொழுது தமது தசைக்குரிய சுபமாகவோ, அசுபமாகவோ உள்ள பலன்களைத் தருகின்றனர். அல்லது தம்மைப் போல சுபமான பாவத்திற்கோ, அசுபமான பாவத்திற்கோ அதிபதிகளாயிருப்பது பற்றி தமக்குச் சமானமான கிரஹங்கள் யாவை யுண்டோ அந்தக்கிரஹங்களுடைய தசையில் தமது புக்தி நடக்கும் பொழுதே, தமது தசைக்குரிய சுபமாகவோ, அசுபமாகவோ உள்ள பலனைத் தருகின்றனர். இவ்விதம் கூறியதிலிருந்து குருதசை பூராவக்கும் நேரவேண்டிய சுபாசுப

பலன்கள் யாவும் தன்னுடன் சம்மந்தம் பெற்றக் கிரஹத்தி னுடைய தசையில் தனது புக்தி காலத்திலேயே வரும் என்றேற்பட்டது. ஆனால் மேற்கூறியபடி சம்பந்தம் பெற் றக்கிரஹம் ஒருவனாகவே இருந்தால் அந்த ஒரேகிரஹத்தின் தசையில் தனது புக்திக்குள் மட்டும் அந்தத் தசைக்குரிய சுபாசுபபலன்கள் யாவும் நடைபெறும் என்றும், இரண்டு கிரஹம், அல்லது மூன்று கிரஹம் மேற்கண்டபடி சம்பந்தம் பெற்றிருக்குமானால், அவ்விரண்டு அல்லது மூன்று கிரஹங் களின் தசைகளிலுமுள்ள தனது புக்தி களிலும், தனது தசைக்குரிய சுபாசுப பலன்கள் யாவும் நடைபெருகின்றன வென்றும் சொன்னதாகக் கண்டுகொள்ள வேண்டும்.

இவ்விதம் கூறியதிலிருந்து தன்னுடன் சம்பந்தம் பெற்றக் கிரஹங்கள் எவ்வளவுண்டோ அவ்வளவு கிரஹங்க ளுடைய தசைகளிலும் தனது புக்தி நடக்கும்பொழுது தனது தசைக்குரிய பலன்யாவும் நடைபெறலாம் என்றேற் பட்டது. இதுபோலவே சுப பாவங்களானத் திரிகோணங் களுக்கு ஒரு கிரஹம் அதிபதியாயிருந்தால் திரிகோணாதி பதியான அந்தக் கிரஹத்தின் தசையில் நேரவேண்டிய சுப பலன் யாவையும் தன்னைப்போலவே, சுபபாவமான திரி கோணத்திற்கு அதிபதியான கிரஹத்தின் தசையில் தனது புக்தி நடக்கும்பொழுது தந்துவிடுகின்றது என்றேற்பட் டது. அதாவது: ஒரு திரிகோணாதிபதியின் தசையில் நேரவேண்டிய சுபபலன்கள், மற்றொரு திரிகோணாதிபதி யின் தசையில், தனது புக்திநடக்கும் காலத்திலுண்டாகும் என்பதாம். விருஷப லக்கினத்திற்கு 9க் குடையவனுவது பற்றிச் சனியும், 5க் குடையவனுவது பற்றிப் புதனும், திரிகோ ணபதிகளாகின்றனர். விருஷபலக்கினத்திற்கோ சனி 9,10க் குடையவனாவதால் ... அந்தச்

சனிதசையில், பூர்ணமான சுபபலனை நடைபெற வேண்டுமாயினும் சனிதசையில், நேரவேண்டிய சுபபலன்கள் யாவும், மற்றொரு திரிகோணுதிபதியான புதனுடைய தசையில் சனி புக்தி நடக்கும்பொழுதும் உண்டாகிவிடும் என்றேற் படுகின்றது. இது போலவே விருஷபலக்கினத்திற்குக் குரு 8, 11க் குடையவனுவதுபற்றி, அசுபமான பாவத்திற்கதிபதியாகி, அசுபபலனைக் கொடுக்கவேண்டியவ னுகிருன். இது போலவே 3க் குடையவ னுவதுபற்றிச் சந்திரனும், 6க் குடையவனுவது பற்றிச் சுக்கிரனும், அசுபர்களாகி அசுபபல னைத் தரவேண்டியவர்க ளாகின்றனர். ஆகவே 8, 11க் குடைய குரு தசையில் நேரவேண்டிய அசுபபலன் யாவும், 3க்குடையவனுன சந்திரனுடையவும், 6க் குடையவனுன சுக்கிரனுடையவும் தசைகளில், குருவினுடைய அந்தர்த் தசை (புக்தி) நடக்கும்பொழுது, குரு தசைக்குரிய கெட்ட பலன் நடைபெறும் என்று கூறியதாகக் கொள்ளல் வேண்டும். இம்முறைப்படியே மற்றெல்லா லக்கினங்கள் விஷயத்திலும், உதாஹரணம் கண்டு கொள்க. (எ—று).

(அ—கை) தசாநாதன் கொடுக்கும் பலனுக்கு, நேர்மாமுன பலனைத் தருகின்ற மற்ற கிரஹங்களின் புக்திகளில் நேரும் பலன்களை, புக்திநாதர்கள் எந்தப் பாவத்திற்கதிபர்களோ, அல்லது, தசாநுதனிருக்கு மிடமிருந்து எந்தப் பாவத்திலிருக்கின்றனரோ, அந்தப் பாவத்திற்குத் தக்கபடி ஊஹித்தறிய வேண்டும், என்பதை இதனுலுபதேசிக்கிருர் :—

मू० ॥ इतरेषां दशानाथविरुद्ध फलदायिनाम् ।
तत्तद्भावानुगुण्येन फलान्यूह्यानि भुक्तिषु ॥२०॥

(ப—ரை) **दशानाथविरुद्धफलदायिनाम्=** தசானுதனுக்கு நேர்மாறான, அதாவது: தசானுதன் கொடுக்கும் பலனுக்கு நேர்மாறான, பலனைத் தருகின்றவர்களான **इतरेषाम्=**வேறு கிரஹங்களுடைய **भुक्तिषु=**புக்தி காலங்களில் நேருகின்ற **फलानि=**பலன்கள் **तत्तद्भावानुगुण्येन**புக்தி நாதனுடைய அந்தந்த ப்பாவத்திற்குத் தக்கவாறு **ऊह्यानि=** ஊஹித்தறியத் தக்கன.

(தா—ம்) தசாநாதன் கொடுக்கும் பலனுக்கு நேர்மாறான பலனைத்தருகின்ற வேறு கிரஹங்களுடைய புக்திகளில் நேரும் பலன்களை, புக்தி நாதனுடைய அந்தந்த பாவத்திற்குத் தக்கபடி ஊஹித்தறியவேண்டும். அதாவது: மேற் கூறியபடி விருஷப லக்கினத்திற்குச் சனி சுபனுகையால் சனிதசை நடந்தால் சுபபலனே நடைபெறவேண்டும். ஆனுல், அவ்விதம் சனிதசை முழுவதும் சுபபலனே நடை பெருமல், தசாநாதனுன சனி கொடுக்கவேண்டிய சுபபல னுக்கு நேர்மாருன அசுபபலன்கள் சிலபுக்திகளில் நடை பெருகின்றன. அவ்விதம் தசானுதன் தரும் சுபபலனுக்கு நேர்மாருன அசுபபலன் எங்கெந்த புக்திகளில் நடைபெறும் என்பதற்கு இந்த விருஷபலக்கின விஷயமாகவே உதாஹர ணம் கூறுவோம். விருஷப லக்கினத்திற்கு 8-11க் குடைய வனுவது பற்றி குருவும், 3க் குடையவனுவது பற்றிச் சந் திரனும், 6க் குடையவனுவதுபற்றிச் சுக்கிரனும்,அசுபபாவா திபதிகளாகின்றனர். ஆகவே, சுபபாவாதிபதியாவது பற்றி ச்சுபனுன சனியின் தசையில் நடைபெறவேண்டிய சுபபல னுக்கு நேர்மாருன அசுபபலன் 8-11க் குடையவனுன குரு வின் புக்தியிலும், 3க் குடையவனுன சந்திரனுடைய புக்தி யிலும், 6க்குடையவனுன சுக்கிரனுடைய புக்தியிலும் நடை பெறும்என்றேற்படுகிறது. இதுபோலவே சுபபலனைத் தரும் தசானுதனுன கிரஹத்திற்கு அசுபஸ்தானமான 3-6-11

மிடங்களில் புக்தி நாதர்களிருந்தாலும், அசுப பலனேதான் நடக்கும் என்று கூறியதாகவும் கண்டு கொள்ளவேண்டும். ஆகவே விருஷபலக்கினத்திற்கு 8-11க் குடையவனுவது பற்றிப் பாபியாகவும், அசுபபலனைத் தரவேண்டியவனுகவும் குருஆகிறுன் என்றும் அசுபபலனைத்தரும் குருவின் தசை நடக்கும்பொழுது 9-10க் குடையவனுவது பற்றிச் சுபனுகவும், அல்லது தசாநாதனுக்கு 9-5 மிடத்திலிருப்பவனுகவும் உள்ள சனியின் புக்தியோ, 4க் குடையவனுவதுபற்றி சுபனும், தசாநாதனுக்கு 4, 5, 9 மிடங்க ளிலிருப்பவனுகவுமுள்ள சூரியனுடைய புக்தியோ, நடக்கும் பொழுதும், தசாநாதனுன குருவின் மூலம் நேரவேண்டிய அசுபபலன் எதுவும் நடைபெருது, அதற்கு நேர்மாருக சுபமான பலனே நடைபெறக் கூடும் என்லும் கூறியதாகக்கண்டு கொள்ள வேண்டும். இவ்விதமே மற்ற லக்கினங்கள் விஷயத்திலும் உதாஹரணங்கள் கண்டு கொள்க. (எ—று)

(அ—கை) தோஷமுள்ள வேறு ஸ்தானங்களுக்கு அதிபதியாக இல்லாத திரிகோணுதிபதியானவன் கேந்திராதிபதியின் சம்பந்தத்தை யடையாவிடினும் கூட, தனது தசையில் கேந்திராதி பதியின் புக்தியில் சுபத்தைத் தருவன் என்பதையும், இவ்விதமே தோஷமற்ற கேந்திராதிப்தியானவன், திரிகோணுதி பதியின் சம்பந்தத்தைப் பெருவிடினும் கூட, தனது தசையில் திரிகோணுதி பதியின் புக்தியில் சுபபலனையே தருவான் என்பதையும் இதனுலுபதேசிக்கிருர்—

(மூ०) स्वदशायां त्रिकोणेशो भुक्तौ केन्द्रपतेश्शुभम् ।
दिशेत्सोपि तथा नोचेदसंबन्धेऽपि पापकृत् ३१

(ப—ரை) **त्रिकोणेशः**=5-9க் குடையக் கிரஹமானது **पापकृत्**=தோஷத்தைச் செய்கின்றவனுக (அதாவது: 3-6-11க் குடையவனுக) **नोचेत्**=இல்லாவிடில் **असंबंधेपि**=கேந்திராதிபதி சம்பந்தமில்லாவிடினும்கூட **केन्द्रपतेः**-1-4-7-10க்குடைய கிரஹத்தினுடைய **भुक्तौ** புக்திகாலத்தில் **शुभम्**=சுபத்தை **दिशेत्**=கொடுப்பான் **सोपि**=அவனும் அதாவது : கேந்திராதிபதியும் **तथा**=அவ்விதமேயாவான்.

(தா—ம்) 5-9மிடத்திற்கு அதிபதியான கிரஹமானது 3-6-11 மிடங்களுக்கும் அதிபதியானுல் துஷ்ட ஸ்தானுதிபத்ய முள்ளவனுக ஆகிவிடுகிறுன். ஆகவே துஷ்டஸ்தானமான 3-6-11 மிடத்தாதிபத்யத்தை யடையாமல், 5மிடம் அல்லது 9மிடம் இவ்விடங்களுக்கு மட்டும்அதிபதியாகவான கிரஹமானது தோஷமற்ற திரிகோணுதி பதியாகின்றது. ஆகவேமேற்கூறிய திரிகோணுதிபதியான கிரஹத்திற்குகேந்ராதிபதியான கிரஹத்தினுடையராசிஸ்திதி, ஒரேயிடத்தில் இருவரும் வஸித்தல், ஒருவரை யொருவர் பார்த்தல் முதலிய சம்பந்த மில்லாவிடினும் கூட 5-9க் குடையக் கிரஹத்தின் தசையில் கேந்திராதிபதியின் புக்திநடக்கும்பொழுது சுபமானபலனை நடைபெரும். இது போலவே கேந்திராதிபதியான (1-4-7-10க் குடையவனுன) கிரஹமானது 3-6-11 என்ற தோஷமுள்ள ஸ்தானங்களுக்கும் அதிபதியாகவாகாமலிருந்து திரிகோணுதிபதியான (5-9க் குடையவனுன) கிரஹத்துடன் முற்கூறியபடி ஸம்பந்தத்தை யடையாதவனுயிருந்த போதிலும் கூட தனது (கேந்திராதிபதியின்) தசையில் திரிகோணுதி பதியின் புக்தியில் சுபபலனையே தருகின்றதுஎன்றும் கொள்ள வேண்டும். இவ்விதம் கூறியிருந்த தசாகாலத்தை அல்லது புக்திகாலத்தை

3.6-11க் குடையவராக இல்லாதிருக்க வேண்டும் என்று அறியத்தக்கது எனச்சந்திரிகா வியாக்யானத்திற் சொல்லப் பட்டிருக்கிறது. இதன்படி பார்க்கும் பொழுது 3-6-11 மிடத்திற்கு அதிபர்களாக வாகாமல் 5-9 மிடத்திற்கு மட்டு மதிபர்களான கிரஹத்தினுடைய தசையில், 3-6-11 மிடத் திற்கும் அதிபர்களாக ஆகாமல் 1-4-7-10 மிடங்களுக்கு மட்டும் அதிபதிகளாகவான கிரஹங்களுடைய புக்திகளில் சுபபலன் நடக்கும் என்றும், இவ்விதமே 3-6-11 மிடங்க ளுக்கு அதிபதிகளாக ஆகாமல் 1-4-7-10 மிடங்களுக்கு மட்டும் அதிபதிகளாகவான கிரஹங்களுடைய தசையில், 3-6-11 மிடங்களுக்கு அதிபதிகளாக ஆகாமல் 5-9 மிடங்க ளுக்கு மட்டும் அதிபதிகளாக வாகின்ற கிரஹங்களுடைய புக்திகாலங்களிலும், சுபமானபலனே நடக்கும் என்றும், திரிகோணுதி பதியான தசாநாதனுக்கும் கேந்திராதிபதி யான புக்திநாதனுக்கும், கேந்திராதிபதியான தசாநாதனுக் கும் திரிகோணுதிபதியான புக்தி நாதனுக்கும், சம்பந்த மில்லாவிடினும் கூட தசாநாத புக்திநாதர்கள் தோஷமற்ற வர்களாயிருத்தலே சுபபலனுண்டாவதில் முக்கிய காரண மாகும் என்று மேற்படுகின்றது. (எ—று)

## ராஜயோக புக்தி லக்ஷணம்.

(அ—கை) ராஜயோகத்தைத் தரும் கிரஹங்களின் தசை நடக்கும் பொழுது தசாநாதனுடைய சொந்த புக்தி காலங்களில் ராஜயோகமானது ஆரம்பமாகும் என்றும், பின்னர் வரும் பாபக்கிரஹங்களின் புக்திகாலங்களிலும் அந்த ராஜயோகமானது பெருகுமே யொழிய குறையா தென்றும் இதனை லுபதேசிக்கப் படுகின்றது—

मू० ॥ आरंभो राजयोगस्य भवेत्कारकपक्तिषु ।(1)
प्रथयन्ति तमारब्धं क्रमशः पापभुक्तयः ॥ ३२ ॥

(ப–ரை) कारकपक्तिषु=ராஜயோக காரகர்களான கிரஹங்களின் தசாகாலங்களில் राजयोगस्य=ராஜயோகத்தினுடைய आरंभः=ஆரம்பமானது भवेत्=உண்டாகும். आरब्धम्=அவ்விதம் ஆரம்பிக்கப்பட்ட तम्=அந்த ராஜயோகத்தை क्रमशः=முறையே நடைபெறுகின்ற पापभुक्तयः=பாபக்கிரஹங்களுடைய (அதாவது: 3—6—11 க்குடையகிரஹங்களுடைய) புக்திகள் प्रथयन्ति= விருத்தி செய்கின்றன.

(தா-ம்) ராஜயோகமானது ஒவ்வொரு ஜாதகனுக்கும் ராஜயோக காரகர்களான கிரஹங்களின் தசாகாலங்களி லாரம்பமாகி நடைபெறும். ஆனால் न दिशेयुः ग्रहास्सर्वे स्वदशायां स्वभुक्तिषु । अत्मभावानुसारेण शुभाशुफफलं नृणाम् ॥ "எந்தக் கிரஹமும் தனது தசையின் தனது புக்தியில் தனது பாவாதிபத்பத்திற்கேற்ப சுபபலனையோ அசுபபலனையோ தருவதில்லை" என்று 28வது சுலோகத்திற் சொல்லி யிருப்பதை யொட்டி ராஜயோக காரகக்கிரஹத்தின் புக்தியில் ராஜயோக பலன் விசேஷமாக நடைபெறுவிடினும் மேற்கூறிய ராஜயோக காரகதசையின் தொடக்கத்தில் ராஜயோகம் நடப்பதற்குரிய அறிகுறிகள் தோன்றி பின்னர் முறையே நடைபெறும் புக்திகாலங்களில் மேற்கூறிய ராஜயோகபலன் விசேஷமாய் நடைபெறுவதாகக் கொள்ளவேண்டும். இவ்விதம் கொள்ளும் பொழுது நடப்பிலிருக்கும் ராஜயோக காரகக் கிரஹ தசையில் முறையே தனதுபுக்தியைவிட மற்ற 8புக்தி

---

(1.) मारकभुक्तिषु என்று சிலர் வேறு பாடங் கொள்ளுகின்றனர் ஆயினும் அது நமக்கு எவ்விதத்திலும் பொருத்தமுள்ளதாகப் படவில்லை.

களில், 3-6-11க்குடையவர்களான பாபக் கிரஹங்களுடைய புக்திகள் இடையில் நடைபெறும் பொழுது மேற்கூறிய ராஜயோகமானது பங்கமடையுமோ வென்றசங்கைக்கிடமில்லாமல் ராஜயோக காரகக்கிரஹதசையில் 3-6-11க்குடையவர்களின் புக்திகாலங்களிலும் தனதுபுக்தியில் தொடங்கின ராஜயோக பலன் மேன்மேலும் பெருகிக் கொண்டேதான் வரும் என்று கொள்ளவேண்டுமென இதனுலுபதேசிக்கப் பட்டது. சந்திரிகா வியாக்கியானத்திலும் **योगकारकदशायां भुक्तिनाथानां पापत्वप्रयुक्तदोषो नास्ति ।** "யோககாரக தசையில் புக்திநாதர்களுக்கு பாபிகளாயிருத்தல் மூலம் நேரும் தோஷம் கிடையா" என்றதால் உபதேசிக்கப் பட்டிருக்கிறது. (எ-று)

குறிப்பு—**आरंभो राजयोगस्य भवेन्मारकभुक्तिषु ।** என்ற பாடப்படி மாரகக்கிரஹங்களின் புக்திகாலங்களில் ராஜயோகமானது ஆரம்பமாகிறதென்றும், அவ்வித மாரகக் கிரஹத்தின் புக்திகாலங்களில் ஆரம்பமான ராஜயோகத்தை பின்னர் முறையே நடக்கும் 3-6-11க்குடையவர்களா யிருப்பது பற்றி பாபிகளான கிரஹங்களுடைய புக்திகள் விருத்திசெய்கின்றன வென்றும் பொருள் கொள்ளப்படுகிறது. இவ்விதம் பொருள் கொள்வோமாயின் **प्रधानस्यैव कारकस्य पक्तिषु राजयोगस्य आरंभो भवेत् । आरब्धं तं राजयोगं क्रमशः पापभुक्तयः प्रथयन्ति । योगकारकदशायां भुक्तिनाथानां पापत्वप्रयुक्त दोषो नास्तीत्यर्थः ।** என்று கூறிய சந்திரிகாவியாக்கியானத்திற்கு அது முறண் படுகிறது. ஆகவே வியாக்கியானத்தைக்கவனிக்கும் பொழுது நாம்சொல்லியபடி பொருள் கொள்வதுதான் உசிதமானதென்றேற்படுகிறது. மேலும் ஆசிரியர் இந்தச்சுலோகத்தில் ராஜயோகத்தைத்தரும் கிரஹதசையில், இடையில்நடக்கும் பாபபுக்திகளில் ராஜயோகத்திற்குப்பங்கம் ஒருபொழுதும் வராதென்று கூறவந்தாரே

யொழிய மாரகக்கிரஹத்தின் புக்திகளில் ராஜயோகம் ஆரம்பித்து அதைப்பாபக்கிரஹபுக்திகள் விருத்திசெய்யும் என்று சொல்ல வழியில்லையென்றேற்படுகின்றது. மேலும் **भवेन्मारकभुक्तिषु** என்ற பாடத்தை யொப்புவதற்குமில்லை. ஏனெனில் 2-3-7-8 இந்த விடங்கள் மாரகஸ்தானங்களென முன்னர் சொல்லப் பட்டிருப்பதில் மூன்றுமிடத்தையும் சேர்த்திருப்பதால் பிறகு **पापभुक्तय:** என்றதால் திரும்பவுமே அந்த மூன்றுமிடத்ததிபரின் புக்தி ராஜயோகத்தைப் பெருக்கும் என்று கூறுவது "கூறியது கூறல்" என்ற தோஷமுள்ளதாகவுமாகிவிடுகிறது. மேலும் இந்த ஜாதகசந்திரிகையில் 3-6-11க்குடைய கிரஹங்களையே பாபிகளென்று **पतयस्त्रिषडायानां यदि पाप फलप्रदा:** என்ற விடத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே இதுபோன்ற காரணங்களால் இந்தச்சுலோகத்தில் நாம் மேலே சொன்னபடி **कारकपक्तिषु** என்று பாடங்கொண்டு அங்கு எழுதியபடி பொருள் கொள்ளுவதுதான் உசிதமானது என்று நமக்குப்படுகிறது. (எ-று)

(அ-கை) ராஜயோககாரகக்கிரஹங்களின் ஸம்பந்தம் பெற்ற சுபக்கிரஹங்களின் புக்திகளும் ராஜயோகத்தை விருத்தி செய்கின்றனவென்பதையும், சுபக்கிரஹங்களின் ஸம்பந்தம் பெறாத யோக காரகர்களின் புக்திகள் ராஜயோகபலனைக் குறைக்கின்றனவென்பதையும் இதனுலுபதேசிக்கிருர்.

**मू० ॥ तत्संबंधि शुभानांच तथा,पुनरसंयुजाम् ।**
**शुभानान्तु समत्वेन नासंयुग्योगकारिणाम्॥२३॥**

(ப-ரை) **तत्संबधिशुभानांच**=ராஜயோக காரகக்கிரஹத்தின் சம்பந்தம் பெற்ற சுபக்கிரஹங்களின் (**भुक्तयश्च**=புக்திகளும்) **तथा**=அவ்விதமே அதாவது:— ராஜயோகப் பெருக்கைத்தருகின்றன; மேலும் **असंयुजाम्**=ராஜயோக காரகக்

கிரஹ ஸம்பந்தம் பெறாதவர்களான **शुभानाम्**=சுபக்கிரஹங்களுடைய **(भुक्तयः) तु**=புக்திகளோ வெனில் **समत्वेन**=நடுநிலையில் ராஜயோகப் பெருக்கைத் தருகின்றன. அதாவது: முன்போலவே செய்கின்றன என்பதாம். **असंयुग्योगकारिणाम्**=சுபக்கிரஹ ஸம்பந்தம் பெறாத ராஜயோக காரகக் கிரஹங்களின் **भुक्तयः**=புக்திகள் **समत्वेनापि न प्रथयन्ति**=முன் போலும் கூட ராஜயோகபலனைத் தருவதில்லை. அதாவது: ராஜயோக பலனைக் குறைத்துவிடுகின்றன.

(தா-ம்) ராஜயோக காரகஸம்பந்தி சுபக்கிரஹங்களுடையபுக்திகாலங்களில்ராஜயோகமானது பெருகுகின்றது. ராஜயோக காரகர்களான கிரஹங்களின் சம்பந்தம் பெறாத சுபக்கிரஹங்களின் புக்திகளில் ராஜயோகபலன் புதிதாய் பெருகாமல் முன்னரிருந்த நிலையிலேயே தானிருக்கும். அதாவது: நடுநிலையிலேயே தானிருக்கும். என்பதாம். சுபக்கிரஹ ஸம்பந்தம் பெறாத யோக காரகர்களின் புக்திகளில் ராஜயோகமானது முன்னரேற்பட்ட நிலைக்குக் குறைவையே அடைந்து கொண்டு வரும் என்று கொள்ளவேண்டும். ஆனால் **अत्मसंबंधिनो येच** என்ற 29வது சுலோகத்திலேயே மேற்கூறிய பொருள் கூறியிருக்க இந்தச்சுலோகத்தில் திரும்பவும் அதேமாதிரியான பொருளைக் கூறிய ஆசிரியரின் கருத்து யாதெனில்? சுபக்கிரஹ ஸம்பந்தம் பெறாத ராஜயோககாரகக்கிரஹத்தின் புக்தியானது முன்னுள்ளநிலையிலிருந்து ராஜயோகத்தைக் குறைத்து விடுகின்றது என்று தனியாய்ப் பொருள் கொள்ளவேண்டியே இங்கு இந்தச்சுலோகத்தைக் கூறியிருக்கிறார் என்பதாம். (எ-று)

(அ—கை) ராஜயோக காரகர்களான கிரஹங்கள் தமது சம்பந்தம் பெறாத சுபக்கிரஹங்களின் தசையில் தத்தமது

புக்திகளில் சிலவிடங்களில் ராஜயோகபலனைத் தருகின்றன வென்பதை இதனாலுபதேசிக்கிறார்—

मू० ॥ शुभस्य स्ववियुक्तस्य दशायां योगकारकाः ।
स्वस्वभुक्तिषु यच्छन्ति कुत्रचिद्योगजं फलम् ३४

(ப—ரை) योगकारकाः=ராஜயோகத்தைத் தரும் கிரஹங்கள் स्ववियुक्तस्य=தமது ஸம்பந்தம் பெறாத शुभस्य=சுபக்கிரஹத்தினுடைய दशायाम्=தசையில் योगजम्=ராஜயோகத்தாலுண்டாகும் பலனை स्वस्वभुक्तिषु=தத்தமது புக்திகளில் कुत्रचित्=சில ஸமயங்களில் यच्छन्ति=தருகின்றனர்.

(தா—ம்) ராஜயோக காரகர்களான கிரஹங்களின் சம்பந்தம் பெறாத சுபக்கிரஹங்களுடைய தசையில் ராஜயோக காரகர்களான கிரஹங்களுடைய புக்தி நடக்கும் பொழுது ராஜயோகபலன் சிலஸமயங்களில் நடைபெறுகின்றன.

(எ—று)

(அ—கை) சாயாக் கிரஹங்களான ராஹு கேதுக்கள் ராஜயோகத்தைத் தரும்காலம் இதனாலுபதேசிக்கப்படுகின்றது :—

मू० ॥ तमोग्रहौ शुभारूढा वसंबद्धौ च केनचित् ।
अन्तर्दशानुरूपेण भवेतां योगकारकौ ॥ ३५ ॥

(ப—ரை) शुभारूढौ=சுபராசியிலிருக்கின்றவர்களும் केनचित्=ஒரு கிரஹத்துடனும் असंबद्धौ=ஸம்பந்தம் பெறாதவர்களுமான तमोग्रहौ=ராஹு கேதுக்கள் अन्तर्दशानुरूपेण=தமது புக்தியை யனுசரித்து योगकारकौ=ராஜயோகத்தைத் தருகின்றவர்களாக भवेताम्=ஆவார்கள்.

(தா—ம்) ராஹு—கேதுக் கிரஹங்கள் சுபராசியில் (அதாவது:—5, 9 இடங்களில்) இருந்து அங்கு வேறு கிரஹங்களின் ஸம்பந்தத்தை யடையாமலு மிருப்பார்களானால் சுபக்கிரஹங்களுடைய தசையில் வரும் தமது புக்திகாலங்களில் ராஜயோகபலனைக் கொடுப்பர். (எ—று)

(அ—கை) தசாநாதன் பாபக்கிரஹமாயிருந்து, பாபியான தசாநாதனுடைய ஸம்பந்தம் பெருத சுபக்கிரஹங்களுடைய புக்திகள் நடக்கும் பொழுது பாபபலனே நடைபெறும் என்றும், பாபியான தசாநாதனுடைய சம்பந்தம் பெற்ற சுபக்கிரஹங்களின் புக்திகள் நடைபெறும் பொழுது சுபம், அசுபம் இரண்டும் கலந்தபலனே நடைபெறும் என்றும், பாபியான தசாநாதனுடன் ஸம்பந்தம் பெருத யோககாரகர்களின் புக்திகள் நடக்கும் பொழுது மிக்கப் பாபபலனே உண்டாகும் என்றும் இரண்டு சுலோகங்களிலுபதேசிக்கிருர் :—

**मू० ॥ पापा यदि दशानाथाः शुभानां तदसंयुजाम् ।**
**भुक्तयः पापफलदाः तत्संयुक्छुभ भुक्तयः ॥ ३६॥**
**भवन्ति मिश्रफलदा भुक्तयो योगकारिणाम् ।**
**अत्यन्त पापफलदा भवन्ति तदसंयुजाम् ॥ ३७॥**

(ப—ரை) **दशानाथाः**=தசாநாதர்கள் **पापायदि**=பாபர்களாஞல் **तदसंयुजाम्**=பாபர்களான தசாநாதர்களுடைய ஸம்பந்தம் பெருதவர்களான **शुभानाम्**=சுபக் கிரஹங்களுடைய **भुक्तयः**=புக்திகள் **पापफलदाः**= பாபபலனைத் தருகின்றவைகளாக **भवन्ति**=ஆகின்றன, **तत्संयुक्छुभभुक्तयः**=பாபியான தசாநாதனுடைய ஸம்பந்தம் பெற்றசுபக்கிரஹங்களுடைய புக்தி

கள் **मिश्रफलदाः**=சுபம், அசுபம் இரண்டும் கலந்த பலனைத் தருகின்றவைகளாக வாகின்றன. **तदसंयुजाम्**=பாபியான தசாநாதனுடைய ஸம்பந்தம் பெறாதவர்களான **योगकारिणाम्**=ராஜயோக காரகர்களான கிரஹங்களுடைய **भुक्तयः**= புக்திகள் **अत्यन्त पापफलदाः**=மிக்க அதிகமான பாபபலனைத் தருகின்றவைகளாக **भवन्ति**=ஆகின்றன.

(தா-ம்)36, 37 இந்த இரண்டு சுலோகங்களும் ஒரே அந்வயமுள்ளன. ஆனதுபற்றி இரண்டையும் சேர்த்தே பதவுரை எழுதப்பட்டது.

(அ—கை) மாரகக் கிரஹத்தினுடைய தசை நடக்கும் பொழுது இன்னபுக்தி மரணத்தைத் தரும் என்பதையும், இன்னபுக்தி மரணத்தைத்தரா வென்பதையும் உபதேசிக்கிறார்:—

**सू० ॥ सत्यपि स्वेन संबंधे न हन्ति शुभभुक्तिषु ।**
**हन्त्यसत्यपि संबंधे मारकः पापभुक्तिषु ॥ ३८ ॥**

(ப—ரை) **मारकः**=மாரகக் கிரஹமானது (**स्वदशायाम्**= தனது தசையில்) **स्वेन**=தன்னுடன் (மாரகக்கிரஹமான தசாநாதனுடன்) **संबंधे**=சம்பந்தமானது **सत्यपि**=இருந்தபோதிலும் கூட **शुभभुक्तिषु**=சுபக்கிரஹத்தினுடைய புக்தி நடக்கும் பொழுது **नहन्ति**=மரணத்தைக் கருவதில்லை. **संबंधे**=மாரகக் கிரஹத்தின் ஸம்பந்தமானது **असत्यपि**=இல்லாவிடினும் கூட **पापभुक्तिषु**=மாரகக்கிரஹதசையில் நடக்கும் பாபக்கிரஹ புக்திகளில் **हन्ति**=மரணத்தைத் தருகின்றது.

(தா—ம்) எந்தக் கிரஹத்தை மாரகக் கிரஹமாக முன் னர் ... ... ... ...

ஹத்தினுடைய தசை நடக்குங்கால் அந்த மாரகக் கிரஹத்துடன் சுபனான புக்திநாதனுக்கு ஸம்பந்தமிருந்த போதிலும் கூட அந்தச்சுபக்கிரஹ புக்திகாலத்தில் மரணமுண்டாவதில்லை. மேலும், அதே மாரகக்கிரஹத்தின் தசை நடக்கும் பொழுது மாரகக் கிரஹத்தின் ஸம்பந்தம் புக்தினாதனான பாபக்கிரஹத்திற்கு இல்லாவிட்டாலும் கூட பாபக்கிரஹத்தின் புக்தி நடக்கும் பொழுது மரணமுண்டாகும். இன்னக்கிரஹம் மாரகம் என்பதையும், இன்னபுக்தி மாரகம் என்பதையும் 22வது சுலோகம் முதல் காண்க.

(எ—று)

(அ—கை) சூரியன், சுக்கிரன் இவர்களின் தசை நடக்கும் பொழுது சூரியதசையில் சுக்கிரனும், சுக்கிரதசையில் சூரியனும் மாறி மாறி சுபாசுபபலனைத் தருவர் என்பதை இதனை லுபதேசிக்கிறார் :—

**मू० ॥ परस्परदशायान्तु स्वभुक्तौ सूर्यभार्गवौ ।**
**प्रदिशेतां व्यत्ययेन विशेषेण शुभाशुभम् ॥३९॥**

(ப—ரை) **परस्परदशायाम्**=ஒருவருக்கொருவருடைய தசாகாலத்தில் **सूर्यभार्गवौ**=சூரியன் சுக்கிரன் இவர்கள் **स्वभुक्तौ**=தனது புக்தி நடக்கும் பொழுது **व्यत्ययेन**=மாறுதலாய் **शुभाशुभम्**= சுபாசுபபலனை **विशेषेण**= அதிகமாக **प्रदिशेयुः**= கொடுப்பார்கள்.

(தா—ம்) ஜாதக ரீதியாய் சூரியன் சுபனாகவோ அசுபனாகவோ ஆகி அந்தச் சூரியனுடைய தசை நடக்கும் பொழுது தசாநாதனான சூரியன் தரவேண்டிய சுபபலனையோ, அல்லது அசுபபலனையோ விசேஷமாகச் சுக்கிரன்

சூரியனுடைய தசையில் நடக்கும் தனது புக்தியில் கொடுப்பான். இவ்விதமே ஜாதகரீதியாய் சுக்கிரன் சுபனுகவோ, அசுபனுகவோ இருந்து அவனுடைய தசை நடக்கும் பொழுது தசாநாதனுன சுக்கிரன் தரவேண்டிய சுபபலனையோ அசுபபலனையோ ஸூரியன் சுக்கிரதசையில் நடக்கும் தனது புக்தியில் விசேஷமாகக் கொடுப்பான் என்றும் கண்டு கொள்ளவேண்டும். (எ—று)

(அ—கை) சனி, சுக்கிரன் இவர்களுள், சனிதசை நடக்கும் பொழுது தசாநாதனுன சனி கொடுக்கவேண்டிய சுபாசுபபலனைப் புக்திநாதனுன சுக்கிரன் கொடுப்பான் என்பதையும், சுக்கிர தசைநடக்கும் பொழுது தசாநாதனுன சுக்கிரன் கொடுக்க வேண்டிய சுபாசுபபலனை அந்தச் சுக்கிர தசையின் புக்திநாதனுன சனி கொடுப்பான் என்பதையும் இதனுலுபதேசிக்கிருர்.

**सू० ॥ परस्परदशायांच स्वभुक्तौ शनिभार्गवौ ।**
**प्रदिशेतां व्यत्ययेन विशेषेण शुभाशुभम् ॥४०॥**

(ப—ரை) **परस्परदशायांच**=ஒருவருக்கொருவருடைய தசாகாலத்தில் **शनिभार्गवौ**= சனி, சுக்கிரன் இவர்கள் **स्वभुक्तौ**=தமது புக்திகாலங்களில் **व्यत्ययेन**=மாறுதலாய் **शुभाशुभम्**=தாம் தரவேண்டிய சுபாசுபபலனை **विशेषेण**=அதிகமாக **प्रदिशेताम्**=கொடுக்கின்றனர்.

(தா—ம்) ஜாதகரீதியாய் சனி, சுக்கிரன் இவர்கள் சுபர்களாகவோ, அசுபர்களாகவோ ஆகி அந்தச் சனி, சுக்கிரன் இவர்களின் தசை நடக்கும் பொழுது தசாநாதனுன சனி தரவேண்டிய சுபாசுபபலனைச் சனிதசையில் நடக்கும் புக்தி

நாதனுன சுக்கிரன் விசேஷமாகத் தருவான் என்றும், சுக்கிரதசை நடக்கும்பொழுது தசாநாதனுன சுக்கிரன் தரவேண்டிய சுபாசுபபலனைச் சுக்கிரதசையில் நடக்கும் புக்திநாதனுன சனி விசேஷமாகத் தருவான் என்றும் கண்டு கொள்ளவேண்டும். (எ—று)

## மேஷாதி லக்கினங்களுக்குக் கிரஹங்கள் சுபர்களாகவும் அசுபர்களாகவும் ஆகும் முறை.

(அ—கை) முன்னர் சொல்லியிருப்பதை அனுஸரித்தே மேஷம் முதலிய ஒவ்வொரு லக்கினங்களுக்கும் சூரியன் முதலிய கிரஹங்கள் சுபர்களாகவோ அசுபர்களாகவோ ஆகின்றனர் என்பதை இதுமுதலுபதேசிக்கிறுர் :—

**ஸூ० ॥ प्रतिलग्नं समाश्रित्य पूर्वोद्दिष्टाऽविरोधतः ।**
**तत्तद्ग्रहस्वरूपाणि क्रमेणैव विवृण्महे ॥ ४१ ॥**

(ப—ரை) **पूर्वोद्दिष्टाविरोधतः**= கிரஹங்களுக்கு முன்னர் கூறப்பட்ட சுபாசுபத் தன்மைக்கு விரோதமின்றியே **प्रति-लग्नम्**=மேஷம் முதலிய ஒவ்வொரு லக்கினத்தையும் **समा-श्रित्य**=அனுஸரித்து **तत्तद्ग्रह स्वरूपाणि**=சூரியன் முதலிய அந்தந்தக் கிரஹங்களின் ஸ்வரூபங்களை **क्रमेणैव**=மேஷலக்கினம் முதற்கொண்டே **विवृण्महे**=விரிவு படுத்துகிறோம்.

(தா—ம்) முன்னர் கிரஹங்களுக்குக் கூறிய சுபாசுபத் தன்மைக்கு எவ்வித மாறுதலுமின்றியே கிரஹங்களின் சுபா சுபத்தன்மை, மாரகனுயிருக்குந்தன்மை முதலியவற்றை மேஷலக்கினம் முதற்கொண்டு முறையே உபதேசிக்கிறோம். இவ்விதம் கூறியதிலிருந்து இதுவரை கூறிய சுபா

சுபத்தன்மை முதலியவற்றையே சுருவில் அறிந்துகொள்வ தற்கு வேண்டி விரிவாய்க் கூறுகிறோம் என்று கூறியதாக வேற்படுகிறது. (எ—று)

(அ—கை) மேஷலக்கினத்திற்குச் சுபாசுபர் முதலியோ ருபதேசிக்கப்படுகின்றனர் :—

मू० ॥ मन्द सौम्य सिताः पापाः शुभौ गुरुदिवाकरौ ।
नशुभं योगमात्रेण प्रभवेच्छनिजीवयोः ॥ ४२ ॥
परन्तु तेन जीवस्य पापत्वमपि सिद्ध्यति ।
कविस्साक्षान्निहन्ता स्यान्मारकत्वेन लक्षितः ४३
मन्दादयो निहन्तारो भवेयुः पापिनो ग्रहाः ।
शुभाशुभफलान्येवं ज्ञातव्यानि क्रियाभुवः ४४

கருத்துரை—மேஷ லக்கினத்திற்குச் சனி, புதன், சுக்கிரன், இவர்கள் பாபிகளாவர். குரு, சூரியன் இவர் கள் சுபர்களாவர். சனி, குரு, இவர்களின் சேர்க்கை யால் மட்டும் சுபம் என்ற ராஜயோக முண்டாவதில்லை. பின்னேயோவெனில் அந்தச்சனியின் சேர்க்கையால் குரு வுக்குப் பாபியாயிருக்கும் தன்மையும் உண்டாகின்றது. மாரகனுகக் கூறப்பட்ட சுக்கிரன் நேரில் மாரகனுக ஆகி ருன். சனி, புதன், சுக்கிரன் என்ற இந்தப் பாபக்கிரஹங் களும் மாரகர்களாகவே ஆகின்றனர். ஆகவே மேஷ லக் கின ஜாதகனுக்கு இங்கு கூறியதைக் கொண்டு சுபாசுப பலன்களை ஊஹித்தறிய வேண்டும்.

(அ—கை) விருஷப லக்கினத்திற்குச் சுபாசுபக்கிரஹங் கள் முதலியவைகள் கூறப்படுகின்றன :—

மூ० ॥ जीवशुक्रेन्दवः पापाः शुभौ शनि दिवाकरौ ।
राजयोगकरस्साक्षादेक एवांशुमत्सुतः ॥ ४५ ॥
जीवादयो ग्रहाः पापाः घ्नन्ति मारकलक्षणाः ।
बुधैस्तत्तत्फलान्येवं ज्ञेयानि वृषजन्मनः ॥ ४६ ॥

கருத்துரை-விருஷப லக்கினத்திற் பிறந்தவன் விஷயத்தில்— குரு, சுக்கிரன், சந்திரன் இவர்கள் பாபிகளாகின்றனர். சனி, சூரியன் இவர்கள் சுபர்களாகின்றனர். சூரியகுமாரனை சனி ஒருவனே ராஜயோகத்தைச் செய்கின்றவனாகின்றான். மாரகலக்ஷணம் பொருந்திய பாபிகளான குரு, சுக்கிரன், சந்திரன் இவர்கள் மாரகத்தைச் செய்கின்றனர். ஆகவே சோதிட வித்வான்கள் விருஷப லக்கின ஜாதகன் விஷயத்தில் இவ்விதம் பலன்களை ஊஹித்தறிந்து சொல்ல வேண்டும். (எ—று)

(அ—கை) மிதுன லக்கினத்திற்குச் சுபாசுபக்கிரஹங்கள் முதலியவைகள் கூறப்படுகின்றன:—

मू० ॥ भौमजीवारुणा पापाः एकएव शुभः कविः ।
शनैश्चरेण जीवस्य योगो मेषभुवो यथा ॥ ४७ ॥
नालं शनिर्निहन्तुं तल्लक्षणात्पापिनस्त्वलम् ।
ज्ञातव्यानि द्वंद्वजस्य फलान्येवं प्रकारतः ॥४८॥

(க-ரை)செவ்வாய், குரு, சூரியன் இவர்கள் பாபிகளென்றும், சுக்கிரன் ஒருவனே சுபன் என்றும், சனியுடன் குருவுக்கு யோகம் ஏற்படும் பொழுது மேஷ லக்கின ஜாதகனுக்குச் சொல்லியது போலவே கண்டு கொள்ளவேண்டு மென்றும்,

சனி கொல்லச் சக்தியற்றவன் என்றும், மாரக லக்ஷணமிருத்தல் பற்றி பாபிகளான செவ்வாய், குரு, சூரியன் இவர்கள் மாரகர்களாகின்றனர் என்றும், இம்மாதிரியான முறையில் மிதுனலக்கின ஜாதகன் விஷயத்தில் பலன்களை ஊஹித்தறியவேண்டும் என்றும் பெறப்பட்டது. (எ-று)

(அ-கை) இனி கடகலக்கினத்திற்குச் சொல்லப்படுகிறது:—

(மூ०) भार्गवेन्दुसुतौ पापौ भूसुताङ्गिरसौ शुभौ ।
एकएव भवेत्साक्षात्भार्गवो योगकारकः ॥ ४९ ॥
निहन्ता रविरन्येतु पापिनो मारकाह्वयाः ।
कुलीरसंभवस्यैवं फलान्यूह्यानि सूरिभिः ॥ ५० ॥

(க-ரை) கடகலக்கினத்திற் பிறந்தவனுக்குச் சுக்கிரனும் புதனும் பாபிகள். செவ்வாய், குரு இவர்கள் சுபர்களாவர். சுக்கிரன் ஒருவனே நேரில் யோகத்தைத் தருபவன். சூரியன் மாரகனவன். மீதமுள்ள பாபக் கிரஹங்கள் மாரகர்களாவர் என்றே சொல்லப்படுவர் எனக் கோண்டு சொதிடவித்வான்கள் ஊஹித்துப்பலன் சொல்லவேண்டும். (எ-று)

(அ-கை) சிங்க லக்கினத்திற்குச் சொல்லப்படுகின்றது.

(மூ०) रौहिणेयसितौ पापौ कुज एकश्शुभावहः ।
प्रभवेद्योगमात्रेण न शुभं कुजशुक्रयोः ॥ ५१ ॥
घ्नन्ति सौम्यादयः पापाः हन्तृलक्षणलक्षिताः ।
एवं फलानि ज्ञेयानि सिंहजस्य मनीषिभिः ॥५२॥

(க-ரை) சோதிட வித்வான்கள், சிம்மலக்கினத்திற் பிறந்தவனுக்குப் புதன் சுக்கிரன் பாபிகளென்றும், செவ்

வாய் ஒருவனே சுபத்தைச் செய்யக்கூடியவனென்றும், செவ்வாய் சுக்கிரன் இவர்களுடைய சேர்க்கை யேற்பட்ட மாத்திரத்தால் சுபம் ஒருபொழுது முண்டாவதில்லையென்றும், மாரகலக்ஷணம்பொருந்திய பாபிகளான புதன் முதலியோர் மாரகர்களாகின்றனர் என்றும் ஊஹித்தறிந்து பலன் சொல்லவேண்டும். (எ-று)

(அ-கை) கன்னியா லக்கினத்திற்குச் சொல்லப்படுகின்றது—

(மூ०) कुजजीवेन्दवः पापा एको भृगुसुतश्शुभः ।
भर्गवेन्दुसुतावेव भवेतां योगकारकौ ॥ ५३ ॥
नहन्ति कविरन्ये तु मारकाख्याःकुजादयः ।
घ्नन्ति पापाः फलान्यूह्यान्येवंकन्यासुबोधुधैः ॥५४॥

(க-ரை) கற்றறிந்தவர்கள் கன்னியாலக்கினத்திற் பிறந்தவன் விஷயத்தில் செவ்வாய், குரு, சந்திரன் இவர்கள் பாபிகளென்றும், சுக்கிரன் ஒருவனே சுபன் என்றும், சுக்கிரன் 2-க்குடையவனுயினும் மாரகனல்லனென்றும், மாரகர்களும் பாபிகளுமான குஜன், குரு, சந்திரன் இவர்கள் மாரகர்களென்றும், ஊஹித்தறிந்து பலன் சொல்லவேண்டும் (எ-று)

(அ-கை) துலா லக்கினத்திற்குச் சொல்லப்படுகின்றது-

(மூ०) जीवार्कमहिजाः पापाः शनैश्चरबुधौ शुभौ।
भवेतां राजयोगस्य कारकाविन्दुतत्सुतौ ॥५५॥
कुजो न हन्ति जीवाद्याः परे मारकलांछनाः ।
निहन्तारः फलान्येवं ज्ञातव्यानि तुलाभुवः॥५६॥

(க-ரை) துலாலக்கினத்திற் பிறந்தவர்க்கு, குரு, சூரியன், செவ்வாய் இவர்கள் பாபிகளாவர். சனி, புதன் இவர்கள் சுபராவர். புதனும், சந்திரனும் ராஜயோகத்தைச் செய்வர். செவ்வாய் மாரகனல்லன். மாரக லக்ஷணம் பொருந்திய குரு, சூரியன் முதலியவர்கள் மாரகர்களாவர் என்று ஊஹித்தறிந்து பலன் சொல்லவேண்டும் (எ-று)

(அ-கை) விருச்சிகலக்கினத்திற்குச்சொல்லப்படுகிறது—

(மூ॰) सौम्यभौमसिताः पापाः शुभ एको निशाकरः ।
सूर्याचन्द्रमसावेव भवेतां योगकारकौ ॥ ५७ ॥
जीवो न हन्ता सौम्याद्या हन्तारो मारकाह्वयाः ।
तत्तत्फलानि विज्ञेयान्येवं वृश्चिकजन्मनः ॥ ५८ ॥

(க-ரை) விருச்சிக லக்கினத்திற் பிறந்தவனுக்குப் புதன் செவ்வாய் சுக்கிரன் இவர்கள் பாபிகள் சந்திரன் ஒருவனே சுபன். சூரியன் சந்திரன் இவர்களே யோககாரகர்கள். குரு மாரகனல்லன். மாரகலக்ஷணம் பொருந்திய புதன் செவ்வாய், சுக்கிரன் இவர்களே மாரகர்களாகின்றனர் எனப்பலன் செல்லும்பொழுதூஹித்தறிந்து சொல்லவேண்டும். (எ-று)

(அ-கை) தனுர் லக்கினத்திற்குச் சொல்லப்படுகின்றது.

(மூ॰) एक एव कविः पापः शुभौ भौमदिवाकरौ ।
योगो भास्करसौम्याभ्यांस्यान्निहन्ताऽशुमत्सुतः ॥
घ्नन्ति शुक्रादयः पापाः हन्तृलक्षणलक्षिताः ।
ज्ञातव्यानि फलान्येवं चापजस्य मनीषिभिः ॥६०

(க-ரை) தனுர்லக்கினத்திற் பிறந்தவனுக்குச் சுக்கிரன் ஒருவனே பாபியாவன். செவ்வாய், சூரியன் இரு

வரும் சுபர்களாவர். சூரியன் புதன் இவர்கள் மூலம் யோகம் உண்டாகவேண்டும். ஆனால் சனி மாரகனாகிறான். மாரகலக்ஷணம்வாய்ந்த பாபிகளான சுக்கிரன், சனி இவர்கள் மாரகர்களாகவாவர் என ஊஹித்தறிந்து பலன் சொல்லவேண்டும். (எ-று)

(அ-கை) மகர லக்கினத்திற்குச் சொல்லப்படுகிறது.

(மூ०) कुजजीवेन्दवः पापाः शुभौ भार्गवचन्द्रजौ ।
राजयोगकरस्साक्षादेक एव भृगोस्सुतः ॥ ६१ ॥
चन्द्रात्मजेन संयुक्तो विशेषफलदायकः ।
स्वयं नैव निहन्ता स्यान्मन्दो भौमादयःपरे ॥ ६२॥
तल्लक्षणान्निहन्तारः कविरेकस्स योगकृत् ।
ज्ञातव्यानि बुधैरेवं फलानि मृगजन्मनः ॥ ६३ ॥

(க-ரை) மகர லக்கினத்திற் பிறந்தவனுக்குச் செவ்வாய், குரு. சந்திரன் பாபிகள். சுக்கிரன், புதன் இவர்கள் சுபர்கள். சுக்கிரன் ஒருவனே தனியாய் ராஜயோகத்தைச் செய்பவன்.புதனுடன் சேர்ந்தால் விசேஷ பலனைத்தருவான். சனி மட்டும் தனியாய் மாரகனாவதில்லை. செவ்வாய் முதலிய மாரகலக்ஷணம் பொருந்திய கிரஹங்கள் மாரகர்களாவர். சுக்கிரனொருவனே நல்லயோகத்தைச் செய்பவன் என்று ஊஹித்தறிந்து பலன் சொல்லுக. (எ-று)

(அ-கை) கும்ப லக்கினத்திற்குச் சொல்லப்டுகின்றது—

(மூ०) जीवचन्द्रकुजाः पापा एको दैत्यगुरुश्शुभः ।
राजयोगकरो भौमः (1) कविरेको बृहस्पतिः॥६४ ॥

(1) कवियुक्तो என்றும் பாடமுண்டு

न हन्ता घ्नन्ति सौम्याद्या मारकत्वेन निश्चिताः ।
एवमेव फलान्येतान्यूह्यानि घटजन्मनः ॥ ६५ ॥

(க-ரை) கும்ப லக்கினத்திற் பிறந்தவனுக்கு, குரு சந்திரன் செவ்வாய் பாபிகள். சுக்கிரன் ஒருவனே சுபன். செவ்வாய், சுக்கிரன் இவர்களேயோககாரகர்கள். குருஇரண்டாமிடத்திற்குடையவனுயினும் மாரகனுகான். மாரகர்களாக நிச்சயிக்கப்பட்ட புதன் முதலியோர் மாரகர்களாவர் என்று ஊஹித்துப் பலன்சொல்லவேண்டும். (எ-று)

(அ-கை)மீன லக்கினத்திற்குச் சொல்லப் படுகிறது—

(மூ०) मन्दशुक्रांऽशुमत्सौम्याः पापाः भौमविधू शुभौ ।
महीसुतगुरू योगकारिणौ नैव भूसुतः ॥ ६६ ॥
मारको, मारकाभिख्या मन्दाद्या घ्नन्ति पापिनः।
इत्यूह्यानि बुधैरेतत्फलानि झषजन्मनः ॥ ६७ ॥

மீனலக்கினத்திற் பிறந்தவர்க்குச் சனி, சூரியன் புதன் இவர்கள் பாபிகள். செவ்வாய் சந்திரன் சுபர்களாவர். செவ்வாயும் குருவும் யோககாரகர்களாவர். இரண்டுக்குடையவனுயினும் செவ்வாய் மாரகனுகான். மாரகலக்ஷணம் வாய்க்க சனி முதலிய பாபிகளே மாரகர்களாகின்றனர் எனப்பண்டிதர்கள் ஊஹித்துப்பலனைக் கண்டு கொள்ளவேண்டும்.

(எ-று)

(அ-கை) சுபக்கிரஹங்கள், புத்திரன் களத்திரம் முதலிய பலனைத்தரும் காலம் உபதேசிக்கப் படுகின்றது—

(மூ०) पुत्र दारादिलाभस्य शुभात्मकतया ग्रहाः ।
प्रदिशन्ति शुभा एव स्वदशायां स्वभुक्तिषु॥६८॥

(க-ரை) புத்திரன், களத்திரம் முதலிய லாபங்கள் சுப பலன் களாயிருப்பதால் அவற்றை சுபக்கிரஹங்கள், தமது தசை தமது புக்தியிலேயே தருகின்றன. (எ-று)

(அ-கை) கிரஹங்களின் சாரங்களைக் கொண்டு இனி வரும் பலன்களை ஒருவாறு கோடிகாட்டக்கூடுமே யன்றி இன்னதுதான் நடக்குமென உறுதி கூறமுடியாதென்பதைத் தெரிவிக்கிறார்—

(மூ०) फलानि ग्रहचारेण सूचयन्ति मनीषिणः ।
कोवा वक्तुं प्रभवति तमेकं वेधसं विना ॥ ६९॥

(க-ரை) சோதிட சாஸ்திர மறிந்தவர்கள் இனி நடக்கும் பலன் விஷயத்தில் ஒருவாறு கோடி மட்டும் காட்டுகின்றனர். படைத்த பிரும்ம தேவனைத்தவிற வேறு எவர் தான் இன்னது தான் நடக்குமென உறுதி கூறமுடியும்? (எ-று)

(அ-கை) ஜாதகத்தில் ராஜயோகமானது அமைந்திருந்த போதிலும் ராஜயோகத்தைத் தரும் கிரஹங்களின் தசை அவனுயுளில் வராவிடில் அந்த ராஜயோகபலன் ஒரு பொழுதும் நடைபெறுதென்பதைத் தெரிவிக்கிறார்.

(மூ०) योगेषु केचिज्जायन्ते मूढाः काश्मीरगर्दभाः।
योगास्ते किंकरिष्यन्ति स्वदशानामनागमे ॥ ७०॥

(ப-ரை) काश्मीरगर्दभा:= காச்மீரதேசத்தியகழுதைகள் போன்ற केचित्=சில मूढा:= மூடர்கள் योगेषु= ராஜயோகங்க ளில் जायन्ते= பிறக்கின்றனர். ते=அந்த योगा:= யோகங்கள் स्वदशानाम्=யோகத்தைத்தரும் கிரஹ தசைகளின் अनागमे= சம்பவமில்லாதபொழுது किंकरिष्यन्ति= என்னபலனைச் செய்யப்போகின்றன.

(தா-ம்) பிறக்கும்பொழுது நல்ல ராஜயோகங்கள் இருந்தபோதிலும் அவ்வித ராஜயோகமமைந்த சில ஜாத கர்கள் மூடர்களாகவும், குங்குமப்பூ விளையுமிடமான காச்மீரதேசத்தில் பிறந்து அங்குள்ள விலையுயர்ந்த குங்கு மப்பூவை யனுபவிக்கத்தகாத கழுதைகளுக் கொப்பாக வே காணக் கிடக்கின்றனர். ஆகவே ராஜ யோகத்தைத் தரும் கிரஹங்களின் தசை அவனதாயுட்காலத்தில் நடக்கா விட்டால் ஜனன காலத்திலமைந்த ராஜ யோகமானது எவ் வித பலனையும் தருவதில்லை என்பது நிச்சயம். (எ-று)

(அ-கை) சூரியன்முதலியகிரஹங்கள் அந்தந்த ஜாத கரிதியாய் பாபிகளாகவாகி உச்சவீடு, சொந்தவீடு இவை களிலிருந்த போதிலும் நல்ல பலனுண்டாவதில்லை யென் றும், சுபக்கிரஹங்கள், உச்சவீடு சொந்தவீடு இவைகளிலி ருந்து வலுவுபெறு வார்களானல் ஒருசமயம் நல்லபலனுண் டாகலாம் என்று முபதேசிக்கிறார்:—

सू० ॥ पापिनश्चेद्ग्रहास्तेषामुच्चत्वे सति किं फलम् ।
बलवत्वे शुभानां च फलं लभ्येत कर्हिचित् ।७१।

(ப-ரை) ग्रहा:=சூரியன் முதலிய கிரஹங்கள் पापिनश्चेत्=பாபிகளாக ஆவார்களே யானல் तेषाम्=பாபிகளான

அந்தக் கிரஹங்களுக்கு **उच्चत्वे**=உச்சமாயிருக்கும் தன்மை யானது **सति**=இருந்த போதிலும் **फलम्**=நல்ல பலன் **किम्**= எது? **शुभानाम्**=சுபக் கிரஹங்களுக்கு **बलवत्त्वे**=வலுவுபெற் றிருக்க விருந்தால் **कर्हिचित्**=சில ஸமயங்களில் **फलम्**=நல்ல பலனானது **लभ्येत**=அடையவும் படலாம்.

(கா—ம்) வராஹ மிஹிராசாரியர்—சூரியன், சனி, செவ்வாய் இவர்களையும், இவர்களுடன் சேர்ந்த புதனையும் சுவபாவ பாபர்களென்றும், மற்றக் கிரஹங்களைச் சுவபாவ சுபர்களென்றும் சொல்லி இருக்கிறார். ஆயினும் இந்தக் கிரந்தமியற்றியவரோ 3, 6, 11க்குடைய கிரஹங்களே பாபிக ளென்று சொல்லுகிறார். மேலும் கேந்திராதிபத்யம் பெற்ற குரு, சுக்கிரன், புதன் சந்திரன் இவர்களுள் குரு சுக்கிரன் இவர்கள் அதிகதோஷத்தைச்செய்வார்களென்றும், புதன் தோஷ விஷயத்தில் குரு சுக்கிரன் இவர்களைவிட ஸ்வல்பம் குறைந்தவனென்றும், புதனைவிடச் சந்திரன் தோஷவிஷ யத்தில் குறைந்தவனென்றும் அபிப்பிராயப் படுகிறார். ஆகவே வராஹமிஹிராசாரியருக்கும், இந்த ஜாதகசந்திரி கைக் காரருக்கும் கிரஹங்களைப் பாபிகளாகவும், சுபர்களாக வும் கொள்ளும் விஷயத்தில்வேற்றுமை ஏற்பட்டிருக்கிறது. ஆயினும் இந்த ஜாதகசந்திரிகை ரீதியாய் பார்க்கும் பொழு து சூரியன் முதலியகிரஹங்கள் 3, 6, 11க் குடையவர்க ளாக வாவதன் மூலம், பாபிகளாக ஆவார்களேயானால் அந் தச் சூரியன் முதலியகிரஹங்கள் உச்சத்திலோ சொந்த வீட் டிலோ இருக்கும் பொழுது வேறுசாஸ்திரங்களில் எந்தப் பலன் சொல்லப் பட்டிருக்கின்றதோ அப்பலன் அனுபவத் தில் நடைபெறுமென்று கண்டு கொள்ள வேண்டும். ஆனல்

சுபக்கிரஹங்கள் அதாவது: கேந்திரத் திரிகோணாதி பதிக ளான கிரஹங்கள் வலுவு பெற்றிருந்தால், அதாவது, உச் சவீடு, சொந்தவீடு இவைகளிலிருந்தால் சுபமான பலன் நடைபெறும் என்றும், கிரஹங்களுக்கு வலுவு என்பது குணவிஷயத்திற் போலவே தோஷ விஷயத்திலுமுண் டென்று கொள்ளுவதவசியமானதுபற்றி கேந்திரத் திரிகோ ணாதி பதிகளான கிரஹங்கள் நீசவீடு, சத்துரு வீடு, இவை களி லிருந்தால் தோஷவிஷயத்தில் வலுவுள்ளவர்களாகின்ற னரென்றும், இவர்கள்கேந்திரத் திரிகோணாதிபதிகளா யிருப் பதன் மூலம் சுபர்களாகவுமாவதால் சிலஸமயம் நல்லபலனு முண்டாகலாம் என்றும் கொள்ளல் வேண்டும். (எ—று).

## பத்து விதமான பொருத்தங்கள்.

(அ—கை) இனி பத்துவிதமான பொருத்தங்கள் சொல் லப்படுகின்றன :—

மூ० ॥ दिनं गणं च माहेन्द्रं स्त्रीदीर्घं योनिरेव च ।
राशिराश्यधिपौ वश्यं रज्जुर्नाडीति वै दश ॥१॥

கருத்துரை—மொத்தமாய் பொருத்தங்கள் 10 விதங்க ளாகும். அவைகளாவன :—

(1) தினப் பொருத்தம் (4) ஸ்திரீதீர்க்கப் பொருத்தம்.
(2) கணப் பொருத்தம் (5) யோனிப் பொருத்தம்.
[தம்
(3) மாஹேந்திரப்பொருத் (6) ராசிப்பொருத்தம்

(7) ராசியதிபதிப்பொருத்தம் (9) ரஜ்ஜுப் பொருத்தம்

(8) வசியப் பொருத்தம் (10) நாடிப் பொருத்தம்.

मू० ॥ जन्म संपद्विपत्क्षेम प्रत्यरस्साधको वधः ।
मैत्रं परममैत्रं च जन्मादीनां पुनः पुनः ॥ २ ॥

(க—ரை) ஜன்மநக்ஷத்திரம் தொடங்கி முறையே 9நக்ஷத்திரங்களுக்கும், ஜன்ம, ஸம்பத், விபத், க்ஷேமம், ப்ரத்யர:, ஸாதக:, வத:, மைத்ரம், பரமமைத்ரம் எனப் பெயர்களுண்டு இவ்விதமே அநுஜன்ம, த்ரிஜன்ம நக்ஷத்திரங்களுக்கும் கொள்ளவேண்டும். (எ—று)

मू० ॥ त्रि-पञ्चसप्तमाः पापाः द्वि-जन्मा-ऽष्टम-मध्यमाः ।
षट्-चतु-र्नवमाः श्रेष्ठास्तारकास्स्यु स्त्रिधा मताः ॥

(க—ரை) மேற்கூறிய 9 நக்ஷத்திரங்களுள் 3, 5, 7வது நக்ஷத்திரங்கள் முறையே விபத் தாரைகளாகவும், ப்ரத்யரத் தாரைகளாகவும், வதத் தாரைகளாகவுமாவதால் பாபநக்ஷத்திரங்களாகின்றன. 2, 1, 8 இந்த நக்ஷத்திரங்கள் மத்யமத் தாரைகளாகும். 6, 4, 9 இந்த நக்ஷத்திரங்கள் சிரேஷ்ட நக்ஷத்திரங்களாகின்றனவென்று சாஸ்திர மறிந்தவர்களின் தீர்மானம். (எ—று)

(அ—க்க) இவ்விதம், பெண், ஆண் இருவருடைய நக்ஷத்திரங்களையும் சுத்தத் திருக்கணித பஞ்சாங்க மூலம் நிர்ணயித்துக் கொண்டு அடியில் எழுதப்படும் முறைப்படி பொருத்தம் பார்க்கவேண்டும். அம்முறை உபதேசிக்கப் படுகிறது:—

मू० ॥ वधूनक्षत्रमारभ्य वरक्षान्तं च गण्यते ।
समतारं शुभं प्रोक्तं दिनकूटं प्रशस्यते ॥ ४ ॥

(ப—ரை) விவாஹத்திற்காகப் பொருத்தம் பார்க்கும் பொழுது **वधूनक्षत्रमारभ्य**=பெண் நக்ஷத்திரம் முதற் கொண்டு **वरक्षान्तं च**=வரனுடைய நக்ஷத்திரத்தை முடிவில் வைத்து **गण्यते**=கணக்கிடப் படுகிறது. **समतारम्**=இரட்டைப்பட்ட நக்ஷத்திரத்தையுடையதான **प्रोक्तं दिनकूटम्**=சொல்லப்பட்ட தினகூடமானது, அதாவது: தினப் பொருத்தமானது **शुभम्**=புகழப் படுகிறது.

(தா—ம்) விவாஹத்திற்காகப் பொருத்தம் பார்க்கும் பொழுது பெண்ணின் நக்ஷத்திரம் முதற்கொண்டே வரனுடைய (புருஷனுடைய) நக்ஷத்திரம் வரை எண்ணிப் பார்க்கவேண்டும். அவ்விதம் பார்த்த பொழுது ஸ்திரீ நக்ஷத்திரம் முதல் எண்ணிவந்த புருஷ நக்ஷத்திரமானது இரட்டைப்படையாக வந்தால் சிறந்தது. அதாவது: ஸ்திரீ நக்ஷத்திரம் ரோஹிணீ என்றும், புருஷ நக்ஷத்திரம் புனர்பூசம் என்றும் வைத்துக் கொள்வோம். இந்த விடத்தில் ஸ்திரீ நக்ஷத்திரம் தொடங்கி கணக்கிட்டால் புருஷ நக்ஷத்திரமானது 4வது நக்ஷத்திரமாக வருவதால் அந்தப் புருஷ நக்ஷத்திரம் இரட்டைப்பட்ட நக்ஷத்திரமாகிறது. ஆகவே இவ்விரு நக்ஷத்திரங்களுக்கும் தினப்பொருத்த மமைந்திருப்பதாயறிய வேண்டும். ஸ்திரீ நக்ஷத்திரத்தினின்றும் 2, 4, 6, 8 இந்த நக்ஷத்திரங்களே இரட்டைப்பட்ட நக்ஷத்திரங்களாகும். ஆனால் இந்தத் தினப்பொருத்தவிஷயத்தில் சிலர் புருஷ நக்ஷத்திரம் முதற்கொண்டு பார்க்கவேண்டும் என்று சொல்லுவதுடன்,

पर्यायत्रितये नवोडुपु वधूधिष्ण्यादितस्तत्फलं
मृत्युप्रीतिविपत्सुखार्तिपशुकृद्रोगप्रजाऽमित्रकृत् ।
पुंभान्तं गणयेत्तयोः परिणये वर्गो दिनाख्यस्त्वयं
पुंभादीति जगुः परे त्वथ फलं पूर्वोक्तमत्रापि च ॥

"ஜன்மம், அநுஜன்மம், த்ரிஜன்மம் என்ற மூன்று பர்யாயங்களிலும் பெண் நக்ஷத்திரம் தொடங்கி புருஷ நக்ஷத்திரம் வரை எண்ண வேண்டும். அவ்விதம் எண்ணும் பொழுது வரும் முதல் தாரையானது தம்பதிகளுக்கு மரணத்தையும், இரண்டாவது நக்ஷத்திரமானது பிரீதியையும், மூன்றாவது நக்ஷத்திரமானது விபத்தையும், நான்காவது நக்ஷத்திரமானது சுகத்தையும், ஐந்தாவது நக்ஷத்திரமானது பீடையையும், ஆறாவது நக்ஷத்திரமானது பசுவிருத்தியையும், ஏழாவது நக்ஷத்திரமானது ரோகத்தையும், எட்டாவது நக்ஷத்திரமானது பிரஜையையும், ஒன்பதாவது நக்ஷத்திரமானது சிநேஹக்குறைவையும் செய்யும். இந்த வர்க்கமானது விவாஹ விஷயத்தில் தினப் பொருத்தம் என்று சொல்லப்படும். சிலர் இப்பொருத்தத்தை புருஷ நக்ஷத்திரம் தொடங்கி, ஸ்திரீ நக்ஷத்திரம் வரை எண்ணிப்பார்க்கவேண்டும் என்கின்றனர். இவ்விதம் பார்த்த போதிலும் முன்சொல்லியபடியே தான் அதன் பலன் ஏற்படும் என்றும் சொல்லுகின்றனர்." என்ற காலாமிருதக் கிரந்தம் 124வது சுலோகத்தை அதற்கு ஆதாரமாகவும் சொல்லுகின்றனர். ஆயினும் காலப்பிரகாசிகையில்

स्त्रीजन्मतारमारभ्य गणयेद्वरजन्मभं ॥

"ஸ்திரீயின் ஜன்மநக்ஷத்திரம் முதல் வரனுடைய நக்ஷத்திரம் வரை எண்ண வேண்டும்" என்றே சொல்லப்

பட்டிருக்கிறது. ஆகவே காலாமிருதத்திலும் பர் ஜகு: "இவ்விதம் சிலர் சொல்லுகின்றனர்" என்று சொல்லியிருப்பதிலிருந்து புருஷ நக்ஷத்திரம் முதலென்னுவதென்பது சிலர் மதமே யொழிய தனது மதம் ஸ்திரீ நக்ஷத்திரம் முதல்தான் எண்ணவேண்டும் என்பது தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது. மேலும் விவாஹமானது ஸ்திரீகளுக்கு நித்யமானது பற்றி ஸ்திரீகளுக்கே விவாஹத்தில் பிரதான்யம் சொல்ல வேண்டுவதவசியமாவதாலும், ஜாதக சந்திரிகை, காலப்பிரகாசிகை முதலிய கிரந்தங்களிலும் இவ்விதமே சொல்லி இருப்பதாலும் ஸ்திரீ நக்ஷத்திரம் முதற்கொண்டு எண்ணி தினப்பொருத்தம் பார்ப்பது தான் உசிதமானதென்றே நாமும் எண்ணுகிறோம்.

ஸ்திரீ ஜன்ம நக்ஷத்திரம் முதல் 9 நக்ஷத்திரம் முடிய முதல்பர்யாயம் என்றும், அனுஜன்ம நக்ஷத்திரம் முதல் 9 நக்ஷத்திரம் முடிய இரண்டாவது பர்யாயம் என்றும் த்ரிஜன்ம நக்ஷத்திரம் முதல் 9 நக்ஷத்திரம் முடிய மூன்றாவது பர்யாயம் என்றும், சொல்லப்படும். இவற்றுள் ஸ்திரீஜன்ம நக்ஷத்திரம் முதல் 2, 4, 6, 8 இந்த நக்ஷத்திரங்களில் புருஷ நக்ஷத்திரம் வருமானால் இவ்விரு ஜாதகர் விஷயத்திலும் தினப்பொருத்த முண்டென்றும், 3, 5, 7வது நக்ஷத்திரங்களானால் தினப்பொருத்தமில்லை என்றும் ஏற்படும். உதாஹரணம் :—பெண்ணின் நக்ஷத்திரம் ரோஹிணி என்று வைத்துக் கொள்வோம்.

| 1-வது பர்யாயம் | 2-வது பர்யாயம் | 3-வது பர்யாயம் |
|---|---|---|
| ஜன்மம் | அனுஜன்மம் | த்ரிஜன்மம் |
| ரோஹிணி | ஹஸ்தம் | திருவோணம் |

| | | |
|---|---|---|
| மிருகசீர்ஷம் | சித்திரை | அவிட்டம் |
| திருவாதிரை | சுவாதி | சதயம் |
| புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி |
| ஆயில்யம் | கேட்டை | ரேவதி |
| மகம் | மூலம் | அசுவதி |
| பூரம் | பூராடம் | பரணீ |
| உத்திரம் | உத்திராடம் | கார்த்திகை |

ஆகிய இந்த 27 நக்ஷத்திரங்களும் ஜன்மானு ஜன்ம த்ரிஜன்மம் என்றமூன்று பர்யாயங்களிலுமுள்ள நக்ஷத்திரங்களாகின்றன. இவற்றுள் முதல்பரியாயத்தில் மிருகசீர்ஷம் 2வதாகவும், புனர்பூசம் 4வதாகவும் ஆயில்யம் 6வதாகவும், பூரம் 8 வதாகவும் வருகிறது. ஆகவே புருஷநக்ஷத்திரமானது, மிருகசீர்ஷம், புனர்பூசம், ஆயில்யம், பூரம் இந்த நக்ஷத்திரங்களாகவே வருமானால் ரோஹிணீ நக்ஷத்திர ஸ்திரீஜாதகத்துடன் தினப்பொருத்த முள்ளதென்றேற்படும். புருஷ நக்ஷத்திரமானது திருவாதிரை பூசம் மகம் இந்த நக்ஷத்திரமாக இருக்குமானால் தினப்பொருத்தம் கிடையாதென்று ஏற்படும். ஆனால்

पर्याये प्रथमे त्याज्याः विपत्प्रत्यरनैधनाः ।
द्वितीये त्वंशका वर्ज्यास्त्वन्ते सर्वे शुभावहाः ॥

முதல் பர்யாயத்தில் 3, 5, 7 வது நக்ஷத்திரங்களாக புருஷ நக்ஷத்திரமானது வந்தால் தினப்பொருத்தமில்லை என்றும், இரண்டாவது பர்யாயத்தில் 3, 5, 7 வதாக, அதாவது: மேற்கூறிய உதாஹரணப்படி சுவாதி, அனுஷம் மூலம் இந்த நக்ஷத்திரங்களாக புருஷநக்ஷத்திரம் வந்தால், அந்த நக்ஷத்திர

ங்களின் 3, 5, 7 வது பாதங்கள் புருஷ ஜன்ம நக்ஷத்திர பாதங்களானால் பொருந்தாது என்றும், மூன்றுவது பர்யாயத்தில் புருஷநக்ஷத்திரமானது 3, 5, 7 வது நக்ஷத்திரமாயிருந்தபோதிலும், அதாவது: மேற்கூறிய உதாஹரணப்படி சதயம், உத்திரட்டாதி அசுவதி இந்த நக்ஷத்திரங்களாகயிருந்தபோதிலும் தினப்பொருத்த முண்டென்றும் சொல்லப்படும்.

सप्तविंशतिभं त्याज्यं भिन्नराशिगतं यदि ।

என்ற வசனப்படி புருஷ நக்ஷத்திரமானது 27வது நக்ஷத்திரமாக வாகி வேறு ராசியிலுமிருந்தால் தினப்பொருத்தவிஷயத்தில் விலக்கவேண்டியதே. அதாவது: தினப்பொருத்தம் கிடையாதென்பதாம். மூன்றுவது பர்யாயத்திலும், 3, 7 வது நக்ஷத்திரமானல் விலக்கவேண்டும் எனச்சிலர் சொல்லுகின்றனர். மேலும் ரோஹிணி, திருவாதிரை, மகம், விசாகம், ஹஸ்தம், திருவோணம், ரேவதி உத்திரட்டாதி இவைகள் ஸ்திரிபுருஷர்களுக்கு ஒரே நக்ஷத்திரமானாலும், தினப்பொருத்தம் உத்தமமாகவும், உத்திரம், சித்திரை, புஷ்யம், புனர்பூசம், அசுவதி, கிருத்திகை உத்திராடம், மிருகசீர்ஷம், பூராடம் இவைகள் ஸ்திரி புருஷர்களுக்கு ஒரே நக்ஷத்திரமாகவந்தால் மத்யமமாகவும், மற்றவை பொருந்தாவென்றும் காலப்பிரகாசிகை முதலிய கிரந்தங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும்

भवनद्वययुक्तर्क्षे पूर्वं पुंसां शुभावहम्।
पश्चाद्भागस्त्वथस्त्रीणां व्यत्ययस्तु विनाशकृत् ॥

ஸ்திரீ புருஷ நக்ஷத்திரமானது மேற்கூறியபடி ஒரே நக்ஷத்திரமாயிருந்து இரண்டு ராசியிலிருக்கக்கூடியதாயிருக்கு

மானல் முந்தினராசியில் புருஷ நக்ஷத்திரபாதமும், அதற்கடுத்தராசியில் ஸ்திரீ நக்ஷத்திர பாதமுமிருந்தால் உத்தமமாகும். இதற்குமாறானவை பொருந்தாது. மேலும் ஸ்திரீ நக்ஷத்திரம் புருஷ நக்ஷத்திரம் இரண்டுமே ஒரே ராசியிலிருந்து, புருஷ நக்ஷத்திரமானது முந்தியும், ஸ்திரீ நக்ஷத்திரம் பிந்தியுமாக இருந்தால் மிக்கச் சிறந்ததாகவே ஏற்படும். ஆனல் ஸ்திரீ நக்ஷத்திரத்திற்குப் புருஷ நக்ஷத்திரமானது 27வது நக்ஷத்திரமாக வந்தபோதிலும் வேறுராசியிலுள்ள 27வது நக்ஷத்திரம் கூடாதென்றொழிய ஒரேராசியிலிருந்தால் மேலானதென்றே கொள்ளவேண்டும்.

இரண்டாவது கணப்பொருத்தம்.

மூ॰ ॥ अश्वी मृगशिरोहस्तौ स्वाती पुष्यपुनर्वसू ।
मैत्रश्रवणरेवत्य एते देवगणास्स्मृताः ॥ ५ ॥

(க-ரை) அசுவதி, மிருகசிர்ஷம், ஹஸ்தம், சுவாதி, பூசம், புனர் பூசம், அனுஷம், திருவோணம், ரேவதீ இந்த நக்ஷத்திரங்கள் தேவகணங்களாகும். (எ-று)

மூ॰ ॥ भरणी रुद्रनक्षत्रं रोहिणी चोत्तरात्रयम् ।
पूर्वात्रयं नवैतानि मानुषोऽयं गणस्स्मृतः ॥ ६ ॥

(க-ரை) பரணீ, திருவாதிரை, ரோஹிணீ, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, பூரம், பூராடம், பூரட்டாதி ஆகிய இவ்வொன்பது நக்ஷத்திரங்களும், மானுஷ கணமாகும். (எ-று)

மூ॰ ॥ चित्राश्लेषामखामूलविशाखशततारकाः ।
धनिष्ठा कृत्तिका ज्येष्ठा राक्षसोयं गणस्मृतः ॥

(க-ரை) சித்திரை, ஆயில்யம், மகம், மூலம், விசாகம், சதயம், அவிட்டம், கிருத்திகை, கேட்டை ஆகிய 9 நக்ஷத்திரங்களும் ராக்ஷஸகணங்களாகும். (எ-று)

मू ॥ स्त्रीराक्षसो न कर्तव्यः कर्तव्यो नरराक्षसः ।
स्त्रीराक्षसे न दोषोऽस्ति त्रयोदशदिनात्परम् ॥

(க-ரை) பெண் நக்ஷத்திரம் ராக்ஷஸ கணமாக இருந்து புருஷநக்ஷத்திரம் தேவகணமாகயிருந்தால் கணப்பொருத்தமில்லை. புருஷநக்ஷத்திரம் ராக்ஷஸ கணமாகவும் பெண் நக்ஷத்திரம் தேவ கணமாகவு மானால் கணப்பொருத்தமுண்டு. பெண் நக்ஷத்திரம் முதல் புருஷநக்ஷத்திரம் 13 நக்ஷத்திரங்களுக்கு மேலிருந்தால் ஸ்திரீநக்ஷத்திரம் ராக்ஷஸகணமானாலும் கணப்பொருத்தமுண்டு. (எ-று)

### மூன்றாவது மாஹேந்திரப்பொருத்தம்.

मू० ॥ वध्वादीनां चतुस्सप्त दशमं च त्रयोदश ।
षोडशैकोनविंशत्यो द्वाविंशत्पञ्चविंशतिः ॥
एते माहेन्द्रयोगास्स्युर्दंपत्योस्संपदस्स्मृताः ॥ १० ॥

(க—ரை) பெண் நக்ஷத்திரம் முதல் ஆண் நக்ஷத்திரமானது 4, 7, 10, 13, 16, 19, 22, 25 வதாக வந்தால் மாஹேந்திரப் பொருத்தமுண்டு. இந்தப் பொருத்தம் தம்பதிகளுக்கு சம்பத்தைத் தரும்.

### நான்காவது ஸ்திரீதீர்க்கப் பொருத்தம்.

मू० ॥ कन्यादिवरऋक्षान्तं पर्यायस्तत्र गण्यते ।
तत्र त्रयोदशादूर्ध्वं स्त्रीदीर्घं बहुळं शुभम् ॥

(க—ரை) கன்னிகையின் நக்ஷத்திரம் தொடங்கி வரனுடைய நக்ஷத்திரம் முடிய எண்ணிப் பார்க்கவேண்டும். அவ்விதம் பார்க்குங்கால் கன்னிகையின் நக்ஷத்திரத்தினின்றும் பதிமூன்றாவது நக்ஷத்திரத்திற்கு மேல் புருஷ நக்ஷத்திரமிருந்தால் ஸ்திரீ தீர்க்கப் பொருத்த முண்டு. ஸ்திரீ தீர்க்கப் பொருத்தமானது விசேஷமாகச் சுபத்தைத்தரும். केचित्सप्तदिनादूर्ध्वं स्त्रीदीर्घमिति सूरयः। என்று காலப்பிரகாசிகையில் கூறியபடி சிலர் 7வது நக்ஷத்திரத்திற்குமேல் புருஷ நக்ஷத்திரமிருந்தாலும் ஸ்திரீதீர்க்கப் பொருத்தமுண்டு என்கின்றனர். (எ—று)

## ஐந்தாவது யோனிப் பொருத்தம்.

मू० ॥ अश्वेभाजभुजंगभोगिशुनका मार्जारवस्ताह्वयाः
मार्जारेन्दुरुमूषिकोष्ट्रमहिषव्याघ्रा महिष्यस्तथा ।
शार्दूलो हरिणः कुरङ्गशुनकौ शाखामृगो गौः कपि
र्व्यश्वौ नरगोगजाश्च कथिता भानां क्रमाद्योनयः

(க—ரை) அசுவதி முதல் 27 நக்ஷத்திரங்களுக்கும் முறையே அடியில் எழுதப்படுவன யோனிகளென்று அறிய வேண்டும்.

| நக்ஷத்திரம் | யோனி | நக்ஷத்திரம் | யோனி |
|---|---|---|---|
| அசுவதீ | குதிரை | திருவாதிரை | நாய் |
| பரணீ | யானை | புனர்பூசம் | பூனை |
| கார்த்திகை | ஆடு | பூசம் | செம்மறியாடு |
| ரோஹிணீ | பாம்பு | ஆயில்யம் | பூனை |
| மிருகசீர்ஷம் | பாம்பு | மகம் | எலி |

| | | | |
|---|---|---|---|
| பூரம் | பெருச்சாளி | பூராடம் | குரங்கு |
| உத்திரம் | ஒட்டகை | உத்திராடம் | பசு |
| ஹஸ்தம் | எருது | திருவோணம் | குரங்கு |
| சித்திரை | புலி | அவிட்டம் | மனிதப்பெண் |
| சுவாதி | எருமை | சதயம் | குதிரை |
| விசாகம் | புலி | பூரட்டாதி | மனித ஆண் |
| அனுஷம் | மான் | உத்திரட்டாதி | பசு |
| கேட்டை | மான் | ரேவதி | யானை |
| மூலம் | நாய் | | |

மூ० ॥ गोव्याघ्रं गज सिंहवाजिमहिषं श्वैणं च बभ्रूरगं
वैरं वानरमेषकं च सुमहत्तद्वद्विडालेन्दुरू !
लोकानां व्यवहारतोऽन्यदपि च ज्ञात्वा प्रयत्नादिदं
दंपत्योर्नृपभृत्ययोरपि सदा वर्ज्याःशुभस्यार्थिभिः॥

(க—ரை) பசு புலி, யானை சிம்மம், குதிரை எருமை, நாய் மான், கிரி பாம்பு, குரங்கு ஆடு, பூனை எலி இவைகட்கு ஒன்றுக்கொன்று அதிகம் வைரமுண்டு. லோகவியவஹாரத்தாலும் மற்றுமுள்ளதையு மறிந்துகொண்டு தம்பதிகளுக்கும், அரசர்களுக்கும் சேவகர்களுக்கும் சுபத்தில் விருப்பமுள்ளவர்களால் வைரயோனிகள் விலக்கத்தக்கன.

மூ० ॥ एकयोनौ तु संपत्तिर्दंपत्योस्संगमं यथा ।
भिन्नयोनिषु मध्यं स्यादरिभावो नचैतयोः ॥ १३ ॥

(க—ரை) தம்பதிகளின் நக்ஷத்திரங்கள் ஒரேயோனியைச் சேர்ந்தவைகளானால் சம்பத்துண்டு. இவ்விருவர்களின் நக்ஷத்திரயோனிகள் விரோதமுள்ளவைகளாகவிருந்

தால் யோனிப்பொருத்தமில்லை. விரோதமின்றி வெவ்வேறு யோனியைச் சேர்ந்தவைகளா யிருந்தால் மத்யம மாகும்.

## ஆருவது ராசிப் பொருத்தம்.

மூ॥ द्विद्वादशे भवेन्मृत्युरायुर्द्वादशके द्विके ।
त्रिके चैकादशे दुःखं सुखमेकादशत्रिके ॥ १५ ॥
चतुर्थदशमे वैरं प्रीतिर्दशचतुर्थके ।
पञ्चमे नववैधव्यं नवपञ्च पतिव्रता ॥ १६ ॥
षष्ठाऽष्टमे पुत्रनाशो बहुपुत्राऽष्टषष्ठके ।
सप्तमे च शुभं प्रोक्तं राशिकूटविधिः क्रमात् ॥१७॥

(க—ரை) ஜனன காலத்தில் சந்திரன் எந்த வீட்டிலிருக்கின்றனோ அது 'ராசி' எனப்படும். இவ்விதம் ஆண், பெண் ஜாதகத்தில் சந்திரனிருக்கும் ராசியை முதலிற் கண்டறிந்து கொள்ள வேண்டும். இவ்விதம் கண்டறிந்த பிறகு பெண் ராசி ஆண் ராசிக்கு 2வதாகவும் ஆண் ராசி பெண்ராசிக்கு 12வதாகவும் வருமானல் மரணத்தைத் தரும். பெண்ராசி 12வதாகவும், ஆண்ராசி 2வதாகவும் வந்தால் ஆயுள் பெருக்குண்டு. பெண்ராசி மூன்ருவதாகவும், ஆண்ராசி 11வதாகவும் வருமானல் துக்க முண்டாகும். பெண் ராசி 11வதாகவும், ஆண்ராசி 3வதாகவும் வருமானல் சுகத்தைத் தரும். பெண்ராசி 4வதாகவும், ஆண்ராசி 10வதாகவும் வருமானல் வைரமுண்டாகும். பெண்ராசி 10வதாகவும், ஆண்ராசி 4வதாகவும் வருமானல் பிரீதியுண்டாகும். பெண்ராசி 5வதாகவும், ஆண்ராசி 9வதாகவும் வருமானல் வைதவ்யமுண்டாகும். பெண்ராசி 9வதாகவும், ஆண்ராசி 5வதாகவும்

வருமானல் பாதிவிரத்யம் பெருகும். பெண்ராசி 6வதாகவும், ஆண்ராசி 8வதாகவும் வருமானல் புத்திரநாசத்தைத் தரும். பெண்ராசி 8வதாகவும், ஆண்ராசி 6வதாகவும் வருமானல் அதிகம் புத்திரர்களுண்டு. பெண்ணுக்கு 7வதான ராசியில் புருஷனுக்குச் சந்திரனிருந்தால் அது விசேஷித்து சுபத்தைச் செய்யும். ராசிப்பொருத்தம் பார்க்கும் முறை இவ்விதமாகும்.

## ஏழாவது ராச்யதிபதிப்பொருத்தம்.

மூ ॥ मेषवृश्चिकयोर्भौमस्तुलावृषभयोस्सितः ।
धनुर्मीनकयोर्मन्त्री कन्यामिथुनयोर्बुधः ॥ १८ ॥
सिंहस्याधिपतिस्सूर्यः कर्कटस्याधिपश्शशी ।
नक्रकुंभकयोर्मन्दः राशिनाथा इमे स्मृताः ॥ १९ ॥

(சு-ரை) மேஷம் விருச்சிகம் இவைகட்குச்செவ்வாயும், துலாம் விருஷபம் இவைகட்குச் சுக்கிரனும், தனுஸ் மீனம் இவைகட்குக் குருவும், மிதுனம் கன்னி இவைகட்குப் புதனும், சிங்கத்திற்குச் சூரியனும், கடகத்திற்குச் சந்திரனும், மகரம் கும்பம் இவைகட்குச் சனியும் அதிபர்களாவர்.(எ-று)

மூ ॥ शत्रू मन्दसितौ समश्च शशिजो मित्राणि शेषा रवेः
तीक्ष्णांशुर्हिमरश्मिजश्च सुहृदौ शेषास्समाश्शीतगोः
जीवेन्दूष्णकराः कुजस्य सुहृदो ज्ञोऽरिस्सिताकीं समौ
मित्रे सूर्यसितौ बुधस्य हिमगुश्शत्रुस्समाश्चापरे २०

सूरेस्सौम्यसितावरी रविसुतो मध्योऽपरे त्वन्यथा
सौम्यार्की सुहृदौ समौ कुजगुरू शुक्रस्य शेषावरी ।
शुक्रज्ञौ सुहृदौ समस्सुरगुरुस्सौरस्य चान्येरयो
ये प्रोक्तास्स्वत्रिकोणभादिषु पुनस्तेऽमी मया कीर्तिताः॥

(க-ரை) ஸூரியனுக்கு—சனி சுக்கிரன் இவர்கள் சத்துருக்கள். புதன் சமன். மற்றவர்கள் மித்திரர்கள். சந்திரனுக்கு—சூரியன் புதன் இவர்கள் மித்திரர்கள். பாக்கியுள்ள கிரஹங்கள் சமர்கள். செவ்வாய்க்கு—குரு சந்திரன் சூரியன் இவர்கள் மித்திரர்கள், புதன் சத்துரு. சுக்கிரன், சனி இவர்கள் சமர்கள். புதனுக்கு—சனி மித்திரன். சந்திரன் சத்துரு. மற்றவர்கள் சமர்கள். குருவுக்கு—புதன், சுக்கிரன் இவர்கள் சத்துருக்கள். சனி சமன். மற்றவர்கள் மித்திரர்கள். சுக்கிரனுக்கு—சனி, புதன் மித்திரர்கள். செவ்வாய் குரு இவர்கள் சமர்கள். மற்றவர்கள் சத்துருக்கள். சனிக்கு—சுக்கிரன் புதன் இவர்கள் மித்திரர்கள். குரு சமன். மற்றவர்கள் சத்துருக்கள். என்று அறியவும். மற்ற விஷயங்களைப்பற்றி நமது பிருஹத் ஜாதக மொழிபெயர்ப்பில் காண்க. (எ-று)

मू० ॥ उत्तमो मित्रवर्गस्तु समवर्गस्तु मध्यमः ।
अधमश्शत्रुमित्रस्तु वैरिवर्गो विनाशकृत् ॥ २२॥

(க-ரை) ஸ்திரீ புருஷ ராசியதிபர்கள் ஒருவருக்கொருவர் மித்திரர்களானால் உத்தமம். சமர்களானால் மத்யமம். சத்துரு மித்திரர்களாயிருந்தால் அதமம். ஒருவருக்கொருவர் சத்துருவானால் நாசத்தைக் தருவர். (எ-று)

## எட்டாவது வசியப்பொருத்தம்.

மூ० ॥ मेषस्य वश्यौ सिंहाली वृषभस्य च कर्कटः ।
यमस्य कन्यका वश्या कर्किणश्चापवृश्चिकौ ॥२३॥
तुला सिंहस्य वश्या स्यात्कन्यायायममत्स्यकौ ।
मृगकन्येतु जूकस्य कर्कटो वृश्चिकस्य तु ॥ २४ ॥
मीनश्चापस्य वश्यस्स्यान्मकरो मीनवश्यकृत् ।
कुंभस्य कन्यका वश्या मेषो मीनस्य वश्यकृत् ॥

(க-ரை) மேஷத்திற்கு—சிங்கமும் விருச்சிகமும், விருஷபத்திற்கு—கடகமும், மிதுனத்திற்கு—கன்னியும், கடகத்திற்கு—தனுஸும் விருச்சிகமும், சிங்கத்திற்கு—துலாமும், கன்னிக்கு—மிதுனமும், மீனமும், துலாத்திற்கு—மகரமும், கன்னியும், விருச்சிகத்திற்கு—கடகமும், தனுஸுக்கு—மீனமும், மகரத்திற்கு—மீனமும், கும்பத்திற்குக்—கன்னியும், மீனத்திற்கு—மேஷமும் வசியராசிகளாகும். (எ-று)

மூ० ॥ एवं वश्यसमायोगे दंपत्योः प्रीतिरुत्तमा ।
वश्याभावे तु दंपत्योर्विवाहः कलहप्रदः ॥ २६ ॥

(க-ரை) முந்தின சுலோகத்திற் சொல்லியபடி பெண் ராசிக்குப் புருஷராசியும், புருஷராசிக்குப் பெண்ராசியும் வசியமாயிருந்தால் தம்பதிகளுக்கு மேலான பிரீதி உண்டாகும். இதிலிருந்து இரண்டுராசிகளுள் ஒருராசி வசியமாயிருந்தால் தம்பதிகளுக்குச் சாமான்யமாய் பிரீதியுண்டாகும் என்று சேர்த்துக் கொள்ள வேண்டும். இரண்டுமே வசியமாக இல்லாவிடில் நடைபெறும் விவாஹமானது தம்பதிகளுக்குக் [illegible] (எ-று)

என்பதாவது ரஜ்ஜுப்பொருத்தம்.

மூ॥ विधुबिंबत्रयं कृत्वा तिर्यग्रेखाचतुष्टयम् ।
अश्विन्यादीनि चक्षाणि वामपार्श्वादि विन्यसेत्॥
गळोदरकटीपादरेखास्स्युर्यदि संस्पृशेत् ॥
रेखैक्येसं भवेन्नाशो भिन्नरेखासु शोभनः ।.२८॥
वैधव्यं गळरेखायां क्रोडरेखाऽनपत्यदा ।
दारिद्र्यदा कटीरेखा पादरेखाऽटनप्रदा ॥ २९ ॥
मुखे पतिं गळे कन्यां क्रोडे तु तनुजान् हरेत् ।
दारिद्र्यदा भवेत्कट्यां पादे च भ्रमणं भवेत् ३०

(க-ரை) மூன்று சந்திர மண்டலத்தை எழுதிக்கொண்டு அவற்றின் நடுவில் குறுக்காக நான்கு கோடுகளைக் கிழித்துக் கொண்டு அக்கோடுகள் ஒவ்வொன்றையும் அடிமுதல் கால், துடை, இடுப்பு, கழுத்து, தலை இவைகளாகக் கற்பித்துக்கொண்டு இடது பக்கம் தொடங்கி அசுவதி முதல் ரேவதி வரையுள்ள 27 நக்ஷத்திரங்களையும் எழுதிக் கொள்ளவேண்டும். இவ்விதம் எழுதிப் பார்க்கும் பொழுது பெண், ஆண் இவர்களுடைய நக்ஷத்திரங்கள் ஒரேகோட்டில் வருமானால் நாசம் என்றும், வெவ்வேறு கோட்டில் வருமானால் மிக்க மங்களமென்றும், இருநக்ஷத்திரங்களும் தலையிலுள்ள கோட்டில் வருமானால் புருஷனைக் கொல்லுமென்றும், கழுத்திலுள்ள கோட்டில் வருமானால் பெண்ணைக் கொல்லுமென்றும், இடுப்புக் கோட்டில் வந்தால் குழந்தைகளை நாசமாக்கும் என்றும் துடையிலுள்ள கோட்டில் வந்தால் ஏழ்மை யுண்டாகும் என்றும், பாதக்கோட்டில் வருமானால் வெளியில் அலைச்சலைக் கொடுக்கும் என்றும் கண்டு கொள்ளவேண்டும்.

ரஜ்ஜுப்பொருத்தம் பார்க்கும் விதம் பின்வருமாறு.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தலை | | மிரு | | சித்தி | | அவிட் | |
| கழுத்து | ரோகி | திருவா | அஸ்த | சுவா | திருவோ | சதய | |
| கடி | கார்த் | புனர் | உத்தி | விசா | உத்திரா | பூரட் | |
| தொடை | பரணி | பூசம் | பூரா | அனு | பூரா | உத்திரட் | |
| கால் | அசு | ஆயில் | மகம் | கேட்டை | மூல | ரேவதி | |

## பத்தாவது வேதைப் பொருத்தம்

மூ० ॥ अश्वीन्द्रौ यममैत्रभे हरिहरौ शूर्पाऽनलौ वायवजौ
मूलाही पितृपूषणौ गुरुजले देवप्रसूत्रिंश्वभे ।
बुध्न्यर्क्षार्यमणौ दिनेशवरुणौ आद्रक्षभाग्ये मिथो
वेधानाहेति योगऋक्षयुगळं वस्वीन्दुचित्रात्रयम् ॥
जन्मर्क्षवेधे कथितेऽत्रजाते
युक्तोपि वश्यादिगुणे बलिष्ठैः ।
पतिं च कन्यां च समूलघातं
निहन्ति षष्ठाऽष्टमराशियोगः ॥ ३२ ॥

(க-ரை) அசுவதீ கேட்டை இரண்டிற்கும், பரணி அனுஷம் இரண்டிற்கும், திருவோணம் திருவாதிரை இரண்டிற்கும், கார்த்திகை விசாகம் இரண்டிற்கும், ஸ்வாதீ ரோஹிணீ இரண்டிற்கும், மூலம் ஆயில்யம் இரண்டிற்கும், மகம் ரேவதீ இரண்டிற்கும், பூசம் பூராடம் இரண்டிற்கும், புனர்பூசம் உத்திராடம் இரண்டிற்கும், உத்திரம், பூரட்டாதி இரண்டிற்கும், ஹஸ்தம் சதயம் இரண்டிற்கும், உத்திரட்டாதி பூரம் இரண்டிற்கும், ஒன்றுக்கொன்று வேதைகளுண்டு. மிருகசீர்ஷம் சித்திரை அவிட்டம் இவைகளும் வேதையுள்ள நக்ஷத்திரங்களேயாகும். ஆகவே ஆண் பெண் நக்ஷத்திரங்கள் ஒன்றுக்கொன்று வேதையில்லாதிருந்தால் மேற்கூறிய வேதைப்பொருத்த மிருப்பதாக வேற்படும். வேதைப்பொருத்த மொன்றில்லாது வசியம் முதலிய வனு வான வேறு பொருத்தங்களிருந்த போதிலும், கன்னிகையையும், வரனையும் அடியோடு அழித்து விடுகிறது. ஆகவே

வேதைப் பொருத்தத்தைச் சாவதானமாய்க் கண்டறிந்து விவாஹம் செய்தல் வேண்டுமென்றேற்பட்டது. (எ-று)

## பதினொன்றாவது நாடிப்பொருத்தம்.

मू० ॥ कृत्तिका रोहिणी स्वाती मखाऽऽश्लेषा च रेवती ।
श्रवणं चोत्तराषाढा विशाखावामनाडिकाः ॥३३॥
पूर्वफल्गुनिका चित्रा धनिष्ठा भरणी मृगः ।
पूर्वाषाढाऽनुराधा च तिष्योऽहिर्बुध्न्य एव च ।
मध्यनाडीगणाः प्रोक्ताः विवाहे क्लेशदायकाः ॥
पूर्वाभाद्रपदा मूला ज्येष्ठहस्तौ पुनर्वसुः ।
अश्विन्यार्द्रा शतभिषगुत्तरा फल्गुनीगणाः ।
मध्यनाडी पतिं हन्ति पार्श्वनाडी तु कन्यकाम् ।
पार्श्वनाडी सदा चिन्त्या दंपत्योरशुभमिच्छता ॥

(க-ரை) கார்த்திகை, ரோஹிணி, சுவாதி, மகம், ஆயில்யம், ரேவதி, திருவோணம், உத்திராடம், விசாகம் இந்த 9நக்ஷத்திரங்களும் வாம பார்ச்வ நாடியுள்ளவைகளாகவும், பூசம், சித்திரை, அவிட்டம், பரணி, மிருகசிர்ஷம், பூராடம், அனுஷம், பூசம், உத்திரட்டாதி இந்த 9நக்ஷத்திரங்களும் மத்யநாடியுள்ளவைகளாகவுமாகும். பூரட்டாதி, மூலம், கேட்டை, ஹஸ்தம், புனர்பூசம், அசுவதி, திருவாதிரை, சதயம், உத்திரம் இந்த 9நக்ஷத்திரங்களும் வலது பார்ச்வநாடியுள்ளவைகளாகும். ஆண் பெண் நக்ஷத்திரங்கள் மத்யநாடியிலிருந்தால் பதியைக் கொன்றுவிடும். பார்ச்வ நாடியானது கன்னிகையைக் கொல்லும். இதிலிருந்து வது வர நக்ஷத்திரங்கள் வெவ்வேறு நாடிகளிலிருந்தால் எவ்வித தோஷமுமில்லை என்றேற்படுகிறது. தம்பதிகளுக்குச்

சுபத்தை விரும்புகின்றவர்கள் பார்ச்வநாடியைக் கவனிக்க வேண்டியது மிக்க முக்கியமானது. நமது தேசத்தில் பெரும்பாலும் இந்த நாடிப்பொருத்தத்தை அவ்வளவு கவனிப்பதில்லை யாயினும், சாஸ்திரங்களைநம்பி மற்றப் பொருத்தங்களைப் பார்க்கும் பொழுது இதையும் கவனித்தறிந்து செய்வதுதான் முக்கியமானது.

பொருத்தங்கள் முற்றிற்று.

## ராசியின் குணவிசாரம்.

மூ० ॥ राश्योरेकाधिपत्ये अधिपत्योर्मित्रत्वे पञ्चगुणाः, समत्वशत्रुत्वे अर्धगुणाः, समत्वमित्रत्वे चत्वारः, शत्रुमित्रत्वे एकः, द्वयोस्समत्वे त्रयः, द्वयोश्शत्रुत्वे गुणाभावः ॥

(க—ரை) பெண், ஆண் இரண்டு ராசிகளுக்கும் அதிபதியொருவனுயிருந்தாலும், இரண்டு ராச்யதிபர்களும் ஒருவருக் கொருவர் மித்திரர்களாயிருந்தாலும் 5 குணங்களுண்டு. இரண்டு ராச்யதிபர்களுள் ஒருவர் சமனாகவும், மற்றவர் சத்துரு வாகவுமிருந்தால் பாதி குணமுண்டு. ஒருவன் சமனாகவும், மற்றவன் மித்திரனுகவு மிருந்தால் 4 குணங்களுண்டு. ஒருவன் சத்துருவாகவும் மற்றொருவன் மித்திரனுகவுமிருந்தால் ஒருகுணமுண்டு. இருவருமே சமர்களாயிருந்தால் 3 குணங்களுண்டு. இருவருமே சத்துருவாக இருந்தால் எவ்விதகுணமுமில்லை. ஆகவே ராச்யதிபர்கள் ஒருவருக் கொருவர் சத்துருவாக இருந்தால் கூடாதென்றேற்பட்டது. (எ—று.)

## 2. கணத்தின் குணவிசாரம்.

மூ० ॥ गणैक्ये षड्गुणाः, पुंस्त्रियोः देवमानुषगणत्वे षड्गुणाः, स्त्रीपुरुषयोः देवमानुषगणत्वे पञ्चगुणाः, पुंस्त्रियोः राक्षसदेवगणत्वे एकः, स्त्रीपुरुषयोः राक्षसदेवगणत्वे मानुष्य राक्षसगणत्वे च गुणाभावएव॥

(க—ரை) கன்னிகைக்கும் வரனுக்கும் ஒரேகணமானல் 6 குணம். புருஷன் தேவகணமாகவும், கன்னிகை மனுஷ்யகணமாகவுமானல் 6 குணம். கன்னிகை தேவகணமாகவும், புருஷன் ராக்ஷஸகணமாகவுமிருந்தால் 5 குணம். புருஷன் ராக்ஷஸ கணமாகவும், கன்னிகைதேவகணமாகவும் இருந்தால் 1 குணம். கன்னிகை ராக்ஷஸகணமாகவும் புருஷன் தேவகணமாகவுமிருந்தாலும், மனுஷ்ய ராக்ஷஸ கணமானலும் குணம் எதுவுமில்லை. (எ—று)

## 3. வது ராசியதிபதியின் குணவிசாரம்.

(மூ०) राशिकूटे सत्कूटे सप्तगुणाः । दुष्कूटे, ग्रहमैत्रे समत्वे च चत्वारः । अन्यथा एकः । चरणैक्ये गुणाभावः ।

(க—ரை) ஸ்திரீ புருஷ ராசியதிபர்கள் சுபக்கிரஹங்களானல் 7 குணம். குரூரக் கிரஹங்களாயிருந்தாலும், மித்திரர்களாகவும், சமர்களாகவும் இருந்தாலும், 4 குணம். இதற்கு மாருகயிருந்தால் 1 குணம். இரண்டு நக்ஷத்திரபாதங்களும் ஒன்ருக யிருந்தால் எவ்வித குணமு மில்லை (எ—று)

## 4. வது நாடீகுணவிசாரம்.

**(மூ॰) नाड्यैक्ये मृत्युः, नाडीभेदे अष्टौ गुणाः, तस्मान्नाड्यैक्यं वर्जनीयम् ॥**

(க—ரை) இருநாடிகளும் ஒன்றானால் மரணம். வெவ்வேறு நாடிகளாக யிருந்தால் 8 குணம். ஆனது பற்றி இருநாடிகளும் ஒன்றாயிருந்தால் நாடீப் பொருத்தமில்லாமைபற்றி விலக்கவேண்டியதே. (எ—று)

**(மூ॰) अत्र वर्णकूटयोनिकूटादीनामल्पगुणत्वात् विवाहघटन उपयोगाभावाच्च स्वरूपं नोक्तम् ॥**

(க-ரை) இவ்விடத்தில் வர்ணகூடம், யோனிகூடம், முதலியவற்றிற்குக் குணமே அற்பமாகையாலும், விவாஹப் பொருத்தத்திலுபயோகப்படாமைபற்றியும், அவற்றின் ஸ்வரூபம் சொல்லப்படவில்லை. (எ—று)

**மூ॰। आहत्य सर्वगुणमेळनेन विंशतिगुणसंभवे मध्यमं भवति। विंशत्यधिकगुणत्वे शुभम्। विंशतिन्यूनत्वेत्वशुभं भवति ॥**

(க—ரை) மோத்தம் எல்லாகுணங்களும் சேர்ந்து 20 குணம் ஏற்படுமானல் பொருத்தம் மத்யமமாகும். 20க்கு மேற்பட்டால் சுபமானபொருத்தமாகும். 20க்கு க்குறைவுபட்டால் அசுபம். அதாவது: பொருத்தமில்லை என்றே ஏற்படும் (எ—று)

(அ—கை) தினப்பொருத்தம் முதலியவற்றாலுண்டாகும் பலன் சொல்லப்படுகின்றது.

மூ०॥ दीर्घायुर्दिनसंज्ञकस्तनयपौत्रासिस्तु - माहेन्द्रतः
स्त्रीदीर्घात्खलु मङ्गलाप्तिरनिशं संपत्स्थिरा योनितः
अन्योन्यं रमणीयता तु गणतस्तद्वन्मनोहारिता
दंपत्योर्वयसाऽनुकूलत इदं प्रोक्तं फलं किंच न ॥

(க—ரை) தினப்பொருத்த மானது நீண்டவாயுளைத் தரும். மாஹேந்திரப் பொருத்தமானது புத்திரன் பேரன் இவர்களைத் தரும். ஸ்திரீதீர்க்கப் பொருத்தத்தால் எப்பொழுதும் மங்களப்பிராப்தி யுண்டாகும். யோனிப்பொருத்தமானது நிலைத்த ஸம்பத்தைத் தரும். கணப்பொருத்தத்தால் ஒருவருக்கொருவர் அழகு மேலிட்டோங்குவதுடன் தம்பதிகளுக்கு வயதினாலும் அனுகூல நடத்தையாலும் மனத்திற்குத் திருப்தியை யுண்டாக்கும் எனப் பொருத்தவிஷயமாகக் கொஞ்சம் பலன் சொல்லப்பட்டிருக்கிறது. (எ—று)

மூ० ॥ यस्यां मनस्समायुक्तं तामेव विवहेद्बुधः ।
सर्वानुगुणलाभेभ्यो मनोऽनुगुणताऽधिका ॥

(க—ரை) எந்தப் பெண்ணிடத்தில் மனது தனக்குத் தானே பொருந்துகிறதோ அவளையே புத்திசாலியான புருஷன் விவாஹம் செய்து கொள்ள வேண்டும். இங்கு சொல்லிய எல்லாவித குணலாபங்களைக்காட்டிலும் மனத்தினுண்டாகும் ஆனுகுண்யமானது மேலானது. இவ்விதம் சொல்லியதைக் கொண்டு பொருத்தம் பார்ப்பதைவிட மனப்பொருத்தமே போதுமானது என்று சிலர் எண்ணக்கூடும். அவ்விதம் என்னுவது தவறாகும். ஏனெனில் இவ்விதம் ஆசி

ரியர் 11 விதப் பொருத்தங்களேயும் அவற்றின் மூலமேற் படும் குணங்களேயும் இன்னவென உபதேசித்திருப்பதில், ஒருபெண்ணுக்கு மொத்தம் 20 குணங்களுக்கு மேலேயே இருந்தபோதிலும் அவளிடத்தில் வரனுடைய மனம் பற்ரு விடில் அவளே மணத்தல் கூடாதென்றும், 20 குணங்களு க்குக் குறைவாகவே இருந்தபோதிலும் வரனுடைய மனது அவளிடத்தில் ரமிக்குமானல் மற்றெல்லாப் பொருத்தங் களின் குறைவிருந்தபோதிலும் மனப்பொருத்தத்தின் வலு வையும் சேர்த்துப்பார்க்கும் பொழுது அவளே எவ்வித ஆக்ஷேபமுமின்றி மணந்து கொள்ளலாம் என்றும் கருத்துக் கொண்டிருப்பதாக ஏற்படும். இல்லேயேல் இவ்வளவு பொரு த்தங்களேயும் அவர் சொல்லவேண்டிய அவசியமே ஏற்படுவ தற்கில்லே. ஆகவே பொருத்தம் பார்ப்பதுடன் மனப்பொரு த்தமும் கவனிக்கவேண்டியது அவசியம் என்றே இதனல் பெறப்பட்டது (எ—று)

मू० ॥ एकाधिपत्ये मैत्रे वा समसप्तकएव वा ।
रज्जुवेधगणैर्दोषो राशिदोषो न विद्यते ॥

(க—ரை) பெண் ஆண் இருவருடையாாச்யதிபன் ஒரு வனகவோ, அல்லது மித்திரர்களாகவோ, இருவரின் ராசி ஸமஸப்தகபாகவோ, அதாவது: ஸ்திரீராசியில் சந்திர னிருக்குமிடத்திற்கு நேர் 7வது ராசியில் புருஷசந்திர ராசியிருக்கவோ நேருமானல் ரஜ்ஜு, வேதை, கணம் முத லியவைகளின் தோஷமும், ராசிதோஷமும் கிடையா.

## செவ்வாய் தோஷமும், அதன் பரிஹாரமும்

ஸூ० ॥ धने व्यये च पाताळे जामित्रे चाष्टमे कुजे ।
स्त्रीणां भर्तृविनाशस्स्यात्भर्तॄणां दारनाशनम् ॥

(க-ரை) ஜனனகாலத்தில் ஸ்த்ரீஜாதகத்தில் 2, 12, 4,7, 8,மிடங்களில் செவ்வாயிருந்தால் பர்த்திருநாசமும், மேற்கூறியபடி புருஷஜாதகத்தில் செவ்வாயிருந்தால் ஸ்திரிநாசமும் உண்டாகும். (எ-று)

ஸூ० ॥ लग्नेन्दुशुक्राद्दुस्थाने यद्यस्ति क्षितिसंभवः ।
तद्दशापाकसमये दोषमाहुर्मनीषिणः ॥

(க-ரை) ஜன்மலக்கினம், சந்திரலக்கினம், சுக்கிரனிருக்குமிடம் இவற்றிர்க்கு 2,4,7,8,12மிடங்களில் செவ்வாயிருந்தால் செவ்வாயினுடைய தசை புக்தி இவைகள் நடக்கும்பொழுது மேற்கூறிய தோஷம் நடைபெறுமெனச் சோதிடவித்வான்கள் உபதேசிக்கின்றனர். (எ-று)

ஸூ० ॥ दंपत्योर्जन्मकाले व्ययधनहिबुके सप्तमे लग्नरंध्रे-
लग्नाच्चन्द्राच्च शुक्रादपि भवति यदा भूमिपुत्रोद्वयोर्वै
तत्साम्यात्पुत्रमित्रप्रचुरधनपती दंपती दीर्घकालं
जीवेतामेकहानात्भवतिमृतिरितिप्राहुरत्रात्रिमुख्याः

(க-ரை) தம்பதிகளின் ஜன்மகாலத்தில், ஜன்மலக்கினம், சந்திரலக்கினம், சுக்கிரனிருக்குமிடம் ஆகிய இந்த ஸ்தானங்களைக் காட்டிலும், 0-2-4-7-8-12 ஆகிய இந்த 5விடங்களில், ஸ்திரீ புருஷன் ஆகிய இருவர் ஜாதகத்திலும் செவ்வாயிருந்

தால் இரு ஜாதகத்திலும் செவ்வாய் தோஷமானது ஒத்து வருவதன் மூலம் செவ்வாய்தோஷ ஸாம்யத்தையடைந்த தம்பதிகள், புத்திரன், மித்திரன், ஏராளமான தனம் இவைகளுக்குப் பதியாக (இவற்றை யடைந்தவர்களாக) வாகி நீண்ட காலம் உயிருடன் வாழ்வார்கள். தம்பதிகளின் ஜாதகங்களுள் ஒருவர் ஜாதகத்தில் மேற்கூறியபடி செவ்வாயிருந்து, மற்றவர் ஜாதகத்தில் மேற்கூறியபடி செவ்வா யில்லாதிருந்தால், அங்காரக தோஷமில்லாதவர்க்கு மரணமுண்டாகின்றதென இவ்விஷயத்தில் அத்திரி முதலிய மஹாருஷிகள் கூறுகின்றனர். (எ-று)

(அ—கை) அங்காரக தோஷத்திற்கு விலக்குவிதி கூறப்படுகிறது.

**மூ॥ चतुस्ससमगो भौमो मेषकर्कालिनक्रगः ।**
**यदा राशौ शुभः प्रोक्तः कुजादोषो न विद्यते ॥**

(க-ரை) ஸ்த்ரீ புருஷ ஜாதகங்களில் எப்பொழுது செவ்வாய்—மேஷம், கடகம், விருச்சிகம், மகரம் ஆகிய விடங்களை யடைந்து, அந்த ஸ்தானங்கள் 4,7 மிடங்களாகவு மாகின்றனவோ அப்பொழுது அவன் சுபனெனச் சொல்லப்படுபவனே யொழிய மேற்கூறியபடி 4,7மிடங்களான மேஷம், கடகம், விருச்சிகம், மகரம், இவைகளி லங்காரகனிருப்பதன் மூலம் எவ்விததோஷமும் நேருவதில்லை. மேலும் இந்தச்சுலோகத்தில் 4,7மிடங்களான மேஷம், கடகம் விருச்சிகம், மகரம் இவைகளில் செவ்வாய் ஸ்திரீபுருஷ ஜாதகங்களுள் இன்ன ஜாதகத்திலிருந்தால் தோஷமில்லை என்று குறிப்பட்டுக் கூறுதால்ஸ்திரீ ஜாதகத்திலிருந்து புருஷ ஜாதகத்தி லில்லாவிட்

டாலும், புருஷஜாதகத்திலிருந்து ஸ்திரீ ஜாதகத்தி லில்லா விட்டாலும் இம்மாதிரியான இருஜாதகங்களையும் சேர்க்கும் விஷயத்தில் செவ்வாயின் தோஷம் கவனிக்கவேண்டுவதில்லை என்றேற்படும். (எ—று)

मू० ॥ चरराशिगतो भौमः चतुरष्टव्यये द्वये।
लग्ने पापविनाशस्स्याच्छेषे पापो विशेषतः ॥

(க—ரை) 4, 8, 12, 2, 7 இந்தவிடங்கள் சரராசிகளாக விருந்து அவ்விடங்களு ளொன்றில் செவ்வாயிருந்தால் அங் காரகதோஷமானது விலகும். மீதமுள்ள விடத்தில் அதாவது: ஸ்திரம், உபயம் இந்தராசிகள் 4, 8, 12, 2, 7 மிடங்க ளாகி அவற்று ளொன்றிலிருந்தால் விசேஷபாபியாகவே ஆவன் என்பதாம். (எ—று)

मू० ॥ स्थानपञ्चकगो दोषः कुजस्य गुरुणाऽथवा ।
बुधेन सह संस्थित्या दृष्टे वा नैव संभवेत् ॥

(க—ரை) செவ்வாய்க்கு 4, 8, 12, 2, 7 ஆகிய இவ் வைந்து ஸ்தானங்களி லிருப்பதன் மூலம் மேற்கூறிய தோஷ மானது குருவுடன் கூடவோ, புதனுடன் கூடவோ செவ் வாயிருந்தாலும், அல்லது குரு, புதன் இவர்களால் பார்க் கப்பட்டாலும் சம்பவிப்பதில்லை. (எ—று)

குறிப்பு—இந்தச் சுலோகமானது —

मू० ॥ पंचकस्थानगो दोषलग्नेन्दुगुरुसंस्थिते।
बुधे स्थिते न दोषोऽस्ति दृष्टे दोषं न चिन्तयेत् ॥

என்ற வுருவத்துடன் வேறு சில புஸ்தகங்களில் காணப் படுகின்றது. ஆயினும் இதன் பொருளை யனுஸரித்து அதற்கேற்றபடி தனியாய் நம்மால் சுலோகமமைக்கப்பட் டது.

செவ்வாய் தோஷமும், அதன் பரிஹாரமும் முற்றிற்று.

---

ஜாதகசந்திரிகை முற்றிற்று.



## ॥ जातकचन्द्रिकास्थ श्लोकानामकारादिक्रमः ॥



## கடலங்குடி பிரும்மஸ்ரீ நடேசசாஸ்திரிகள் அவர்களாலியற்றிய தமிழுரையுடன் கூடிய சோதிட புஸ்தகங்கள்

# பிருஹத் ஜாதகம்

இதையே ஹோரை என்றும் வராஹ ஹோரை என்றும் சொல்லுவர். இதற்குப் பல வியாக்யானங்களுக்கிணங்கவும், நமது சொந்தமான பல அனுபவங்களுக் கிணங்கவும் சுலபமான தமிழ் நடையில் பதவுரை, கருத்துரை, விசேஷவுரை இவைகளை எழுதி தேவநாகரலிபியில் மூலத்துடன் வெளியிட் டிருக்கிறோம். யாவராலும் மிக்க கடினம் எனக் கருதப்படும் ஆயுர்த்தாயம், தசாந்தர்த்தசை, நஷ்ட ஜாதகம் முதலிய பாகங்கள் யாவருக்கும் புரியக்கூடிய நிலையில் மிக்க விரிவாக எழுதப்பட் டிருக்கின்றன. உதாஹரணமாய் பல அனுபவ ஜாதகங்களும், கட்டங்களும் ஆங்காங்கு கொடுக்கப்பட் டிருக்கின்றன. கர்க்கர், பராசரர், சத்தியாரியர், யவனேசுவரர் முதலியோரின் கிரந்தங்களினின்றும், ஸாராவளியினின்றும் அந்தந்த விடத்திற்குத் தேவையான வசனங்களை எடுத்து எழுதி தமிழில் உரையுமெழுதப்பட் டிருக்கிறது. இதன் முகவுரையில் சோதிட சாஸ்திரம் ஸம்பத்தக்கதல்ல என்றது முதலிய வாதங்களுக்குத் தக்க சமாதானமும், வராஹமிஹிரரின் கால நிர்ணயமும் செய்யப்பட் டிருக்கிறது. ஒவ்வொரு மனிதனும் தனது எதிர்கால நிலையையறிந்து கொள்வது அவச்யமாதலால் சோதிடத்தை யப்யசிக்க விருப்பமுள்ளோரும், பல சாஸ்திரத்திற் பழகுகின்றவர்களும் இப் புஸ்தகத்தைப் படிப்பது மிகவுமவசியம். புஸ்தகம் டிம்மி எட்டு பக்க அளவில் சுமார் 750 பக்கங்களுள்ளது. கிலிட்டு எழுத்துடன் உயர்ந்த காலிகோ பைண்டு செய்தது.

கிளேஸ், ரூ. 8 ரப். ரூ. 7

# கோசரபல நிர்ணயம்

தமிழ் மொழிபெயர்ப்பு

ஸ்ரீவராஹமிஹிராசாரியரால் செய்யப்பட்ட பிருஹத் ஸம்ஹிதை என்ற கிரந்தத்தில் கோசரபலாத்யாம் என்றொரு அத்யாயமடங்கி இருக்கின்றது. அவ்வத்யா யத்தையே கோசரபல நிர்ணயம் என்ற தலையங்கத்தின் கீழ் தேவநாகர லிபியில் மூலத்துடனும், தமிழில் பதவுரை, கருத்துரை களுடனும், வெளியிட்டிருக்கிறோம். இதில் கோசர பலன் பார்க்கவேண்டிய முறைகள் விரிவாய் கூறப்பட்டிருக்கின் றன. யவனேசுவரர், சத்தியாசாரியர் கர்க்கர் முதலிய மஹான்களால் செய்யப்பட்ட சோதிட சாஸ்திரகளினின் றும் அந்தந்த விடங்களுக்குத் தேவையான வசனங்களை எடுத்து எழுதி உரையும் செய்யப்பட்டிருக்கிறது.

தசாபுக்திபலன்களும், கோசரபலன்களும் சிலவிடங்க ளில் மாறி நடப்பதற்குரிய காரணங்களும், கோசரபலன், தசாபுக்திபலன் இவற்றை எவ்விதம் கவனித்தால் அனு பவத்தில் அது ஒத்து வரக்கூடும் என்பதும்பல திருஷ்டாந் தங்கள் வாயிலாக விரித்துக் கூறப்பட் டிருக்கின்றன. மேலும் உத்திரட்டாதி நக்ஷத்திரம் மீனலக்கினத்திற் பிறந்த ஜாதகனுக்கு கோசரபலன் பார்க்கும் முறையை அனுபவத்திற்கு ஒத்தவாறு விரித்துக் கூறப்பட்டிருப்ப தைக் கொண்டு எந்த நக்ஷத்திர எந்த ஜாதகத்திற்கும் கோசரபலன் தெளிவாய் தெரிந்து கொள்ளக் கூடும் என் பதை நாம் அதிகம் சொல்ல வேண்டுவதில்லை. வியாபாரி களோ, உத்தியோகஸ்தர்களோ, ஜாதி குலத்திற்குத்தக்க வாறு வெவ்வேறு தொழில் செய்பவரோ, எவரேனும் ஸரி இப்புஸ்தக மொன்றின் உதவியைக்கொண்டு அவ்வப் பொழுது தத்தமக்கு நிகழும் பலன்களைத் தெளிவாய் அறி ந்து கொள்ளக்கூடும் என்பதில் யாதும் ஐயமில்லை.

விலை அணா 12.

**விலாசம். கடலங்குடி நடேசசாஸ்திரிகள்**

72. பெரிய தெருவு, திருவல்லிக்கேணி சென்னை.